# அக்கினி

## அத்தியாயம் 1

**ஸ**ர்க்குலர் ரோட்டில் இருக்கும் ஸமாதி பூமியை விட்டு வெளியே வந்ததும் சந்திரநாதனைப் பற்றிப் பழைய நினைவுகள் என் மனத்திடைச் சுழல, நான் வீட்டை அடைந்தேன். எத்தனையோ நினைவுகள் என் மனக் கண்முன் வந்து நின்றன. சந்திரநாதன் என் வாழ்நாளின் பெரும் பகுதியில் விண்ணிடை நள்ளிரவில் ஸஞ்சரிக்கும் ‘காலபுருஷ்’ நக்ஷத்திரத்தைப் போன்று ஒளியிலும் மேன்மையிலும் நிகரற்று விளங்கினான். ‘கால புருஷ்’ நக்ஷத்திரத்தோடு அவனை உவமிப்பதில் எனக்கு ஓர் ஆனந்தம். அந்த ஒளி படைத்த தாரகையின் வாளேந்திய பயங்கரத் தோற்றத்திற்கும் சந்திரநாதனுடைய உருவத்திற்கும் ஓர் ஒற்றுமை உண்டு. அவனும் அந்த வான்மீனைப்போல வாழ்க்கை என்னும் வெளியில் தனிச் சிறப்புடன் உலவி வந்தான். ஒரு நாளாவது அவன் தயங்கிப் பின்வாங்கியதில்லை; சற்றாவது சோம்பி அவன் ஓய்வு எடுத்ததாகத் தெரியவில்லை. எந்த லக்ஷ்யத்தை நாடி அவன் வெறிகொண்டு பின் தொடர்ந்தானோ அது இன்றளவும் அவன் கைக்கு எட்டவில்லை. இன்னும் எல்லையற்ற அவ்வாசையின் வழியே சென்று கொண்டிருக்கிறான்!

அவனைப்பற்றி நினைக்கும் போதெல்லாம் மற்றொருவனுடைய ஞாபகமும் கூடவே வருகிறது—ஹீருவின் ஞாபகந்தான்.

சந்திரநாதனும் ஹீருவும் நானும் ஒரே பள்ளிக்கூடத்தில் ஒன்றாகச் சேர்ந்து படித்தவர்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் வேறொருவரைப் பற்றிய ஞாபகமும் முளைக்கிறது. அவர் சந்திரநாதனின் தமையனார் நிசாநாத பாபு. இம் மூவரும் ஏக காலத்தில் ஒரு சிறு கிராமத்தில் எவ்வாறு தோன்றினர் என்பதைக் கூற என்னால் இயலாது. இதைக் குறித்து நான் ஆச்சரியப்படுவதென்னவோ உண்மை. எரிமலையின் வயிற்றினுள் நம் கற்பனைக்கு எட்டாத பிரளயக்கனலில் உருகும் பொருள்கள் எவ்வாறு ஒன்றாகச் சேர்ந்துள்ளன? அதே போன்றது இவர்களது விந்தையான சேர்க்கையும்.

*    *    *    *

வீட்டில் எவரும் இல்லை. மேஜையின்மேல் விளக்கு, சுடர் அசையாமல் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஒளி நிரம்பிய அறையின் தனிமையில், சந்திரநாதன், ஹீரு, நிசாநாத பாபு இவர்களைப்பற்றிய சிந்தனையே எனக்கு. எதிரே சுவரில் தொங்கும் பெரிய கண்ணாடியில் என்னுடைய பிரதிபிம்பம் என்னையே சிந்தையில் ஆழ்ந்த கண்களுடன் நோக்கிக்கொண்டிருந்தது. அது வெறும் சாயையேயானாலும் என் நினைவின் நடுவே குறுக்கிட்டு அது என்னைக் கவர்ந்தது.

விளக்கை அணைத்து விட்டேன். அறை முழுவதும் இருள் சூழ்ந்து கொண்டது. மிகவும் தொன்மையானது இவ்விருள். ஒரு காலத்தில் எனக்கு ஒளிமயமாக இருந்த அவ்வுலகு மங்கி இன்று இருட்கடலில் மூழ்கி மறைந்து

கிடக்கிறது. அந்நாளின் ஒளியை மீண்டும் காண்பது அரிதே. இவ்விருளில் அதைத் தேடி அலைந்தேன். எனக்குக் கிடைத்தது அதன் காட்சி. அந்தகாரத் திரை முன்பு தெளிவாகச் சந்திரநாதனின் இளவயது வடிவம் வந்து நின்றது. நெடிய ஆக்ருதியும், அதற்கேற்ற திடமான சரீரமும், ஸாஹஸம் தெறிக்கும் பார்வையும் உடைய ஓர் இளைஞன். விசாலமான விழிகள், பரந்த நெற்றிக்கட்டு; அதன் மத்தியில் திரிசூலம்போல் எழும்பிய நரம்புக்கிளை. இளமைப்பருவத்திலும் அத்திரிசூல ரேகை அவன் லலாடத்தில் நன்ருகப் புலப்பட்டது. நாசியும் நெற்றியும் கூடும் இடத்திற்குமேல் அது பளிச்சென விளங்கியது. அவன் உணர்ச்சியினுல் பரபரப்புக் கொள்ளும் பொழுது முகத்தில் ரத்தம் பரவி அந்த நரம்புக்கிளை தடித்துத் தோன்றும்.

அவனுடைய கவனம் வரும்போதெல்லாம் எங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்துத் தலைமை உபாத்தியாயரின் நினைவும் வருகிறது; மெலிந்த உடலும் சாந்தமான முகபாவமும் உடைய ஸாதுவான மனுஷ்யர் அவர். பள்ளிக்கூட ஹாலின் ஒருபுறமாக நாற்காலியில் அவர் வீற்றிருப்பது போல் இன்னும் எனக்குத் தோன்றுகிறது. எங்கோ மனம் லயித்தவராய் என்னை நோக்கி, "நஜு, போய் ஒரு தரம் சந்திரநாதன் இதற்கு என்ன சொல்கிருன் என்பதைத் தெரிந்துகொண்டு வா" என்கிருர்.

கட்டிற்கு அடங்காத சந்திரநாதன் மூட்டிய கிளர்ச்சியினுல் பள்ளிக்கூடத்தின் அமைதி சீர்குலைந்தது. அன்று பரிசு வழங்கும் விழா. சந்திரநாதன் தனக்கெனப் பள்ளிக்கூட அதிகாரிகள் தர இருக்கும் பரிசை நிராகரித்துக் கடிதம் ஒன்று எழுதிவிட்டான். இரண்டாவது பரிசை

அவன் பெற விரும்பவில்லை. அன்றளவும் அவன் எந்தப் பரீக்ஷையிலும் முதன்மை ஸ்தானத்திலேயே வந்திருக்கிறுன். சந்திரநாதனின் பிடிவாதத்தை மாற்றுவது முடியாத காரியமாணுலும் தலைமை உபாத்தியாயருடைய பேச்சைத் தட்ட என்னுல் இயலவில்லை. 'மெட்றிகுலேஷன்' பரீக்ஷைக்குப் பிறகு பள்ளிக்கூடத்துக்கும் எனக்கும் உள்ள தொடர்பு அற்றுப் போய்விட்டது. ஆனுல் என்னுடைய அன்பிற்கு உகந்தவரான அப்பெரியாரைத் தடுத்துக் கூற எனக்கு இஷ்டமில்லை. அப்படிச் செய்வதும் என் ஸ்வபாவத்திற்கு விரோதமானது. மறந்து போன பழைய விஷயங்கள் ஒவ்வொன்றுக என் ஞாபகத்தில் இப்பொழுது நிகழ்வனபோலவே தோன்றுவது ஸஹஜம். பின், ஏன் நேரடியான நிகழ்காலத்திலும், பல வருஷங்களாக மறைந்திருந்த தலைமை உபாத்தியாயர் ஒவ்வொரு ஸமயம் என் அக்கண்முன் உருவெடுத்துப் பழைய மாணுக்கன் என்ற முறையில் என்னை மிரட்டவேண்டும்? நான் ஏன் அதற்குப் பயப்படவேண்டும்? சில ஸமயம் சிரித்த முகத்துடன் தோன்றி என்னை உத்ஸாஹப்படுத்துகிருர். அப்பொழுது மனத்துள் எனக்கு ஒரு விதமான திடம் உண்டாகிறது. போகட்டும்; இந்நிகழ்காலத்தை மங்கலாகத் தோற்றும் வருங்காலத்தோடு சேர்த்துவிடவேண்டும். மனத்தைப் பீறிக்கொண்டு சென்றவை யாவும் இப்பொழுது நடப்பவைபோல் இந்த ஏகாந்தத்தில் இருளினின்று என்முன் ஒளிக்கு வரட்டும்.

*　　*　　*　　*

சந்திரநாதனிடம் சென்றேன். வறுமையில் உழலும் அவன், விளக்கு மங்கி எரியும் ஓர் அறையில் ஒருமித்த மனத்தோடு ஏதோ எழுதிக் கொண்டிருந்தான். அவனே

அணுகி நின்றேன். அவன் எழுதுவதில் கவனமாயிருந் தானேதவிர என்னைக் கவனிக்கவேயில்லை. அப்படி இருப் பது அவனுடைய இயல்பும் அன்று. நான் அவன் பக்கத்தில் அமர்ந்தேன். அவன் என்னை "வா" என்று சொல்வதற்காக நான் காத்திருக்கவில்லை. "என்ன எழுது கிறாய்?" என்று நானே முதலில் பேச ஆரம்பித்தேன்.

எழுதுவதை நிறுத்தாமலே சந்திரநாதன், "யூனிவர் ஸிடிப் பரீக்ஷையின் முடிவை எழுதிக்கொண்டிருக்கிறேன்; யார் யார் தேறுவார்கள், எந்த வகுப்பில் என்பவற்றைத் தான்" என்று பதிலளித்தான்.

அவன் சொன்னது எனக்கு வியப்பாகவே இருந் தது. சந்திரநாதன் மேலும் ஏதோ எழுதி ஒரு காகிதக் குறிப்பை என்னிடம் கொடுத்து, "பார் இதை" என்றான்.

அக்குறிப்பில் அடங்கிய விஷயத்தை ஒருதரம் ஊடுருவிப் பார்த்தேன். சந்திரநாதன் அப்பொழுது, "எனக்கு ஐந்நூறுக்குமேல் 'மார்க்கு' வந்தால் பின்வரு மாறு முடிவு வெளிவரும். இரண்டு பேர் தேறமாட் டார்கள்: அமியனும் சியாமாவும். மற்றவர்கள் தேறி விடு வார்கள். நான் சொன்ன கணக்குப்படி 'மார்க்கு' எனக்கு வராத பக்ஷத்தில் அப்பொழுது பத்துப்பேர் தேறமாட் டார்கள். நீ மூன்றாவது பிரிவில் தேறித் தப்பித்துக் கொள் வாய்" என்றான்.

இவ்வாறு அவன் கூறியதைக் கேட்டு எனக்கு அன்று அவன்மீது எரிச்சல் மூண்டது. அவனுடைய ஜம்பமெல்லாம் அழிய வேண்டுமென்று நான் மனமாறக் கோரியது இன்றும் என் ஞாபகத்தில் இருக்கிறது.

சந்திரநாதன் சிரித்தவண்ணம், "என்மேல் கோபமா உனக்கு? எவ்வளவு தாராளமாய் விட்டுப் பார்த்தாலும்

நான் போட்ட கணக்குமட்டும் பிசகாது. ஒருவனுடைய மதிப்புக் குறைந்தால் படிப்படியாக எல்லோருடைய மதிப்பும் குறைய வேண்டியதுதானே? இது அல்லவோ கணித சாஸ்திரத்தின் மூல உண்மை!'' என்றான்.

நான் தலைமை உபாத்தியாயர் சொன்னதைப்பற்றி அவனிடம் வாயெடுக்கலாமென்று எண்ணியும் அது முடியாமற் போயிற்று. அச் சமயம் சந்திரநாதனின் தமையனார் கடிதம் ஒன்றைக் கையில் எடுத்துக்கொண்டு அறையினுள் பிரவேசித்தார். அதைச் சந்திரநாதனிடம் கொடுத்து, "இதென்ன?'' என்றார்.

கடிதத்தின் மேல் கண்ணைச் செலுத்தியதும் சந்திர நாதன் சிறிதேனும் அச்சமோ தயக்கமோ இராமல், "நான் இரண்டாவது பரிசைப் பெற்றுக்கொள்ள மாட்டேன், அண்ணா'' என்றான்.

"என்ன காரணம்?''

"காரணமா?''—சந்திரநாதனின் நெற்றியில் உள்ள முக்கிளையான நரம்பு தடித்தது.

அவன் கணநேரம் யோசித்துவிட்டு, "காரணம், இரண்டாவது பரிசை ஏற்றுக்கொள்வது எனக்குக் கௌரவக்குறைவு என்றே கருதுகிறேன்'' என்றான்.

கோபாவேசத்தினால் சந்திரநாதனின் தமையனார் துடித்துக்கொண்டிருந்தார். அதை ஒருவாறு அடக்கிக் கொண்டு, "இப்படிச் சொல்ல உனக்கு வெட்கமாக இல்லை யாடா? கௌரவம்!—இதையா கௌரவம் என்கிறாய்? உனக்கு யோக்கியதை இராமற்போனால்—!'' என்ப தற்குள் அவருடைய பேச்சைப் பாதியில் தடுத்துச் சந்திர நாதன், "உனக்கொன்றும் தெரியாது'' என்றான்.

"எது தெரியாது? தெரிந்து கொள்ள வேண்டிய தற்கு இன்னும் என்ன இருக்கிறது?"

"பள்ளிக்கூடத்து ஸெக்ரிடரியின் தம்பி மகன் முதல் வகுப்பில் தேறுவதற்கென்ன!—அதுவும் என்னுடைய உதவியின்பேரில்தான். அதோடு பள்ளிக்கூட அஸிஸ்டெண்டு வாத்தியார் அவனுக்கு 'டியூஷன்' சொல்லிக்கொடுக்கிறவர். நான் எதைச் சொல்வது? கேள்விகளை அவனுக்கு எட்டவிட்டு விட்டார்."

சந்திரநாதனின் தமையனுருக்கு வாயிலிருந்து வார்த்தை கிளம்பவேயில்லை. அவர் நல்ல மனுஷ்யர். எவர்பேரிலும் விரோதமோ துவேஷமோ கொள்ளாத குணம் படைத்தவர். அவர் திடுக்குற்றுச் சந்திரநாதனுடைய முகத்தையே நோக்கினுர்.

"கணக்குப் பரீக்ஷையின்போது அவன் என்னைக் கெஞ்சிக் கேட்டதன் பேரில் மூன்று கணக்கு அவனுக்குக் 'காப்பி' அடிக்கக் கொடுத்தேன். முன்னதாகவே வாத்தியார் அவனுக்கு விடைகளைச் சொல்லி வைத்திருந்தாலும் அந்த ஸமயத்தில் அவனுக்கு எல்லாம் மறந்துபோய் விட்டன. இங்கிலீஷிலும் வங்காளியிலும் அவன் முதலாக வந்ததில் ஓர் அதிசயமும் இல்லை. வாத்தியார்கள் எந்த அக்கிரமங்களை வேண்டுமானுலும் செய்து விடுவார்கள்! நன்ருக எழுதியவர்களுடைய 'பேப்பர்'களைப் பாரபக்ஷமின்றிப் பரிசீலனை செய்ய அவர்கள் யோக்கியதையற்றவர்களே."

"அதாவது, வாத்தியார்களைக் காட்டிலும் நீ ரொம்ப மேதாவியாக்கும்! அவர்கள் உன்னுடைய விடைகளைப் பரிசீலனை செய்ய லாயக்கற்றவர்கள் போல் இருக்கிறது!"

"இருக்கலாம். இன்னும் ஒன்று சொல்லிவிடுகிறேன்: எவனுக்கும் ஒரு படி கீழாக என்னால் இருக்கமுடியாது. அவன் பணக்காரனுடைய பிள்ளையாய் இருக்கலாம். வாத்தியாருடைய பரமானந்த சிஷ்யனாகவும் இருக்கலாம். ஆனால் எனக்கு இருக்கும் யோக்கியதை அவனுக்குத் துளிக்கூட இல்லை. எனக்கு எவ்வளவோ தாழ்ந்தவன் அவன்."

முகத்தில் சிந்தனையின் சாயை படர, குரல் ஆழ்ந்து தொனிக்க, சந்திரநாதனுடைய தமையனார், "உன்னோடு வாதாடுவதில் பயனில்லை. ஹெட்மாஸ்டருக்கு மன்னிப்புக் கடிதம் எழுதப் போகிறாயா இல்லையா?" என்றார்.

"முடியாது" என்றான் சந்திரநாதன்.

கடுமையான குரலில், "எழுதித்தான் ஆகவேண்டும்" என்றார் அவர்.

"மாட்டேன்."

"மாட்டேனென்கிறாயா?" — இதை உரைக்கும் போது நிசாநாத பாபு வெகுளிக்கு ஆளானார்.

"ஆமாம்; முடியாது."

"செய்யப் போகிறாயா இல்லையா?" அவருடைய குரலில் கரகரப்பும் நடுக்கமும் ஒலித்தன.

"மாட்டேன்."

சிறிதுநேரம் மௌனமாக இருந்து விட்டு நிசாநாத பாபு, "உன் மதனி சொன்னது இப்பொழுது வாஸ்தவமென்று தெரிகிறது. நீ உன் இஷ்டப்படி ஆட ஆரம்பித்து விட்டாய்! நல்லது; இன்று முதற்கொண்டு உனக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் அறுந்து விட்டது" என்றார்.

சற்றேனும் திடுக்குறாமல் தயக்கமின்றிச் சந்திரநாத னும், "ரொம்ப சரி" என்றான்.

நிசாநாத பாபு தலையிறக்கத்துடன் பேசச் சக்தியற் றவராய் நின்றிருந்தார். உண்மையில் தம்பியிடமிருந்து இவ்வாறான மறுமாற்றத்தை அவர் எதிர்பார்க்கவில்லை. பதறாமல், அமைதியுடன் தம்பி உரைத்ததைக் கேட்டு உதட்டைப் பற்களால் கடித்துக்கொண்டார். அவரது பார்வையில் சோகமும் குரோதமும் அபூர்வமாகக் கலந்து தென்பட்டன.

உள்ளத்தை அசைக்கும் அம்மாதிரியான ஒரு கண் ணோக்கை நான் என் வாழ்நாளில் பார்த்ததே இல்லை. அந்தக் காட்சி இப்போது நடப்பது போலவே என் கண் களுக்குத் தெரிகின்றது. இந்த மையிருள் நடுவே அதோ தோன்றுகிறார் அவர். அறையின் சாளர மூலமாகத் தென் படும் ஒரு பசுமையான மரத்தின்மீது அவரது விழியின் நாட்டம் நிலைக்கிறது. காக்கைகளின் கலவரமான கூச்சல் அங்கே கேட்கிறது. அவரை அந்நிலையில் பார்த்தபோது எனக்கு ஸஹிக்க முடியாத வேதனை மூண்டது. இன்றும் இவ்விருளில் கண்களை மூடிக்கொள்ளும் போதெல்லாம் திரும்பவும் அந்த வேதனை முகம் என்முன் வந்து நிற்கிறது.

அறையை விட்டு அவர் மெதுவாக வெளியே சென் றார். நானும் எழுந்துபோவதற்கு யத்தனம் செய்து, "சந்திரநாதா, நான் போய் வருகிறேன்" என்றேன்.

ஒருவித மாறுதலும் இராத தனக்கு இயல்பான கம்பீரத் தொனியில், "சரி" என்று தலையசைத்தான் அவன்.

அவனது வீட்டினின்று வெளியேறியதும் அக்கம் பக்கத்தில் சற்றுத் தயங்கி, நிசாநாத பாபு இருக்கிறாரா

என்று தேடிப் பார்த்தேன். ஆனால் அவரைக் காணவில்லை. நிசாநாத பாபுவின் மனைவி சமையற்கட்டில் அடுப்பங் கரையில் சமைத்துக்கொண்டே தனக்குத் தானே பிதற்றிக் கொண்டிருந்தாள் :

"இந்தமாதிரி ஒரு புண்ணிய புருஷர் தேடினால்கூடக் கிடைக்கமாட்டார். கோபம் வந்தால் உடனே ஜபத்தில் உட்கார்ந்து விடுகிறார்; மனத்துள் ஏதாவது வேதனை மூண்டாலும் அதே ஜபம்; நல்ல ஸமாசாரத்தைக் கேட் டாலும் ஜபத்தில் லயித்துவிடுகிறார்! இப்பேர்ப்பட்ட ஸாத்விக ஆத்மா ஏனோ இந்தப் பாழும் பிரபஞ்சத்தில் வந்து சிக்கிக்கொள்ளவேண்டும்? காட்டிலோ மலையிலோ 'ஹாய்' ஆகத் தபஸில் இறங்கிவிடலாமே, ரிஷீசுவரர் களைப்போல."

கடைசியில் நிசாநாதபாபு ஜபத்தில் உட்கார்ந்து விட் டாரென்று எனக்குத் தெரியவந்தது. அவரோ ஒரு விசித் திரமான பேர்வழி. கர்மானுஷ்டானங்களில் அளவற்ற பற்றுதல் உடையவர். சினம், துக்கம், இன்பம் இவ் வாறான அனுபவங்கள் ஏற்படும்போது அவர் பூஜாக் கிருஹத்தில் நிஷ்டையில் வீற்றிருப்பதைக் காணலாம்.

மனத்துள்ளேயே அவரை வணங்கிவிட்டு அவரது வீட்டினின்று வெளியே சென்றேன். தலைமை உபாத்தி யாயருக்கு ஸமாசாரத்தை எட்டவிட அவர் வீட்டிற்குப் போன ஸமயத்தில், அவர் சிந்தனையில் ஆழ்ந்திருப்பதைக் கண்டேன். என்னைப் பார்த்த மாத்திரத்தில் அவர், "என்ன நரூ, அவன் ஏதாவது சொன்னானா?" என்று கேட்டார்.

நான் அவரிடம் எதையும் ஒளியாமல் கூறிவிட்டேன். அவர் தம் கையில் ஹுக்காவைப் பிடித்தபடியே பேச்

சற்று நிலைத்துவிட்டார். சட்டென, "கெஷ்டா, கெஷ்டா!" என்று கூப்பிட்டார்.

கிஷ்டன் பள்ளிக்கூடத்துப் பியூன். அவன் வந்து நின்றான். "அடே! குழாயில் நெருப்பை நன்றாக ஊதி விட்டுப் புகையிலைத் தூளைக் கொஞ்சம் தூவு" என்று ஆக்ஞாபித்தார்.

"இதோ ஸார்" என்றதும் 'உப்' என்று நெருப்பை ஊதிப் புகையிலைத் தூளைக் குழாயில் போட்டான் அவன்.

அதன் தீவிர கந்தம் அவ்வறை முழுவதும் நிரம்பியது. தூமபானத்தின்மேல் கிழவருக்கு அதிக சபலம். கிஷ்டனிடமிருந்து ஹுக்காவை வாங்கிக்கொண்டு ஸாவதானமாகப் புகை இழுத்துக்கொண்டே, "நானே போய்ப் பார்க்கிறேன் அவனை. நரேச், உன் அபிப்பிராயம் என்ன? சந்திரநாதனைக் காண்பதில் தவறு ஒன்றும் இல்லையே? ஓர் அற்பக் காரணத்திற்காகவா அண்ணனும் தம்பியும் பிரிந்துவிடுவது? சே!" என்றார்.

"இல்லை, ஸார். நீங்கள் போகவேண்டாம். அப்படி உங்கள் வார்த்தையை அவன் எடுத்துக்கொள்ளாமற் போனால் என்ன செய்வது?" என்றேன்.

"என் வார்த்தையைக் கேட்க மாட்டானா, ஆனால்? என்னை மதிக்க மாட்டானா?"—இவ்வாறு சொல்லும் பொழுது அவருடைய குரலில் ஒரு விதமான பரபரப்புத் தோன்றியது. நான் பதிலே சொல்லாமல் சும்மா இருந்து விட்டேன்.

சற்றுப் பொறுத்து அவர், "என் மேல்தான் தவறு யாவும். சந்திரநாதனுடைய தமையனுக்கு இவற்றையெல்லாம் நான் எட்டவிட்டிருக்கக் கூடாது. சே!" என்றார்.

நான் அவ்விடத்தை விட்டு எழுந்துபோகையில் என்னைத் திரும்பவும் அழைத்து, "ஆனால் நான் அவனைப் போய்ப் பார்ப்பதில் சுகமில்லை யென்று சொல்கிறாய்? சந்திரநாதன் என் பேச்சைக்கூடவா கேட்கமாட்டான்?" என்றார்.

நான் மௌனமாய்ச் சிறிது நேரம் நின்றேன்; அப் புறம் மெதுவாக அவ்விடத்தை விட்டு நழுவினேன். இரண்டொரு தினத்திற்குப் பிறகு வாஸ்தவமாகவே சந்திரநாதன் தன் அண்ணனிடமிருந்து விலகி வேறாகி விட்டானென்று கேள்விப்பட்டேன்.

சந்திரநாதனை நான் சந்தித்த பொழுது அவன், "வேறாகிவிட்டதன் அர்த்தமென்ன? சொத்து, கித்து ஒன் றும் இல்லை; இருக்கிறதெல்லாம் அந்த ஒரு வீடும், இரண்டொரு காணி நிலமுமே; பாத்திரம் பண்டமும் கொஞ்சம். எல்லாம் பாகமாகி விட்டன. இனிமேல் நான் என் ஸாமர்த்தியத்தைக் கொண்டு ஜீவனோபாயம் தேட வேண்டும். அவ்வாறு இருப்பது நலமெனக் கருது கிறேன்" என்றான்.

நான் இவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டு நின்றிருந் தேன். அன்று என்னவோ சந்திரநாதனுடன் உறவு வைத் துக் கொள்ளக்கூடாதென்று ஓர் அசட்டு எண்ணம் உதித் தது. மனத்துள் அந்தச் சங்கற்பத்தைப் போஷித்து வந்தேன்.

சந்திரநாதன் சிரித்துவிட்டு, "ஹீரு வந்திருந்தான், இன்றைக்கு. அவன் சிற்றப்பா எனக்காக ஒரு தனிப் பரிசு தர உத்தேசித்திருக்கிறாரென்று சொன்னான். ஹீரு பரீக்ஷையில் தேறிவிட்டான். அவன் எங்கள் பள்ளிக்கூட

ஸெக்ரிடரியின் தம்பி பிள்ளை அல்லவா!" என்றான் ஏளனமாக.

"அதற்கு நீ என்னடா சொன்னாய்?" என்று அவனைக் கேட்டேன்.

"அவனுடைய சிற்றப்பாவுக்கு என் மனமார்ந்த வந்தனத்தைத் தெரிவிக்கும்படி சொல்லி அந்தப் பரிசை நான் பெற்றுக்கொள்ள முடியாததைப்பற்றி மிகவும் வருந்துவதாகவும் தெரிவித்தேன். அதை வாங்கிக்கொண்டால் அதைவிட ஈனமான காரியம் வேறொன்றும் இல்லை" என்றான்.

சந்திரநாதனுடைய முகத்தையே கவனித்தேன்.

"ஹெட்மாஸ்டர் என்னைப் பார்க்க வேண்டுமென்று ஓர் ஆளை ஏவினார். அவருக்குப் பதில் தந்துவிட்டேன். குருவுக்குத் தக்ஷிணை கொடுக்கும் காலம் மலையேறிவிட்டது. பள்ளிக்கூடத்துக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் அற்றுவிட்டது. இனிமேல் எனக்கு அந்த இடத்தில் என்ன ஜோலி?"

அதே ஸமயம் நானும் அவ்விடத்தை விட்டுச் செல்ல எழுந்திருந்தேன்.

## அத்தியாயம் 2

இது நடந்தபிறகு நான் என் மாமாவிடம் விடு முறை நாட்களைக் கழிக்கப் போயிருந்தேன். பரீக்ஷையின் முடிவு வெளியாகியதும், ஹீரு கல்கத்தாவிலிருந்து எனக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தான். அதைப் படித்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது: சந்திரநாதனுடைய ஹேஷ்யம் ஓர் எழுத்து விடாமல் பலித்துவிட்டதே என்று தான். எல்லா விஷயமும் ஹீரு தன் கடிதத்தில் தெளிவாக அறிவித்திருந்தான். பரீக்ஷயில் தேறினவர்கள் பத்துப் பேர்; நான் மூன்றும் வகுப்பில் ஒரு விதமாகக் கரை ஏறி விட்டேன். சந்திரநாதனுக்கு மார்க்கு ஐந்நூறுக்குமேல் கிடைக்கவில்லை. ஒன்றுமட்டும் அவன் சொன்னபடி நிக ழாது நின்றுவிட்டது. ஹீரு சந்திரநாதனுக்கு முன்னல் போய்விட்டான்.

ஸ்காலர்ஷிப் தனக்குக் கிடைக்குமென்று ஹீரு குறிப் பிட்டிருந்தான். எனக்கு என்னவோ இந்தச் செய்தி உள் ளூற வருத்தத்தையே தந்தது. உண்மையைச் சொல்லப் போனல் சந்திரநாதன் எங்கே, ஹீரு எங்கே? சந்திரநாத னுக்கு உள்ள ஆற்றலைப் பற்றி எனக்கு எள்ளளவும் சந் தேகமில்லை. அன்று சாயந்திரமே ஐந்து மணி வண்டிக்கு மாமாவின் வீட்டிலிருந்து புறப்பட்டேன். ஊருக்குவந்து ஹீருவை நான் சந்தித்தபோது ஒரு விருந்துக்கு அவன் என்னை அழைத்தான். அவன் முதலில் தேறியதன் பொருட்டுத்தான் அந்த விருந்து.

ஊருக்கு வந்ததும் முதலில் சந்திரநாதனுடைய வீட்டிற்கே சென்றேன். வீடு காலியாயிருந்தது; ஒருவரையும் காணவில்லை. சாளரங்கள் யாவும் மூடப்பட்டு இருந்தன. வாயிற் கதவில் மட்டரகமான பூட்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

சொற்ப தினங்களுக்கு முன்புதான் வீட்டை இரண்டு பாகமாகச் செய்து குறுக்கே சுவரும் போடப் பட்டது. மேல் பகுதியில் நிசாநாதபாபுவின் குழந்தை எதுவோ அழும் சப்தம் கேட்டது. யாரோ பித்தளைப் பாத்திரத்தைக் 'கராங், கராங்' என்று முரட்டுத்தனமாய் எதனாலோ தேய்த்துக்கொண்டிருந்தார்கள். ஊன்றி அதையே கவனித்துவிட்டு நிசாநாத பாபுவின் வீட்டினுள் நுழைந்தேன். உட்புறம் முற்றத்தில் அவருடைய மனைவி சிட்டக் கல்லால் கரி ஏறிய ஒரு தவலையை வெளுக்கத் தேய்த்துக்கொண்டிருந்தாள். என்னைப் பார்த்ததும் அவள், "வாடாப்பா நரூ, உன் ஸ்நேஹிதன் போய்விட்டான்; உன்னைக் காண்பதே அரிதாகிவிட்டது" என்றாள்.

வியப்புற்று நான், "போய்விட்டானா? யார், சந்திர நாதனா? எங்கே?" என்றேன்.

"எனக்கு என்ன தெரியும், அப்பா? அவன் குணமே தனிப் போக்குடையது. வீடு வாசல், நிலம் நீர் எல்லா வற்றையும் விற்றுவிட்டான். இன்று மத்தியான்னந்தான் போய்விட்டான். எல்லாரும் அவனைத் தடுத்து, 'ரொம்ப அழகடா!' என்று புத்தி புகட்டியும் அவன் கேட்க வில்லை. உலகம் விசாலமானது; தானே கஷ்டப்பட்டு ஒருவன் முன்னுக்கு வரவேண்டும் என்று இருக்குமோ இல்லையோ அவனுக்கும்? ஆமாம்; ஏராளமாய்ச் சம்பாதித்து அவன் மாடமாளிகை கட்டவும் கட்டலாம்! அவ

னுடைய அருமந்த அண்ணு இருக்கிருரே, அவரைக் கேள்: மீதியைச் சொல்லுவார்" என்றதும் பாத்திரத்தின் மீது பின்னும் வேகமாக ஓசை எழும்படி கல்லைக்கொண்டு தேய்க்கலானுள்.

துலக்குவதை நிறுத்திவிட்டு மீண்டும் அவள், "என் அதிருஷ்டத்தை நான் என்னவென்று சொல்லுவேன்! என் முன்னேர் செய்த பூஜையின் பலனுக்கும் நான் இந்த நிலைக்கு வந்திருக்கிறேன்! சந்திரநாதன் போனுல்தான் என்ன? அவர் பாட்டுக்கு ஜபம் செய்ய உட்கார்ந்துவிட்டார். இன்னும் எழுந்திருக்கவே இல்லையடா! வீடு என்ன கதி ஆவது?" என்ருள்.

நிசாநாத பாபு ஜபத்தில் அமர்ந்து விட்டார். தியானத்தில் ஆழ்ந்த அவருடைய முகத்தை ஒரு தரமாவது காணவேண்டுமென்று எனக்குப் பேராவல். எனக்குமட்டும் தெய்விகக்கண் இருந்தால் அவரது அந்தரங்கத்துள் இருப்பது கடவுளா அல்லது சந்திரநாதனு என்பது தெரிந்துவிடும்.

அவருடைய மனைவி பேச்சைத் தொடர்ந்தாள்; "கொஞ்சநாளாகவே அவருடைய வார்த்தைகளில் பெரிய மாறுதல் தென்படுகிறது, அப்பா நரூ; அவர் என்ன சொன்னுர் தெரியுமோ? கடைசியில் எல்லா அனர்த்தமும் இந்தப் பெண்களாலேயே வருகிறதாம். கேட்டாயா கதையை? 'மைத்துனனைக் கண்டால் மனக் கசப்பு. அவனை ஓட்டிவிட்டு மதனி தன் அகமுடையானுடன் நிம்மதியாக இருப்பாள்' என்றுதானே அர்த்தமாகிறது?" என்ருள்.

சந்திரநாதனை அவனுடைய மதனி பிரீதியுடன் நடத்தவில்லை. ஆனுலும் அன்று அவள் பட்ட மனே

வியாகுலம் என்னவோ நடிப்பன்று; அது என் மனத்தையும் கரைத்து விட்டது.

சாயந்திரம் ஹீருவின் வீட்டிற்குச் சென்றிருந்தேன். தடபுடலாக விருந்துக்கு ஏற்பாடெல்லாம் நடந்துகொண்டிருந்தன, அங்கே. ஹீரு தனவந்தன் வீட்டுப் பிள்ளையாதலால் பணச்செலவுக்கு என்னவோ குறைவில்லை; சீனு விளக்குகளும் வர்ணக் காகிதத்தில் செய்த புஷ்பத் தோரணங்களும் அவர்கள் வீட்டையும் வீட்டைச் சுற்றியுள்ள பெரிய மாந்தோப்பையும் அலங்கரித்த காட்சி இன்னும் என் கண்முன் தோன்றுகிறது. ஹீருவின் சிறிய தந்தை அந்தப் பிராந்தியத்திலேயே பிரக்கியாதி மிகுந்தவர். அன்று அவரே நேரில் எல்லா ஏற்பாடுகளேயும் கவனித்தார் என்ருல், அந்த வைபவத்தைச் சொல்லவும் வேண்டுமா? கனவான்கள் பலர் அவ்விருந்துக்கு வந்திருந்தனர்: கலெக்டர்கள், டி. எஸ். பீக்கள், ஜில்லா ஜட்ஜ்கள் முதற்கொண்டு தாலுகா குமாஸ்தாக்கள் வரையில் கிராமத்தில் உள்ள பிரமுகர்களும் மேட்டுக்குடிகளும் அதில் கலந்துகொண்டனர்.

ஹீருவை எனக்கு நன்ருகக் கவனம் இருக்கிறது. பூவினும் மெல்லிய ஸுகுமார தேகம். கண்களில் பெண்களுக்குரிய மருண்ட பார்வை. ஹீருவை நினைத்துக் கொள்ளும்போதெல்லாம் மேற்கு வானில் ஜ்வலிக்கும் சுக்கிரனது ஞாபகம் வருகிறது. அவனிடத்தில் கண்ணேக் கவரும் ஒரு காந்தியும் உள்ளத்தைக் குளிரச் செய்யும் அபூர்வமான வசீகரமும் நிறைந்திருந்தன.

ஹீரு என்னே மிக உபசரித்தான். பல ஸம்பாஷணைகளுக்கிடையே அவன் என்னேடு, "சிற்றப்பா சொல்கிருர்: இப்போதிலிருந்து ஐ. ஸி. எஸ்ஸுக்குத் தயார்

செய்யவேண்டுமாம். உயர்தரக் கல்விக்காகச் சீமைக்கு அனுப்புவதாக உத்தேசித்திருக்கிறார். எனக்கும் போக வேண்டுமென்று அவா" என்றான்.

அப்போது என் எண்ணமெல்லாம் சந்திரநாதன் மேல்தான் நிலைத்திருந்தது. ஆனால் அன்று அவனைப்பற்றி எந்தப் பேச்சும் நான் எடுக்கவில்லை. "இன்று மத்தியான னந்தான் அவன் போனான்" என்று ஹீருவும் சொன்னான். "முன்னதாகவே அவனை இந்த விருந்திற்கு அழைத்திருந் தும் அவன் போய்விட்டான். ஒருநாள் கழித்துப் போனால்தான் என்ன?" என்றான் ஹீரு.

சட்டென எனக்கு ஒன்று தோன்றியது. அதைச் சொல்லிவிட்டேன்: "சந்திரநாதனுடைய அண்ணாவைக் காணவில்லையே இங்கே? அவரை—"

மிகுதியை ஹீருவே புரிந்துகொண்டான். அவன் புத்திசாலி அல்லவா? "அவரையுந்தான் அழைத்தோம். கிராமத்தில் ஒருவர் பாக்கி இல்லாமல் அழைத்திருக் கிறோம். அவர்மட்டும் வரவில்லை. நாளைக்கு ஏழைகளுக் குப் போஜனம், வஸ்திர தானம் வழங்குவதற்கு ஏற்பா டாகி இருக்கிறது" என்றான்.

உடனே சந்திரநாதனுடைய தமையனார்பால் என் சிந்தை தாவியது.

சந்திரநாதனுடைய நடவடிக்கையைக் கண்டு மானப் பட்டு அவர் இன்று வரவில்லையா? இல்லாவிட்டால் சந்திரநாதன் என்ன கதி ஆவானோ என்ற வேதனையினால் குன்றி அவர் வீட்டில் கிடக்கிறாரா? இன்னுமா அவர் தியானத்தில் வீற்றிருப்பார்? வரக் காணோமே!

"ஹெட்மாஸ்டர் ஸார்" என்று ஹீரு உரக்கச் சொல்லும்பொழுது எனக்கு உலக நினைவு வந்து நான்

திரும்பிப் பார்த்தேன். உலர்ந்த மேனி உடைய அவர் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் தரித்துக்கொண்டு எங்களை நோக்கி வந்துகொண்டிருந்தார். மரியாதை செய்ய நான் எழுந்து நின்றேன்.

"நரேச், இன்றைக்கா வந்தாய்?" என்றார் என்னை நோக்கி.

அவரிடம் இருந்த ஒருவித விசேஷ குணம் என்ன வென்றால், அவருடைய ஆதிக்கத்திலிருந்து விலகி ஒரு படி உயர்ந்த பழைய மாணவனை, 'அடே பையா' என்று அழைக்காமல் 'அப்பா' என்ற சொல்லையே அவர் உப யோகிப்பதுதான்.

"நரேச், நீ மேலே படிப்பாயோ இல்லையோ? இலக் கிய சர்ச்சையை மட்டும் சற்றுக் குறைத்து விடு, அப்பா! முழுவதும் விட்டொழி என்று நான் கூறவில்லை. அது வும் முக்கியந்தான். Shame in crowd, but solitary pride (கும்பலில் வெறுப்பும் தனிமையில் பற்றுதலும்) என்றவாறு இருக்கவேண்டியது அவசியமே" என்றார்.

நான் சும்மா இருந்தேன். அப்போது ஹீரு அவ ரிடம், "ஸார், நரு பத்திரிகைகளில் எழுதுகிறானே தெரி யுமா?" என்றான்.

"அப்படியா? ரொம்ப ஸந்தோஷம். நீ என்ன என்ன எழுதியிருக்கிறாய்? எனக்கு எல்லாவற்றையும் காண்பிக்க வேண்டும். நரேச், நான் அவற்றைப் படிக்க அதிக ஆவலா யிருக்கிறேன்" என்றார்.

அதற்கப்புறம் என்னைக் கேட்டார்:

"சந்திரநாதன் எங்கே போயிருப்பான்? யாரிடமும் சொல்லாமலா போய்விட்டான்? உனக்குக் கூடவா

தெரிவிக்கவில்லை? கடுதாசி கிடுதாசி ஏதாவது போட்டானு?"

"இல்லை, ஸார். யாருக்குமே தெரியாது, அவன் போகிற விஷயம்" என்றேன்.

கைத்தடியின்மீது ஊன்றியவண்ணம் அவர் சற்று நேரம் சிந்தையில் ஆழ்ந்து அசையாமல் இருந்தார். நான் மௌனமாக இருந்தேன்.

பெருமூச்செறிந்து அவர் ஒன்றும் பேசாமலே அகன்றார்.நான் என்னிடத்தில் உட்கார்ந்துவிட்டேன்.

"சந்திரநாதன் எனக்கு ஒரு கடிதம் எழுதிவிட்டுப் போனுன். அதைப் பார்க்கிருயா?" என்றெடுத்தான் ஹீரு. படித்தேன் கடிதத்தை; முதலில் "பிரியமுள்ள" என்று எழுதி அடித்திருந்தது.

"நண்பனுக்கு,

இன்றே நான் பிரயாணப்படுவதால் என்னுல் தங்க முடியாது. அதற்காக என்னை மன்னித்துவிடு. பரீக்ஷையில் நீ வெற்றி அடைந்ததைக் குறித்துப் பரம ஸந்தோஷம் எனக்கு. ஆனுல் ஒன்று மட்டும் என் மனத்தை உறுத்துகிறது. இந்த ஆர்ப்பாட்டமான சடங்கைச் செய்யாமல் இருந்தால்தான் என்ன? ஸ்காலர்ஷிப் கிடைத்துவிட்டால் அது மகத்தான விஷயமா?

யாவர்க்கும் என் அன்பு.

இங்ஙனம்,
சந்திரநாதன்."

கடிதத்தை ஹீருவினிடமே திருப்பி விட்டேன். அவன், "இதைப் பத்திரமாக வைத்துக் கொள்வேன். அவனுடைய ஞாபகச் சின்னமல்லவா?" என்றுன் ஹீரு. அவன் மீண்டும் வினவலானுன்:

"நரு, எங்கேடா அவன் போயிருப்பான்? என்ன செய்வதாக அவனுக்கு எண்ணமோ?"

என்னைப் போல் அவனுக்கும் இவ்வாறான கிளர்ச்சி மனத்திடை மூண்டதுபோலும்! "எனக்கு எப்படித் தெரியும்? ஹீரு" என்றேன்.

என் கற்பனைக்கண்ணுக்கு நவயுவனான சந்திரநாதன் தோள்மீது கழி ஏந்தி அதன் முனையில் ஒரு சிறு மூட்டையைத் தொங்க விட்டுக்கொண்டு இரவில் நிர்மானுஷ்யமான நெடுவழியே தனியாகச் செல்வது தெரிகிறது. அவன் நடக்க நடக்க இருமருங்கிலும் உள்ள உலகம் கொஞ்சங் கொஞ்சமாகப் பின்னடைகிறது. தலைக்கு நேரே கருநீலமான வானவெளியில் சாயாபதம் தெரிகிறது. அந்தக் காலபுருஷ நக்ஷத்திரம் அவனோடு ஒத்து மேலே செல்கிறது.

* * *

பட்டென என் சிந்தனையின் சூத்திரம் அறுந்துவிட்டது. எனக்குப் பிரியமானவர் யாவரும், தனிமையான இவ்வறையில் இருள் திரையிலிருந்து உருவுகொண்டு என் முன் உலவிய யாவரும் என் மனத்துள் எங்கோ ஓர் இடுக்கில் ஒளிந்து கொண்டனர்.

வேலைக்காரன் கதவைத் தட்டி, "பாபு! சாப்பாடு தயாராகி விட்டது. அம்மா கூப்பிடுகிறார்கள்" என்று குரல் கொடுத்தான்.

வெறுப்புற்று, "நான் சாப்பிடவில்லை என்று சொல்லிவிடடா! என்னை யாரும் தொந்தரவு படுத்த வேண்டாம்" என்றேன்.

வரவர என் குரலோசை இருளலையில் மூழ்கிவிட்டது. அறையில் திகழும் நிச்சப்தம் பின்னும் அதிகரித்தது. மனைவி கதவண்டை வந்து நின்று, "இப்படியே இரா முழுவதும் இருக்கவேண்டுமென்று சபதமா? வாருங்கள்; எழுந்து வந்து ஒரு வாய் சாப்பிடுங்கள்" என்றாள், கண்டிக்கும் பாவனையில்.

"இன்றைக்குமட்டும் என்னை வற்புறுத்தாதே."

"ரொம்ப அழகுதான்! சாப்பிட்டு விட்டு எதை வேண்டுமானாலும் செய்யுங்கள்."

நான் மேலே தர்க்கிக்காமல், 'என்னைக் கட்டாயப் படுத்தாதே' என்ற பாவனையில் அவளுக்குக் கைகூப்பினேன். ரோஷம் பொத்துக்கொண்டது அவளுக்கு. அன்று என் மனம் அவளை ஸமாதானப்படுத்தும் மார்க்கத்தைத் தேடவில்லை. அவள் கீழே போய்விட்டாள். மீண்டும் அறுந்துபோன என் சிந்தனைச் சூத்திரத்தை முடி போட்டேன்.

ஆமாம். ஹீருவின் மாஞ்சோலையில் நான் சந்திரநாதனைப்பற்றிச் சிந்திக்கலானேன். என்னுடைய கற்பனை பொய்யன்று. அது சிலவேளை வாஸ்தவமாக மாறிவிடுகிறது. மனிதனுடைய உள்நோக்கு, விதி எழுதிய லிபியையும் ஊடுருவிப் பார்த்துவிடுகிறது. என் மனக்கண்ணும் அன்று அவ்வரிய ஸந்தர்ப்பத்தைப் பெற்றது.

அந்தத் தினத்திற்குப் பதினொரு வருஷங்களுக்கு அப்பால் ஒருநாள் சந்திரநாதன் என்னோடு சொல்லியிருக்கிறான்:

"அந்த இரவு நான் சற்றும் களைப்பாறவில்லை; நடந்தே சென்றேன். என் கூர்மையான கண்களுக்கு

இருட்டிலும் ஒளி தெரிந்தது. எனக்குத் தெளிவாகப் புலப்பட்டன யாவும். பாதையின் இருபுறமும் பரந்திருந்த வெளியுலகு நான் செல்லச் செல்லப் பின்னடைந்தது; ஒரே கருக்கல். வழியோ முன்பின் அறியாதது. ஆனால் என் மனத்துள் அச்சம் சற்றுவது குருத்து விடவில்லை. நடக்கச் சளைக்கவே இல்லை நான். அன்று இருந்ததுபோன்ற உத்ஸாகத்தை வேறு எந்த நாளும் அவ்வளவு நேர்முகமாக நான் உணர்ந்ததில்லை. நரேச், அவ்விருளின் நடுவே என் பிற்காலத்தைக் கண்டேன். அதுவே என்னை அழைத்துச் சென்றது.''

போகட்டும்! அது பழைய நினைவின் ஓர் அம்சம். அது இதோடு நின்றுவிடுகிறது.

## அத்தியாயம் 3

மறந்துபோனவை மீண்டும் கவனத்திற்கு வருகின்றன.

மறுநாள் விடியும்பொழுதே நிசாநாத பாபுவைக் காண அவர் வீட்டிற்குச் சென்றேன். எனக்கு ஆவல் ஒரு புறம் இருந்தது என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் உள்ளூற அவர் படும் வேதனையே என்னை மிகவும் உருக்கிவிட்டது. அவ்வாறு இராதுபோனால் கூச்சம் என் ஆவலை நடுவே வந்து தடுத்திருக்குமே! ஸங்கோசத்தை விட்டு அவரைப் பார்க்க நான் சென்றேன். அச்சமயத்தில் நிசாநாத பாபுவின் பூஜாக்கிரியைகள் யாவும் முடிவெய்தின. முறுவல் மலர்ந்த முகத்துடனே என்னை அவர், "வா அப்பா நரு, வா! நேற்று நீ வந்திருந்ததாகச் சொன்னாள்" என்றார்.

அவரது முகத்தை நேரே பார்த்தபோது என் திடமெல்லாம் குலைந்து போயிற்று. ஒளிந்து தாக்கும் சத்துருவைப்போல் கூச்சமானது என்னையும் அறியாமலே வந்து சூழ்ந்துகொண்டது. 'ஏனோ வந்தோம் இங்கு? வாராதிருந்தால் நன்றாயிருந்திருக்குமே' என்றெல்லாம் நான் நினைத்துக்கொண்டேன்.

நிசாநாதபாபு தாமே முதலில் பேசினார்:—"சந்திரநாதன் நேற்றே போய் விட்டானப்பா. எந்த இடத்திற்குப் போகிறானென்பதை அவன் எனக்குச் சொல்லவில்லை. ஒரு வேளை அவனுக்கே போகவேண்டிய இடம்

ஸ்திரப்படவில்லையோ என்னவோ? ஜோலி அவனுக்கு எந்த இடத்திலோ, அது யாருக்குத்தான் தெரியும்? அப்பனே, என் மனம் நேற்றிலிருந்து அலை பாய்கிறது. நாள் முழுவதும் நான் ஏங்கிக் கடவுளைக் கூவி, 'ஹே தயாநிதே! என் மனச்சஞ்சலத்தை விலக்கு' என்று அழைக்கிறேன். மிகவும் நொந்து உருகியபிறகே என் மனம் ஒருவாறு அமைதியுற்றது. ஆனால் முழுவதும் ஆற்றக்கூடியதா என்னுடைய துயரம்!" என்று பெரு மூச்சுவிட்டுப் பாவம், அவர் பேச்சு ஓய்ந்து சற்று நின்றார்.

மீண்டும் அவர், "மனிதனுக்கு அவன் மனத்தை விடப் பெரிய விரோதி வேறெதுவும் இல்லை. அழிவைப் பற்றி அவனைவிட வேறு எந்த ஜீவராசிக்கும் தெரியாது. சோகத்தினால் நைந்துபோகும் பிராணி அவனைத் தவிர்த்து இவ்வுலகில் எதுவுமே இராது. அழியக்கூடிய செல்வத்தைக்கொண்டு சூன்யமாளிகையைக் கட்டும் ஆற்றல் மனிதனுக்கே உள்ளது. நாசமாகக் கூடிய வாழ்வைக் காட்டி எது மனிதனை மயக்கத்திற்கு உள்ளாக்கியதோ அந்த அழியாப் பொருளைச் சிறிதாவது கண்டறியப் பேராவலும் இதே மனிதனிடத்தில்தான் இருக்கிறது. 'கிம் ஆச்சர்யம் அத: பரம்' (இதைவிட அதிசயமானதும் ஒன்று உண்டோ?) என்று தர்மபுத்திரர் மொழிந்த வாக்கைவிட உண்மை வேறு எதுவும் இல்லை" என்றார்.

இந்தமாதிரி வறட்டு வேதாந்தத்தைக் கேட்க எனக்கு வெறுப்பாயிருந்தது. இளமைப் பருவத்தில் இருக்கும் எனக்கு மரத்தின் பூவின்மேல் மோகம் பிறக்குமேயொழிய அதன் வேரைப்பற்றி நான் ஏன் சிந்திக்கப்போகிறேன்? ஏனென்றால் மலரின் அழகினைக் கண்டு மனிதன் இன்புறும் சமயம் அதுவே.

சந்திரநாதன் ஊரையும் சுற்றத்தாரையும் துறந்து சென்ற வேதனையே எனக்குப் பெரிதாக இருந்தது. அத் துயர் வெறும் மாயை என்று நம்ப என்னால் முடிய வில்லை. அதைக் கேட்கவும் எனக்கு அருவருப்பே.

அந்தப் பேச்சை மாற்ற நான், "அவனை நீங்கள் போகவிடாமல் தடுத்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்" என்றேன்.

நிசாநாதபாபு என் முகத்தையே கவனித்து, "நன்றாக இருந்திருக்குமென்றா சொல்லுகிறாய்?........." என்ற தும் அவர் மேலே பேசாமல் சிந்தனையில் ஆழ்ந்தார். நானும் மௌனமாக இருந்தேன். சிறிது நேரம் கழித்து அவர், "அப்பா நரூ, அந்தமாதிரி செய்ய எனக்கு என்ன உரிமை இருக்கிறது? ஒரு ஜீவனைச் சிருஷ்டித்த பகவான் அதற்குப் பகுத்தறிவையும் கொடுத்திருக்கிறார். அதன் இஷ்டப்படி செல்லவும் விட்டிருக்கிறார். அதன் போக்கை அவர் தடுக்கவும் இல்லை. சந்திரநாதனை வன்மை மிகுந்த யுவகனாகும்வரை வளர்த்து என்னால் இயன்றவரை அவன் கல்வி பயில்வதற்கு வசதியும் அளித்தேன். முழு மனத்துடன் அவன் ஏற்ற வேலைக்குக் குறுக்கே நிற்கவோ அவனைத் தடுக்கவோ எனக்கு யாதோர் அதிகாரமும் இல்லை" என்றார்.

மனிதனே ஓர் அற்புதமான படைப்பு. அவனைப் பயித்தியமென்று சொல்வதா? வேறென்னவென்று சொல்வது? எனக்கும் இந்தப் பித்தம் தலைக்கேறித் திணறுவதுபோல் இருந்தது. நிசாநாதபாபு பேசி முடித் ததும் நான் எழுந்திருந்தேன்; "போய்வருகிறேன். சந்திர நாதனைப்பற்றி ஏதாவது செய்தி கிடைத்தால் தயை

செய்து எனக்குத் தெரிவிக்கவேண்டுகிறேன்" என்றேன், நீங்கும்பொழுது.

"அப்படியே" என்றார் அவர்.

வீட்டிற்கு வெளியே வந்ததும் 'தப்பினேம்' என்று பெருமூச்செறிந்தேன். அப்போது உட்புறம் நிசாநாத பாபு தமக்குத் தாமே தெளிவான குரலில்,

'கா தவ காந்தா கஸ்தே புத்ர
ஸம்ஸாரோயம் அதீவ விசித்ர'

என்று உச்சரிப்பது கேட்டது.

சந்திரநாதனுக்காக என் மனம் துயருற்றது. "சந்திர நாதா, துரதிருஷ்டம் பிடித்தவனே!" என்று எனக்குள்ளே சொல்லிக்கொண்டேன். அவன் போய்விட்டான்; அவன் போனதே நல்லதாயிற்று.

சந்திரநாதனையும் என்னையும் பிணைத்த நட்பென்னும் தளையை அவனே பிய்த்தெறிந்து சென்றான். அதே சமயம் ஹீருவுடனும் நிசாநாத பாபுவுடனும் என்னைப் பிணைத்த பந்தமும் அற்று விழுந்தது.

இதற்கப்புறம் மேற்படிப்புக்காக நான் பாட்னுவுக்குப் போய்விட்டேன். எங்கள் மாமாவீடு இதற்கு அனுகூலமாக இருந்தது. ஹீரு கல்கத்தாவிலேயே அரசாங்கக் கல்லூரியில் சேர்ந்து படிக்கலானுன். நிசா நாதபாபு தம் கிராமத்திலேயே துருவநக்ஷத்திரத்தைச் சுற்றி வட்டமிடும் ஸப்தரிஷி மண்டலத்தை ஒத்துத் தாம் வழிபடும் கடவுளை முழுமனத்துடன் உபாஸித்துக் கொண்டிருந்தார்.

அதற்குமேல் என்ன நடந்தது?

இன்று இந்தத் தனிமையில் என் வாழ்வில், முதல் முதலாக உலகைக் கண்ட பெரியதொரு மகிழ்ச்சியின்

ஞாபகம் வருகிறது. எனக்கு மூண்ட ஆசைதான் என்னே! அவ்வாசைக்கும் ஓர் எல்லே உண்டோ? அளவிடற்கரிய கற்பனைகள் என் சிறு உள்ளத்தில் எப்படித்தான் நிறைந்திருந்தனவோ? அவற்றையெல்லாம் திரட்டிக் குவித்துப் பார்த்தால் நிலத்தினின்று வானை அளாவுமே! அதைப் பிரித்து ஆராய்ந்தால் இவ்வுலகின் அகலத்தைக் கவர்ந்து நிற்கும். சிறந்த எழுத்தாளனுகவும் கவி புனையும் புலவனுகவும் ஆக அடங்கா ஆவல் எனக்கு. இளமையில் தோன்றும் இவ்வாசைக்கு எதிரே 'இன்று தொட்டு நூறு ஆண்டுகள் சென்று' என்ற காவியத்தில் தொனிக்கும் ஓர் ஆவல் எம்மாத்திரம்! லக்ஷம் வருஷங்களுக்குப் பிறகு வரும் உலகென்னும் சாளரவாயிலில் கவுள்மிசைக் கை ஊன்றி எதிர்நோக்கும் ஓர் இளம் பாவையின் வதனமும் என் கற்பனைக் கண்களுக்குப் பிரத்தியக்ஷமாயிற்று. உலகத்தில் பூத்த வண்ணமலர்கள் அனைத்தும் என் கழுத்தில் அவள் இட இருக்கும் வெற்றி மாலேயில் இருப்பதாகக் கனவு கண்டேன்.

இன்றும் உள்ளத்திலிருந்து நெட்டுயிர்ப்பு வெடித்து வருகிறது. நான் ஏன் ஒளிக்கவேண்டும்? இதன் வெம்மை என் ஆசாபங்கத்தைக் காட்டுகிறது.

போகட்டும், அவை யாவும். என் சொந்தக் கதையைப் பற்றி நான் சிந்திக்கவில்லே. எவர்களேக் குறித்து எனக்கு ஸதா நினேவோ அவர்களேப்பற்றியே சொல்லுகிறேன்: எங்கே சந்திரநாதன்? அவன் எங்கே மறைந்துபோனன்? ஹீரு எங்கே? நிசாநாத பாபுதாம் எங்கே? நினேவின் ஏட்டைத் தள்ளிப் பார்க்கிறேன். அவர்களில் ஒருவராவது தென்படக் காணுேமே? பூஜை விடுமுறைக்கு நான் ஊருக்கு வந்தபொழுதும் அவர்கள் கண்களில்

தென்படவில்லை. சந்திரநாதன் போன இடமோ தெரியவில்லை. ஹீரு பண்டிகைக்கு ஊருக்கே வரவில்லை. நிசாநாத பாபு தீர்த்தயாத்திரை செய்ய வெளியே போய்விட்டார்.

ஹீருவின் தாய் இறந்துவிட்டாள். அம்முறை வந்தவன் அதற்கப்புறம் அவன் தன் வீட்டிற்கு வரவேயில்லை. துர்க்கா பூஜையின் ஏழாவது நாளன்று நிசாநாத பாபுவின் மனைவியை நான் தற்செயலாகக் காண நேரிட்டது. உமைத்தாயின் வருகையைக் கொண்டாட நிறைநீர்க் கரகம் வாத்தியங்களுடன் ஊர்வலம் வந்து கொண்டிருந்தது. தெருவெங்கும் ஒரே கும்பல். தள்ளாத கிழம்முதல் தொட்டுத் தவழும் குழந்தைவரை அந்நன்னாளில் புது ஆடை அணிந்து, பசுந்தளிர்களால் அலங்கரித்த கரகத்தாயை எடுத்துச்செல்லும் பல்லக்கின் பின்னால் சென்றனர். நான் வேகமாகக் குறுக்கே ஒரு சந்து வழியாகப் புகுந்து கரகத்துக்குமுன்னே செல்ல முயன்றேன்.

சந்தின் ஒரு மூலையில் வரும்பொழுது நான் திகைத்து நின்றேன். தெருப்புழுதியில் ஒரு சிறு பிள்ளை கைகால்களை உதைத்துக்கொண்டு புரண்டு புரண்டு ஓலமிட்டது. ஆச்சரியத்துடன் கண்கொட்டாமல் அக்குழந்தையைப் பார்த்துக்கொண்டு நின்றேன். நிசாநாத பாபுவின் மனைவி, இமையாக்கண்களுடன் எங்கோ மனம் விட்டவளாய்ப் பக்கத்தில் இருந்தாள். ஆகவே குழந்தை யாருடையதென்பதை அறிந்துகொண்டேன். அச்சிறுவன் நிசாநாதபாபுவின் மகனே.

“நீங்களா மாமி?” என்று குரல் கொடுத்தேன். என் குரலைக் கேட்டதும் மெய்ம்மறந்து நிற்கும் அவள் தன் நினைவுக்கு வந்து புழுதியில் புரளும் தன் பிள்ளையைத்

தரதரவென்று இழுத்துக்கொண்டே வீட்டினுள் சென்ருள். சிறுவன்மட்டும் பரிதாபக் குரலில், "எனக்குப் புதுச்சொக்காய் வேணும், அம்மா" என்று விக்கி விக்கி அழுதவண்ணம் கதறிக்கொண்டே இருந்தான். அவன் கேட்டது என் செவியில் விழுந்தது. மங்களகரமான அந்த உத்ஸவதினம் என்வரைக்கும் பொலிவழிந்தே தோன்றியது. அந்த இடத்திலேயே நான் சற்று நின்றேன். அப்புறம் ஒரு முடிவிற்கு வந்து கடைத்தெருவுக்குப் போய் நல்ல வர்ணமாகப் பார்த்து 'ஸாடினி'ல் ஒரு சொக்காய் வாங்கி நிசாநாதபாபுவின் வீட்டு ஜன்னல் வழியாக உட்புறம் அதைப் போட்டுவிட்டு வேகமாக அவ்விடத்தை விட்டு அகன்றேன்.

இது யாருடைய வேலை என்பது மாமிக்குத் தெரிந்து விட்டது. அன்றுமாலை எங்கள் வீட்டிற்கு அவள் வந்தாள். கூடவே அந்தச் சிறுவனும் வந்தான். நீல நிற 'ஸாடின்' சொக்காய் அவன் உடம்பிற்கு ஏற்றதாயிருந்தது. நான் லஜ்ஜையினால் சரேலென்று என் அறையினுள் புகுந்துகொண்டேன். அந்த இடத்திலும் மாமி என்னைத் தொடர்ந்து வந்தாள். சிரித்த முகத்துடன் உள்ளே வந்து அவள், "ஏது, நம்ம நருவர வரப் பொம்மனாட்டிகளைக் கண்டால் வெட்கப்படுகிருற்போல் இருக்கிறது?" என்ருள்.

அவளது சாந்தமான குரலைக் கேட்டபிறகே எனக்குள்ள கூச்சம் சற்று விலகியது. எதிரேவந்து, "சௌக்கியமா? மாமி" என்று விசாரித்தேன்.

"ஒரு குறைவும் இல்லையப்பா. ஏதோ ஈசுவரன் ஒருவன் இருக்கிருன் என்று எண்ணியே காலங் கழிக்கிறேன். அவனுடைய கிருபை இராதுபோனல்

குழந்தைகள் இரண்டும் என்றோ இறந்துபோய் நானும் நடுத்தெருவுக்கு வந்திருக்கவேண்டும்" என்றாள்.

"சந்திரநாதன் போனபிறகு உங்களுக்கு அவனைப் பற்றிய சமாசாரம் ஒன்றுமே தெரியாதா?" என்றேன்.

மாமியின் கண்களில் நீர் துளித்தது. "இல்லை; அவன்தான் எங்களை வெறுத்துவிட்டுப் போய்விட்டானே. அவனைப்பற்றி ஒரு செய்தியும் தெரியவில்லை" என்றாள். சற்று நேரம் மௌனமாயிருந்ததும், "இந்த மாதிரி அதிசயமான சகோதரர்களை நான் பார்த்ததே இல்லை. எதன் மேலும் ஆசையோ பாசமோ பற்றுதலோ இல்லை இவர்களுக்கு! ஏனோ இந்தப் பாழும் பூமியில் இவர்கள் பிறக்கவேண்டுமென்று நான் சில சமயம் நினைத்துக் கொள்வதுண்டு. உங்கள் மாமாவிடம் எத்தனையோ தரம் 'சந்துருவைத் தேடி அழைத்து வாருங்கள்' என்று சொல்லிப் பார்த்தேன். அதற்கு அவர் பதில் என்ன சொன்னார் தெரியுமோ? 'இந்த ஸம்ஸார வாழ்க்கை உன்னால்தானா, என்னால்தானா நடக்கிறது? பொன்மானைப் பிடிக்க அதன் பின் சென்றால் ஸீதையை இழக்கவேண்டியதுதான்' என்றார். தம் சொந்தப் பிள்ளை குட்டிகள்மீது பிடித்தம் இராதவர்களுடைய குணமே அலாதியானது, அப்பா" என்றாள்.

இந்த வார்த்தைக்குச் செவி சாய்த்தேனே தவிர, என்ன பதில் சொல்வதென்று எனக்கு விளங்கவில்லை. மாமி வெய்துயிர்த்தாள்; "நரு, சொக்காயின் விலை என்னடாப்பா? எப்படியாவது நான் கொடுத்துவிடுகிறேன் காசை. சற்றுத் தாமதமாகத்தான் வரும்" என்றாள்.

நான் அதற்கு ஒப்புக்கொள்ளாமல் இல்லை. "அதற்கென்ன மாமி, நிதானமாகத்தான் கொடுங்களேன். இன்னும் ஒரு விஷயம்: இன்னும் ஏதாவது துணிமணிகள் வேண்டியிருந்தாலும்—" வார்த்தையை நான் முடிக்கவில்லை. மாமி நிலைத்த பார்வையுடன் என் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள். நான் சற்றுத் தயக்கத்துடன், "அப்புறம் கொடுக்கலாம். நான் அயலான் அல்ல. வேறு விதமாக எண்ணிக்கொள்ள வேண்டாம்" என்றேன்.

வாடிய சிரிப்புடன், "இல்லையப்பா. நான் ஒன்றும் தவறாக நினைப்பவள் அல்ல. கடன் சுமை ஏறுகிறதே யென்றுதான் யோசிக்கிறேன்" என்றாள் மாமி.

"இல்லை, இல்லை. நீங்கள் அதற்காகத் தயங்கவேண்டாம். முடிந்தபோது கொடுங்களேன். அவசரமில்லை எனக்கு" என்றேன்.

"அப்படியானால், அப்பா நரு, எனக்கு ஒரு தோம்புப் புடைவையும், அந்தப் பொட்டைக் கட்டை இருக்கிறதே அதற்குப் பாவாடைக்கு ஆகும்படியாக ஏதாவது மட்டமான சீட்டியும் வாங்கிக்கொண்டு வா. கொஞ்சமாவது காசு நீ பெற்றுக்கொள்ளத்தான் வேண்டும்" என்றாள்.

உடனே கடைக்குப் புறப்பட்டேன். புடைவையைப் பெற்றுக் கொண்டதும் மாமியின் முகம் ஸந்தோஷத்தினால் ஒளிர்ந்தது. ஒரு சிறு பெண்ணைப் போல் குதூஹலப்பட்டாள். "நரு, சற்று இரு. போய் விடாதே. புடைவையை உடுத்துக்கொண்டு வருகிறேன். நன்றாக இருக்கிறதா பார்" என்றாள்.

புதுப்புடைவை அணிந்துகொண்டு மாமி என்முன் வந்தபோது உண்மையில் தெய்விகக் காட்சியாகவே

இருந்தது. செந்நிறக் கரைபோட்ட சேலைக்கும் மாமியின் மாநிற மேனிக்கும், ஸாக்ஷாத் ஸ்ரீதேவியே பிரஸன்னமானாற்போல் இருந்தது.

மகிழ்ச்சியுள்ளவளாய், "நரு, உட்கார். ஏதாவது தின்றுவிட்டுப் போகவேண்டும், நல்ல நாளும் அதுவுமாக" என்றாள் மாமி.

தேங்காய் போட்டுப் பிடித்த பயற்றம் லாடுவை மென்று விழுங்கியவண்ணம், "மாமா போய் எத்தனை நாளாயின? எப்போது வருவார்?" என்றேன்.

"பகவானைத் தேடிக்கொண்டு புறப்பட்டு விட்டார். அவர் எப்போது திரும்புவாரோ எனக்கு எப்படித் தெரியும்? ஆனி மாதம் சென்றவர்; சித்திரை மாதம் வருவதாகச் சொன்னார். மார்கழி கங்காஸ்நானம் செய்ய வேண்டும். தை மாஸம் கல்பவாஸம் இருக்கப்போவதாகச் சொன்னார். அப்புறம் தலை எழுத்து எப்படி இருக்கிறதோ! பகவான் அதற்குள் பாதாரவிந்தத்தில் அழைத்துக்கொண்டுவிட்டால் அவர் திரும்பப்போவதே இல்லை" என்றாள்.

அப்போதே நான் ஒரு சபதம் செய்து கொண்டேன். நிசாநாத பாபுவைச் சந்திக்க நேரிட்டால், "இந்தப் பிரம்மாண்டம் எவ்வளவு விசாலமானது தெரியுமா, ஸ்வாமி? கற்பனை செய்து பாருங்கள். எத்தனை கோடி சூரிய, கிருஹ, நக்ஷத்திரங்கள் இதனுள்ளே இருக்கின்றன? எவ்வளவோ! இன்னும் கண்டுபிடிக்காதவை எவ்வளவோ! அவை உங்களுக்குத் தெரியுமா?" என்று தான் கேட்பேன். பொன் மான்!—இதே மாயையின் பின்னால் ஓடும் பேர்வழியே பிறருக்கு, 'ஐயோ, அதைத் தேடி ஏமாறாதீர்கள்' என்று உபதேசம் செய்கிறார்!

என் அகத்துள், என் கற்பனையின் நடுவே பொறுமையின் வடிவமான மாமி பிரகாசமாக விளங்குகிறாள். துயர் நிரம்பிய அவளுடைய வாழ்வை அடிப்படையாகக் கொண்டு நீண்டதொரு கதைபுனைய எனக்கு ஓர் எண்ணம் உதயமாகியிருக்கிறது. கதிரைச் சொரிந்துவிட்டுச் சூன்யமாகி நிற்கும் நிலமடந்தையைப்போல் அவளது வறுமை நிலையையும், நிறைவேறாத ஆசைகளையும், கதிர்முதிர்ந்து வதங்கும் பயிரைப்போன்ற அவளது மௌன ஏக்கத்தையும், வியர்த்தமாகிக் குன்றும் அவளது ரோஷத்தையும் சித்திரிக்கவேண்டும். அந்த ஒரு ரசனையே எனக்கு அழியாப் புகழைத் தரும். தெய்விகமான மாமி வெற்றிக் கொடியைத் தூக்கி அதோ, என் கற்பனை ரதத்தைச் சிரிப்பும் களையும் முகத்தில் திகழச் செலுத்துகிறாள். அவளுடைய துயரமே இம்மாநிலத்தின் துயரமுமாகும்.

தைமாதம் முதல் வாரத்தில், "அலாஹாபாதுக்கு ஒரு தரம் வா. அங்கே நீ பார்க்கவேண்டிய அதிசயங்கள் அநேகம் இருக்கின்றன. உன் சித்தி சியாமாவின் பெண்ணுக்குக் கல்யாணம். அதையும் பார்த்துவிட்டுப் போகலாம் நீ" என்று மாமா எனக்குக் கடிதம் போட்டிருந்தார்.

நான் குதித்தெழுந்தேன். தேச தேசாந்தரங்களைக் காண எனக்கு அளவற்ற ஆவல். என் கற்பனைக் கண்ணும் இதனால் விரிவுறும். இதையெல்லாம் நினைத்துக்கொள்ளும்போதே பூரிப்படைந்தேன்.

அலாஹாபாத்திற்குச் சென்றேன். சியாமா சித்தியின் பெண்ணுடைய விவாகத்தில் எனக்கு அரிய அனுபவங்கள் கிடைத்தன. எல்லோரும் இன்புற்று இருக்கும் அந்தச் சுபகாரியத்தில் மனவேதனையுடன் எவரும் கவனியாமல் நிற்பவள் மணப்பெண்தான். வாழ்வைத்

தன் விருப்பத்திற்கு உகந்தவாறு ஆக்கிக்கொள்ள யாதோர் அதிகாரமும் அவளுக்கு இல்லை. விவாகம் அவளுக்கு முக்கியமல்ல; வருவோர் போவோருக்கே குதூஹலத்தை அளித்தது. ஸம்பந்தி வீட்டுப் பெண்கள் தாங்கள் அலங்கரித்துக்கொள்வதும் அழகு பார்த்துக்கொள்வது மாகவே இருந்தனர். அவர்களுள் ஒருத்தி தையற்கார னிடம் தன் குழந்தைக்கு எந்தமாதிரிப் 'பாஷனி'ல் கவுன் தைக்கவேண்டுமென்றும் கழுத்தில் காலர் ஒரு மோஸ்த ராகவும் கைகள் ஒரு தினுசாகவும் இவ்வளவு நீளம் இருக்கவேண்டுமென்றும் சொல்லி அவனைத் திகைக்கச் செய்தாள். சிலர் மேளகாரனிடம் இன்ன பாட்டு வாசிக்கவேண்டுமென்று உத்தரவிட்டுக் கொண்டிருந்தனர். முதியவர்கள் வரிசை வழமைகளைப்பற்றி வம்பளந்து கொண்டிருந்தனர். சித்தியின் பெரிய பிள்ளைகள் இருவர், "எனக்கு நல்ல சொக்காய் இல்லையே. எனக்குச் சரிகை வேஷ்டி வாங்கவில்லையே" என்றெல்லாம் சற்றுநேரத்திற்கு ஒருதரம் அவளை ஹிம்ஸித்தனர். இந்தச் சந்தடியில் மணமகளை ஒருவருமே கவனிக்கவில்லை. அவளுக்கு என்னவேண்டுமென்பதைக் கண்டறிய எந்த ஜீவனும் சிரத்தை கொள்ளவில்லை.

எனக்கு இது அளவற்ற வருத்தத்தையே தந்தது. இருந்தும் இவையெல்லாம் எனக்கு வேடிக்கையாகவே இருந்தன. புதிது புதிதாகக் கதைகள் எழுத விஷயங் கள் இவற்றுள் மலிந்திருப்பதைக் கொண்டு ஆறுதல் அடைந்தேன்.

ஒரு கதையைப் பூர்த்திசெய்ய அன்று சாயந்திரம் யமுனையின் துறைக்கு வந்து படகொன்றைப் பேசிக் கொண்டு, கூந்தல் ஒன்று சேர்வதுபோல் மூன்று நதிகள்

கூடும் திரிவேணி ஸங்கமத்திற்குப் போனேன். கங்கையின் பொங்குநீர்விசையை எதிர்த்து ஆழமான யமுனையின் இருள்நிற வெள்ளம் எழிலுடன் பாய்ந்தது. படகும் நிதானமாகவே அப்பெருநீர்க்கூடலில் மிதந்து சென்றது. ஸங்கமஸ்தானத்திற்கு அருகே இடைவெளியில் பெரிய கோட்டை. சரித்திரப் பிரஸித்தமான அக்கோட்டையின் ஓரமே படகு ஊர்ந்தபோது தலைக்குமேல் மதிலில் உள்ள மண்டபத்தில் வெள்ளையரின் 'பாண்டு' ஓசை கேட்டது. என் சிந்தனையின் தொடர்பை அது சிதைத்தது. கோட்டையை அண்ணாந்து பார்த்தேன். ஹிந்து அரசர்களின் 'பிரதிஷ்டானம்' என்று சொல்லப்படும் துர்க்கம் அல்லவா இது? முஸல்மான் மன்னர்கள் கட்டிய 'ஏலாஹிபாத் கட்' இதுதானே! ஆங்கிலேயரின் அலாஹாபாத் 'போர்ட்' இதுவன்றோ? என்னை மிகவும் கவர்ந்த இடங்கள் இரண்டே. ஒன்று கோட்டைக்குச் செல்லும் பாதை. மற்றொன்று கோட்டையின் நேர்த்தியான வாயில். அவற்றைப் பார்த்ததும் என் கவிதை உள்ளம் பொங்கி எழுந்தது. இரண்டொரு செய்யுள் துணுக்கும் இயற்றினேன்:

ஏவரும் புகற்கரும் இருப்பு வாயிலில்
தாவரும் வீரர் தாமே புகுவார்?
ஹூணர்தம் அடிபட் டாணியர் வாள்மொக
லாயர்தம் கத்திகள் மேயின அங்கே
வருக்கிகள் வேற்படை வைந்நுதி
பொருக்கெனப் புகுந்தன பொருமதி லுள்ளே.

மிகுதியான செய்யுளின் அடிகள் மறந்துபோய் விட்டன. அந்திப்பொழுது நெருங்கியதும் படகிலிருந்து இறங்கி நான் கங்கையின் கரையோரமாகவே நகரை

நோக்கி நடந்தேன். ரஸ்தாவின் இருபுறமும் ஸாது, ஸந்நியாஸி இவர்களுடைய குடில்கள். அவர்களுள் சிலர் நிர்வாணமாக உட்கார்ந்திருந்தனர். அங்கே நான் பார்த்த விசித்திரமான ஹடயோக ஸாதனைகள் எத்தனையோ!

"யாரது; நளுவா நீ?" என்றது ஒரு குரல்.

திடுக்குற்றுத் திரும்பிப் பார்த்தேன்.—நிசாநாதபாபு! கங்கையின் கரையில் ஒரு மண்குடிலில், கீழே வைக்கோல் பரப்பிக்கொண்டு அதன்மீது வீற்றிருந்தார் அவர்.

அலங்கோலமான தாடிமீசை அவர் முகத்தை மறைத்துக்கொண்டிருந்தது.

சட்டென வணங்கி, "நீங்களா! இந்தக் குளிரில் நதியின் கரையில் ஏன் இருக்கிறீர்கள்? அடையாளமே தெரியாதபடி உரு மாறிவிட்டீர்களே, மாமா!" என்றேன்.

"கல்பவாஸத்தில் இருக்கிறேன். அதனால்தான் இந்தக் கோலம். க்ஷவரம் செய்து கொள்ளக்கூடாது. தலைக்கு எண்ணெய் இடக்கூடாது. அதனால்தான்—" என்று அவர் சிரித்தார்.

மாமி அன்று சொன்னது பளிச்செனக் கவனத்திற்கு வந்தது. அதோடு நான் சபதம் செய்துகொண்டதும் நினைவிற்கு வந்தது.

"இதென்ன கூத்து? மாமா! பெண்டாட்டியையும் பிள்ளைகளையும் நிர்க்கதியாய் விட்டுவிட்டு இங்கே உட்கார்ந்து இருக்கிறீர்களே!" என்றேன்.

சிரித்துக்கொண்டே அவர் மேலே விரலைச் சுட்டி, "எல்லாம் வல்ல இறைவன் அவர்களைக் காத்துக்கொள்ள இருக்கையில் நான் ஏன் அக்கறை கொள்ளவேண்டும்?

நான் இறந்துபோயிருந்தால் அப்போது என்ன செய்வார்கள்?'' என்றார்.

எனக்கு ரத்தம் குபீரென்றது. வெடுவெடுப்பாகவே, "நீங்கள் இறந்தொழியவில்லையே!'' என்றேன்.

"இன்னும் போகவில்லையே. ஆனால் இதற்கும் அதற்கும் ஒரு வித்தியாசமும் இல்லை. நான் இருப்பதும் ஒன்றே; இறப்பதும் ஒன்றே. எதன்பேரிலும் எனக்குப் பற்றுதல் இல்லையே. ஜீவராசிகளின் விதாய கர்த்தாவான ஸர்வேசுவரன் எல்லாவற்றையும் பார்த்துக்கொள்ளும்போது மனுஷ்யனுக்கு அங்கே எந்தவிதமான உரிமையும் இல்லை'' என்றார்.

எனக்கு உள்ளுக்குள் எரிச்சலே. "நீங்கள்தாம் முன்பே சொல்லி இருக்கிறீர்களே, பிரபஞ்சமே மாயை, பொன்மான் என்றெல்லாம்! நீங்கள் தேடிக்கொண்டு அலையும் வஸ்துதான் என்னவோ? வெறும் கானல் நீரோ, மருளோ!'' என்றேன்.

இதற்கு அவர் சிரித்தாரே ஒழிய வேறு எதுவும் புகலவில்லை. மீண்டும் ஆரம்பித்தேன்:

"நிச்சயமாகச் சொல்வீர்களா, கடவுள் ஒருவர் இருக்கும்பக்ஷத்தில் அவர் எவ்வளவு பெரியவரென்பதை? இந்தச் சூரியகோளம் எவ்வளவு பெரிது தெரியுமா? அதன் காந்தியின் வெம்மைதான் என்ன! இந்தமாதிரி கோடிக்கணக்கான சூரியமண்டலங்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். இன்னும் கண்டு பிடிக்காதவை எவ்வளவோ! எந்தச் சுடரிலிருந்து பொறிகளாகத் தெறித்து இந்தச் சூரிய கோளங்கள் எரிகின்றனவோ அதன்முன்பு நீங்கள் எம்மாத்திரம்? மனத்திற்கு எட்டாத அந்த

விராட்ரூபத்தைக் காணக்கூடிய கண்கள் உங்களுக்கு உண்டா?''

அப்போது அவர் சொன்னதாவது:

"ஸமுத்திரத்தைப் பார்த்திருப்பாய் நீ, நரு! அதன் முழு உருவம் நம் கண்களுக்கு எட்டுகிறதா? கப்பலில் சென்று அதன் பல பகுதிகளைக் கண்ட பிறகே அதன் பூர்ண உருவத்தை நாம் உணர்கிறோம். ஒரே சமயத்தில் பார்க்க முடியாத ஓர் எல்லையற்ற பெருங்கடல் துண்டு துண்டாகப் பார்த்த பிறகே அகண்டமாகப் புலனாகிறது. மனிதனுடைய நோக்கு மிகவும் குறுகியது. ஆனால் மனமோ அவ்வாறல்ல. எதிலும் பரவி நிற்கின்றது அது. கடவுள் எவ்வுருவில் தோன்றுகிறார்? அபூர்வமான ரத்தினத்தை மனத்தின் ஆழத்துள் போட்டுவிடுகிறார். அதனுள் முழுகி எடுக்கிறோம்; உள்ளூறத் தழுவிக் கொள்கிறோம், அந்த ஒப்பிலாமணியை.''

வெகுநேரம் பேச்சற்று அந்த இடத்திலேயே உட்கார்ந்துவிட்டு, "ஆனால் வருகிறேன். உத்தரவு'' என்று எழுந்திருந்தேன்.

நான் போகும்போது பின்னாலிருந்து அவர் மறுபடியும், "ஒரு வார்த்தை கேட்டுவிட்டுப் போகிறாயா?'' என்று அழைத்தார்.

"சொல்லுங்கள்'' என்றேன்.

"வீட்டிலே குழந்தைகள் எல்லாம்...'' என்று அவர் இழுக்கவே நான், "குழந்தைகள் சௌக்கியமே. மாமியும் சௌக்கியமாகத்தான் இருக்கிறாள்'' என்றேன்.

"என்மேல் அவள் ரொம்பக் கோபித்துக் கொண்டிருக்கிறாள்போல் இருக்கிறது?'' என்றார்.

"அப்படி ஒன்றுமில்லை. ஹிந்து தர்மத்தினின்றும் வழுவாது இருக்கும் பெண்மணிகள் அப்படி ஒருகாலும் கணவன்மீது வெறுப்புக்கொண்டு இருக்கவேமாட்டார்கள்" என்றேன்.

விந்தையானது மானிடரின் உள்ளம்!

மாமியைப்பற்றிக் கூறியும், குழந்தைகளின் பேச்சை எடுத்தும் அவருடைய தவ ஒழுக்கத்தைக் கெடுக்க என் மனம் இசையவில்லை.

## அத்தியாயம் 4

சில மாதங்களுக்குப் பின், கோடை விடுமுறைக்குச் சில தினங்களுக்குமுன்பே, ஹீருவிடமிருந்து கடிதம் ஒன்று கிடைத்தது. தான் காஷ்மீருக்குப் போவதாகவும், என்னையும் தன்னுடன் அழைத்துச் செல்வதாகவும் அவன் எழுதியிருந்தான். கடிதம் கிடைத்த மறுநாளே பஞ்சாப் மெயிலில் செல்ல ஸ்டேஷனை நோக்கிப் புறப் படத் தயாரானேன்.

சட்டென என் மனம் மாறிவிட்டது. கடிதத்தைக் கிழித்து எறிந்தேன். நான் ஸ்டேஷனுக்குப் போகவில்லை. எனக்குச் செல்வத்தினிடத்தில் மதிப்பு உண்டு. ஆனால் செல்வச் செருக்குடையவர்களைக் கண்டால் இகழ்ச்சி. செல்வம் படைத்தவர்களில் நூற்றுக்குத் தொண்ணூறு பேர் டாம்பிகர்களே; தனம் தன்னை ஆளும் அதிகாரி களாக இராதபடி அவர்களையே தன் அடிமைகளாக்கிக் கொண்டு விட்டது; ஹீருவின்மீது எனக்கு நேசம் ஒரு பக்கம் இருந்தாலும் அவன் பணக்காரன் வீட்டுப் பிள்ளை அல்லவா? அவன்மட்டும் இந்தப் பணம் என்னும் பேயைக் கும்பிடுகின்றவனாயிருந்தால்! காஷ்மீர்ப் பிர யாணத்திற்காக எனக்கு அவன் செலவுசெய்யும் தொகை இப்போது வட்டியும் முதலுமாய் என் தலைக்குமேல் ஏறியிராதா? காஷ்மீரின் இயற்கை எழிலைக் காணப்போய் ஹீருவைப் போன்ற சுந்தரபுருஷனை நான் இழக்க மாட்டேன்.

சில மாதங்களுக்குப் பிறகு ஹீருவே என்னைப் பார்க்க வந்தான். அறையில் என்னவோ எழுதிக்கொண் டிருந்தேன். என் அம்மான்சேய் வந்து, "யாரோ ஒருவர் உன்னைக் காணவேண்டுமாம். என்ன வசீகரமான தோற்றம் அவருக்கு! என்ன என்னவோ சாமான்கள் கொண்டு வந்திருக்கிறார்" என்று ஸமாசாரம் எட்ட விட்டான்.

எழுந்து வெளியே வந்து யாரென்று பார்த்தேன்— ஹீரு; கல்கத்தா நகரில் வாழும் தனவந்தன் புதல்வனும் சுகபுருஷனுமான ஹீருதான். புதுமை உடுப்பிலும் இளமையின் முதல் மலர்ச்சியிலும் காட்சி அளிக்கும் ஹீருவைப் பார்த்து நான் மயங்கியே போனேன்.

என்னைப் பார்த்ததும் அவன், "நரூ, அப்படியே இரு. என்னைக் கண்டு ஆச்சரியம் அடைந்திருக்கும் நிலையில் உன்னை ஒரு படம் பிடிக்கவேண்டும்" என்றான்.

ஒரு காமிரா அவனிடம் இருந்தது. அவன் வாஸ்தவ மாகவே என்னைப் படத்தில் பிடித்துவிட்டான். சிரிப்புத் தவழும் முகத்துடன், "கடைசியில் ஒரு 'பில்ம்' பாக்கி இருந்ததடா" என்றான்.

நானும் சிரித்தபடியே, "கண்ணுக்கு இனிய காஷ் மீர்க் காட்சிகளைப் படம் எடுத்த பிறகு, அதற்குத் திருஷ்டிபரிஹாரமாகவா கன்னங்கறேலென்று இருக்கும் என்னைப் பிடிக்கிறாய்?" என்றேன்.

'ஹஹ்ஹ' என்று அவன் உடல் குலுங்க நகைத் தான். "இந்த அபூர்வமான யுக்தி உனக்குத்தான் தோன்றும். அப்படித்தான் வைத்துக்கொள்ளேன், நரூ" என்றான்.

"ஏன்?" என்றேன்.

"அதை அப்புறம் சொல்லுகிறேனே" என்று கூறிய தும் வீட்டில் இருக்கும் என் உறவினர்கள் பக்கமாகத் திரும்பினான். மாமா என்னைப் பார்த்து, "நரூ, வந்தவர் களை உபசரிக்க வேண்டாமா? ஏதாவது கொண்டுவந்து கொடு. வீட்டில் எல்லோருக்கும் உன் ஸ்நேஹிதனை அறிமுகப்படுத்து" என்றார்.

ஹீரு உள்ளே வந்து அம்மாவுக்கு வணக்கம் செலுத்திவிட்டு, "உங்களைப் பார்த்ததும் எனக்கு நருவின் மேல் பொறாமை ஏற்படுகிறதே" என்றான்.

என் தாய் பெருமூச்சுவிட்டு, "அம்மாவென்று ஒருத்தி என்றைக்குமாடா அப்பா இருப்பாள்? அவள் போய்விட்டதனால் வீடு வாசலைக்கூட யாராவது துறந்து போவார்களா? பூஜாவின் போதும் நீ ஊருக்கே வரவில்லை" என்றாள்.

ஹீரு இளநகையாட, "அம்மாவின் மடியிலிருந்து விடுதலை பெற்றதும், உலகத்தைச் சுற்றித் திரியவேண்டு மென்னும் ஒரு பித்து என்னைப் பிடித்துக் கொண்டது, அம்மா. எவ்வளவோ இடங்கள் சுற்றிப் பார்த்துவிட் டேன். இன்னும் என் ஆசை அடங்கினபாடில்லை. சின்னக் குழந்தைக்குக் கை கால் சுவாதீனத்திற்கு வந்தால் அது நடக்கப் பிரயத்தனப்படுகிறது. புழுதியில் அளைவதே அதற்கு இன்பமல்லவா?" என்றான்.

அன்று மாலைப் பொழுது கங்கையின் கரையோர மாக உலாவச் சென்றிருக்கையில், "காஷ்மீருக்குப் போயிருந்தாயே, என்ன என்ன அதிசயங்களைக் கண் டாய், அங்கே? சொல்" என்று அவனைக் கேட்டேன்.

"காஷ்மீரின் அற்புதக் காட்சிகளைவிடக் காஷ்மீர அப்ஸரிகளின் ரூபலாவண்யமே என்னை மிகவும் கவர்ந்து

விட்டது. அவர்கள் கண்களில் துடிக்கும் ஒளிக்கு எதிரே பளிங்கு போன்ற அந்நாட்டு ஸரோவரங்கள்கூட மங்கிப் போகும். தூய வெண்ணிறமுடைய அவர்களுடைய மேனி அழகைவிடப் பனி தோய்ந்த அந்நாட்டின் இயற்கையின் சோபை அவ்வளவு பிரமாதமாகத் தோற்ற வில்லை எனக்கு.''

நான் வியப்புற்று அவனையே பார்த்துக்கொண்டிருந் தேன். "காமிராவில் நான் வரிசையாக அந்நாட்டு அரம்பையரைத் தினுசு வாரியாகப் பிடித்து வைத்து இருக்கிறேன். கடைசிப் படம் உன்னைப் பிடித்தேன். அவர்களோடு உன்னையும் சேர்த்ததைத் திருஷ்டி பரிஹார மாகவோ வேறு எதுவாகவோ வேண்டுமானாலும் வைத்துக் கொள்'' என்றான்.

நான் சிரித்துவிட்டு, "ஆனால் நீ அவர்களைச் சும்மா பார்த்ததோடு நிறுத்திவிட்டாயா?'' என்று இழுத்தேன்.

"இல்லை, காதலும் கொண்டேன்; பெரிய ஏரி ஒன்றில் எங்கள் படகுக்காரனுக்கு ஒரு பெண். யுவதி; இணையில்லாத அழகி. அவள் என் முகத்தைப் பார்த்துத் தன் மனத்தைப் பறிகொடுத்தாள். ஒரு நாள் ஒரு புஷ்பச் செண்டை அவள் பிரேமையின் பரிசாக எனக்கு வழங் கினாள். அதற்குப் பிரதியாக எதுவும் தர என்னால் இயல வில்லை. எனக்குத் தைரியமில்லை. அதனால் முடிந்தவரை அவளைப் பல விதமாகப் படம் பிடித்துக்கொண்டேன்'' என்றான் ஹீரு.

ஜேபியிலிருந்து அவன் ஒரு காகித உறையை வெளியே எடுத்துச் சின்னஞ் சிறிய பல போட்டோப் படங்களை எனக்குக் காண்பித்தான். நான் அவைகளை விழுங்கி விடுவதுபோல் பார்த்தேன். அப்போது ஹீரு,

"அவளுடைய திவ்யமான முகத்தைப் பார்க்கப் பார்க்க நான் என்ன நினைத்துக்கொள்வேன் தெரியுமா? 'பாரத நாட்டின் மன்னனாய் ஏனோ இராமற் போய்விட்டோம்! காஷ்மீரின் அதிபதியாகவாவது இராமற் போனோமே!' என்றுதான். அந்த அதிருஷ்டம் இருந்தால் அந்நாட்டு ஏரியில் செவேலென்று பூத்திருக்கும் பத்ம மலர்களைப் பறிக்க வேறு எவருக்கும் உரிமை இருந்திராதே. இவ்வாறு அவளுடைய ஆசைமுகத்தைக் காணும் போதெல்லாம், போன ஜன்மத்தில் ஆலம்கீர் நானாகவும், கருவிழிக் காஷ்மீர மடந்தையான பேகம் அவளாகவும் நான் கற்பனை செய்துகொள்வதுண்டு" என்றான்.

படங்களை ஒவ்வொன்றாகப் பார்த்ததும் ஹீருவிடம் அவற்றைத் திருப்பி, "இதில் ஒன்று எனக்குத் தருவாயா?" என்று கேட்டேன்.

"முடியாதே! அவளுடைய ஒவ்வொரு கோலமும் எனக்கு வேண்டுமே, நரூ" என்றான் ஹீரு.

"ஏன்? உன் மனத்துள்தான் பதிந்து இருக்கிறதே அவளுடைய உருவம். ஒன்று எனக்குக் கொடுத்து விடுவதனால் ஒன்றும் முழுகிப் போய்விடாது" என்றேன்.

"மனம் என்பது அவ்வளவு சுலபமான இடமா? வனத்தைவிட வெகு சிக்கலானது. இன்று காட்டில் ஓங்கி வளர்ந்திருக்கும் ஒரு பெரிய மரம், பத்து வருஷ காலம் கழித்து மற்றொன்று தோன்றியவுடன் மதிப் பற்றுப் போகிறது. குன்றிப்போய் அது பட்டுப்போகும் நிலைமைக்கும் வருகிறது" என்றான்.

"ஆனால் சக்ரவர்த்தி ஆலம்கீரின்மேல் குற்றம் கூறு வதில் பயனில்லை. நீலவிழிக் காஷ்மீர் பேகத்தின்மீது

பிறந்த மோஹம் நாளடைவில் வெறுப்பாக மாறினால் அதற்கு அவன் ஜவாப்தாரியா என்ன?" என்றேன்.

"இல்லையே; அவன்மேல் நான் குறைகூறவில்லை. அவனை மாத்திரம் ஏன், ஸதியின் சவத்தைத் தோள்மீது போட்டுக்கொண்டு வெறி பிடித்துத் திரிந்த சிவபிரானைக் கூட, கௌரியின்மேல் உள்ள அளவற்ற ஆசையினால் தம் ஆத்மாவையே விற்றதற்காக, நான் தூஷிக்க வில்லையே!"

நான் வியப்பின் மிகுதியால் அவன் முகத்தையே நோக்கியவண்ணம், "பணச்செருக்கடா, உம்......செல்லப் பிள்ளை—நீ அப்படித்தான் சொல்லுவாய்" என்றேன்.

"இதை வெறும் 'மோஹம்' என்று எப்படிச் சொல்வது? செக்கோவின் 'டார்லிங்'கில் அடங்கிய கருத்து மோஹமா, அல்லது காதல், அன்பு, பாசம் இவை மூன்றும் சேர்ந்த ஓர் உணர்ச்சியா? நரூ, எல்லாம் ஒன்றே; பல கோணங்களிலிருந்து தென்படும் ஒரே வஸ்துவின் உருவங்கள். பெண் இனத்தில் மட்டுமல்ல, ஆண்கள் பெண்கள் எல்லாரிடத்திலும் செக்கோவின் 'டார்லிங்'கை நாம் காணலாம்."

இதற்கு மேல் என்னால் இருக்கமுடியவில்லை. "ஹீரூ, கோபித்துக்கொள்ளாதே. ஒன்று சொல்லுகிறேன். உன் மீது எனக்கு அசூயை உண்டாகிறது. இருளுக்கும் ஒளிக்கும் உள்ள வித்தியாசத்தை அறியும் சக்தியைக்கூட நீ இழந்துவிட்டாயே!" என்றேன்.

அவன் சிரித்துக்கொண்டே, "ஆனால் அனாவசியமாக என்மேல் கோபங்கொண்டாய். ஏனென்றால், கனத்த அந்தகாரம், ஜாஜ்வல்யமான ஒளி இவ்விரண்டும் ஒரே காரியத்தைத்தான் செய்கின்றன. இவ்விரண்டின் எதிரே

நம் கண் பார்வை செயலற்றுப் போகிறது. அதனுல் இவ்விரண்டிற்கும் யாதொரு வேற்றுமையும் இல்லை; பேதம் என்னவோ உன்னிடத்திலும் என்னிடத்திலுந் தான்" என்ருன்.

நான் அவனேடு தர்க்கம் புரியவில்லை. மறுதினமே ஹீரு போய்விட்டான். கொஞ்சநாளைக்கெல்லாம் அவன் சீமைக்குப் போய்விட்டதாகச் செய்தி வந்தது.

ஒரு வருஷம் கழித்து அவனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. நீண்ட லிகிதம். காகிதத்தின் மடிப்பில் ஏழெட்டுப் போட்டோப் படங்கள். அவற்றுள் ஒன்றை எடுத்துப் பார்த்தேன். அந்தக் காஷ்மீரத்துக் கட்டழகியின் படம். எல்லாம் அவளுடைய படங்களே. கடிதத்தைப் படித்தேன்.

"நரு!

நீ ஒரு சமயம் இந்தக் காஷ்மீர அப்ஸரியின் படத்தை விரும்பிக் கேட்டதுண்டு. அன்று அதைக் கொடுக்க என் மனம் மறுத்தது. இன்று அவளுடைய எல்லாவிதப் படங்களையும் உனக்கு அனுப்பியுள்ளேன். நண்பா, மனமென்னும் காட்டில் ஒன்ருேடொன்று சிக்கிக்கிடக்கும் பச்சைக் கொடியின் ஆயுள் முடிந்துவிட்டது. அது வாடி வெறும் சருகாய் நிற்கிறது. அந்த உலர்ந்த கொடியைத் தீக்கு இரையாக்காமல் உன்னிடம் அனுப்புகிறேன். உனக்கு அது பயன்படலாம். காட்டில் புதிதாகத் தளிர்விடும் மற்ருெரு கொடியின் பாசத்தில் என் மனம் கட்டுண்டது. இதற்கு மேல் எழுத அவகாசமில்லை.

இங்ஙனம்,

ஹீரு."

ஹீரு செய்யத் தவறிய ஒரு காரியத்தை நான் செய்து முடித்தேன். படங்களை ஒவ்வொன்ருக அக்கி

னிக்கு அர்ப்பணம் செய்தேன். நான் இதை ஆதாரமாக வைத்து எழுதிய ஒரு கதையின் பின்னுரையில் பின் வருமாறு விஷயத்தை விளக்கினேன்:

"அழகியின் சவதேகம் சிதையில் வெந்து சாம்ப லாகிறது. அவளுடைய காதலன் அவளைக் காண மயானம் வரைகூட வரவில்லை. அதனால் அவளுக்கு நானே ஈமக் கிரியைகளைச் செய்கிறேன். இணையற்ற அவளது மேனி பிடி சாம்பலாகிறது. நான் அதையே இமைகொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிறேன்."

காஷ்மீர அரம்பையை எரித்துப் பொடியாக்கிய கதை இலக்கிய உலகில் எனக்கு வெற்றியைத் தந்தது. அந்தக் கதையைப் புகழாதவரே இல்லை.

இதற்குப் பிறகு ஊருக்கும் எனக்கும் உள்ள சம்பந்தம் நின்றுவிட்டது. ஏதோ விசேஷ அலுவலாய் அம்மா ஊருக்குப் போனாள். திடீரென, "அம்மா வுக்குக் காலரா; உடனே புறப்பட்டு வா" என்று தந்தி வந்தது.

வெட வெடவென்று என் உடல் நடுங்கிற்று. எல்லாம் தலைகீழாய்ச் சுழல்வது போன்று இருந்தது. இவ்வுலகின் வைசித்திரியமும் ஒளிமயமான தினங்களும் நொடிப் பொழுதில் அர்த்தமற்றவை ஆகிவிட்டன. அன்றுமட்டும் மரணம் என்னை அழைத்திருக்கும் பக்ஷத் தில் நான் இன்பத்துடனே அதைத் தழுவியிருப்பேன்.

அவரவருக்கு அவரவர் அன்னை உயர்ந்தவளே. அப்பேர்ப்பட்ட அலெக்ஸாண்டரைப் பெற்று எடுத் தவள்கூடப் புத்திர வாஞ்சையில், இழிவான ஒருவ னுடைய தாயைவிட எந்த விதத்திலும் உயர்ந்தவளல்ல. ஆனாலும் குணத்தில்—எந்தக் குணவிசேஷத்தால் நாரி

சிறந்த அன்னை ஆகிருளோ அத்தகைய சிறப்பில்—என் தாய்க்கு எவரும் இணையே இல்லை.

நான் மிகைப்படுத்திக் கூறுவதாகப் பிறர் கருதலாம். ஆனால் என்வரைக்கும் இந்த வார்த்தை ஓர் உத்தமமான ஸத்யம். பைத்தியம் பிடித்தவனைப்போல் ஊருக்கு ஓடினேன் நான். கிராமத்துள் நுழையும்போது எனக்குக் கால் எழவில்லை. கெட்ட செய்தி ஏதாவது காதில் படுமோவென்ற சங்கையே என் மனத்துள் பல திகில்களை விளைவித்தது. நான் விரும்பாத ஒரு ஸமாசாரம் யார் வாயிலாவது வந்துவிடப் போகிறதே என்று மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டேன்.

ஆனால் கிராமத்தில் மனுஷ்யர் ஏது? குறுகி நீண்டிருக்கும் கிராமத்தெரு ஜன சந்தடியற்று இருந்தது. இருபுறமும் உள்ள வீடுகளில் ஓர் அரவமும் கேட்கவில்லை. நாய்கள் இரண்டொன்று என்னைப் பார்த்தவுடன் குரைத்துக் கொண்டே ஓடின. ஊரே களையற்று அழுது வடிவது போல்தோன்றிற்று. வீட்டுக்கதவண்டை வந்து, "அம்மா" என்று கூப்பிட்டேன்.

வீட்டிலிருந்து என்னுடைய சித்தியும் நிசாநாத பாபுவின் மனைவியும் வெளியே வந்தனர்.

குழப்பத்துடன் நான், "அம்மாவுக்கு எப்படி இருக்கிறது?" என்றேன்.

வாடிய முகத்துடன் சித்தி, "வா, அந்த அறையிலேயே இருக்கிருள்" என்ருள்.

அறையினுள் சென்று என் தாயைப் பார்த்தவுடன் நான் ஸ்தம்பித்து நின்றேன். என்னுடைய அம்மாவா இந்தமாதிரி உரு மாறிவிட்டாள்!—"அம்மா.....அடி அம்மா!" என்று கதறி அழுதேன். ஜாடைசெய்து

அம்மா என்னை, "அழாதே" என்று தடுத்தாள். பலஹீனமான குரலில், "என் கிட்டே வராதேடா, அப்பா.........ரொம்பப் பொல்லாத நோய்; தொத்திக் கொள்ளும்" என்ருள்.

எனக்குக் கண்ணீர் தடையை மீறி வந்தது. வேதனை நெஞ்சத்தில் கடைய, "உனக்குச் சுச்ருஷை செய்யாமல் வேறு யாருக்குச் செய்வது, அம்மா?" என்றேன்.

"தைரியமாக இரு. மனசைத் திடப்படுத்திக் கொள். உன்னை இந்த வியாதி தொத்திக்கொள்ளாத விதமாக ஜாக்கிரதை எடுத்துக்கொண்டு வந்து எவ்வளவு வேண்டுமானாலும் செய்யேன். அப்பாடா! கடைசியில் உன் கை என்மேல் பட்ட பிறகுதான் உயிரை விடவேண்டு மென்று பிடித்துக் கொண்டிருக்கிறேன்" என்ருள். மிகவும் சிரமத்துடன் அவள் நின்று நின்று பேசினுள். கடைசியில், "கொஞ்சம் ஜலம்" என்று கேட்டாள். வரவர அது மூக்கு ஸ்வரமாக மாறியது. அதுவும் அடங்கிக்கொண்டே வந்தது.

அன்றை இரவு நிகழ்ச்சியின் நினைவு என் உயிருள்ள அளவும் அழியாமல் இருக்கும். பயங்கரமான ராத்திரி நேரங்களைக்கூடக் கழித்துவிட்டிருக்கிறேன்; இயற்கை யின் கோரமான காட்சிகளை நேரில் பார்த்த அனுபவமும் உண்டு. ஆனல் அன்று இரவு நான் பட்ட வேதனையும், திகிலும் என்றென்றும் பட்டதில்லை. மங்கலாக ஒளி விடும் அறையில் ஒரு பிராணன் தன் கடைசிப் பிரயா ணத்தைத் தொடங்குவதை நானும் என் சித்தியுமே இமை யோடு இமை மூடாமல் நிதானமாகப் பார்த்துக் கொண் டிருந்தோம்.

சாயந்திரமே மாமி—நிசாநாத பாபுவின் மனைவி—தன் இடத்திற்குப் போய்விட்டாள். போகும்போது தவறு செய்தவளைப்போல், "நரூ,......வீட்டைக் கவனிக்க வேண்டும் அல்லவா? மாமா எங்களை நடுத்தெருவில் விட்டு விட்டுப் போனதுதான் உனக்குத் தெரியுமே" என்றாள்.

அச்சமயம் அவளுடைய கண்களில் நீர் நிறைந்தது. "மாமி, நீங்கள் போய் வாருங்கள். இதுவரை நீங்கள் என் தாய்க்குச் செய்த உதவி என்றைக்கும் கவனம் இருக்கும்" என்றேன்.

மாமி காலம், இடம் மறந்தவளாய், "அப்பா நரூ, அம்மா சௌக்கியமாக எழுந்திருக்கட்டும். அப்புறம் சொல்லுகிறேன். என்றைக்கும் கவனம் இருக்கும்படியானது உன்னால் ஆகவேண்டிய ஒரு காரியமே. நான் செய்த உதவிக்கு அதுவே பிரதிபலனாகும்" என்றாள்.

இடம் அறியாமல் மனம்விட்டுச் சொன்ன வார்த்தை எந்நிலையிலும் மலர்ச்சியுடன் இருக்கும் அவளது சுபாவத்தை வெளிப்படுத்தியது. மறு கணமே தன் பிழையை அவள் உணர்ந்து வெட்கத்திற்கு ஆளாகி வெளியே சென்றாள்.

யமன் அம்மாவின் தலையண்டை வந்து நின்றான். ஒவ்வொருவருக்கும் கடைசி நேரத்தில் இப்படித்தான் அவன் வருவான் போலும்! எங்கே சந்தடி அதிகமோ, எங்கே போகிற பிராணனைச் சூழ்ந்து ஜனங்கள், "ஐயோ ஐயோ" என்று அரற்றுகிறார்களோ, அந்த இடத்தில் அவன் தன்னைக் காட்டிக்கொள்ள மாட்டான். அறை முழுதும் அவன் விடும் மூச்சினாலும் அவனது மணத்தாலும் அவனது இருண்ட சாயையினாலும் பயங்கரமாகத் தோற்றியது.

நிச்சப்தமாய் உடலை விட்டு உயிர் பிரிவதைக் கவனிக்கத் தொடங்கினேன்.

"யாரடா, தலையண்டை நிற்கிறவன்...?" என்று அம்மா குழறினாள்.

திடுக்கிட்டு எழுந்தேன். பயத்தினால் என் ரோமம் சிலிர்த்தது. "யாரம்மா? யாரையும் காணோமே?" என்றேன்.

மரணவேதனைக்கிடையிலும் அம்மா சிரித்தாள்.

"உன் கண்ணுக்குத் தெரியாதடா. நான் இதோ பார்க்கிறேனே" என்றாள். மீண்டும் மிகவும் சளைத்தவளாய், "நரூ! அப்பா—என் ஒரே கோரிக்கை இதுதான்: என் வயிற்றில் பிறந்த பிள்ளை; நீ தங்கமானவன் என்று பேர் எடுக்கவேண்டும்" என்றாள்.

அன்று இரவே கடைசி யாமத்தில் என் அன்னையின் பிராண தீபம் அணைந்து விட்டது. அவள் இறந்த இரண்டொரு நாளைக்கெல்லாம் என் சித்தியும் அவளைப் பின் தொடர்ந்தாள்.

கிராமத்தில் இந்த நோய்அரக்கி கோடையின் வெம்மைபோல் கொதித்தெழுந்தாள். வீடுதோறும் அழுகையும் ஓலமுமே. ஊரைவிட்டு ஜனங்கள் ஓடத் தலைப்பட்டனர். அந்த அரக்கி முதல் முதலில் ஹீருவின் வீட்டில் கால் எடுத்து வைத்ததாக வதந்தி. அந்தக் குடும்பத்தை அப்படியே துடைத்துவிட்டாள். ஹீருவின் ஒரே தம்பி, அவன் சிற்றப்பாவின் மனைவி, அவருடைய பிள்ளை ஒருவரையும் விடாமல் வாரிக்கொண்டு போய் விட்டாள். அவ்வளவு பெரிய வீட்டில் எஞ்சி நின்றவர்கள் ஹீருவின் கிழச் சிற்றப்பாவும், அவ்வளவு சொத்துக்

கும் உரியவனும் தேசாந்தரம் போயிருப்பவனுமான ஹீருவுமே.

அதிசயமானது மானிடரின் மனம். துக்கம் விசாரிக்க என்னிடம் வந்த ஒருவர் பேச்சோடு பேச்சாக ஹீருவின் வீட்டாருக்கு ஏற்பட்ட பெருத்த நஷ்டத்தைச் சொல்லும்போது, "ஹீரு கொடுத்துவைத்தான். அத்தனைச் சொத்துக்கும் இப்போது அவன் ஒருவனே அதிகாரி அல்லவா!" என்றார்.

மற்றொருவர், "இதென்ன அதிசயம் போ! உங்கள் ராஜாராமபுரத்து ராய்வீட்டார் சொத்து, யாரோ தூர உறவாம், அவனுக்குப் போயிற்று. குளிர்காலத்தில் உடம்பை மூடிக்கொள்ள ஒரு கந்தைகூடக் கிடைக்காத ஒரு பரமதரித்திரத்திற்கு வாய்த்ததே; என்னவென்று சொல்வது இதை?" என்றார்.

வேடிக்கையானது இந்த மானிடரின் கல்மஷமான மனப்போக்கு. நிசாநாதபாபுவைத் திரும்ப அழைத்து வரவேண்டுமென்று ஒரு சங்கற்பம் இருந்தது எனக்குள். ஆனால் அதை விட்டொழித்தேன். அன்னையை இழந்த பெருந்துயரே எனக்கு ஸம்ஸாரத்தின்மேல் வெறுப்பை மூட்டியது.

ஹீருவின் சிற்றப்பா என்னைக் கூப்பிட்டு அனுப்பினார். நான் லஜ்ஜைப்பட்டுக் கொண்டேன். அனைத்தும் இழந்த இம்மனுஷ்யனைப்பற்றி நான் முன்பே கூறி இருக்கவேண்டும். சாவு என் வருங்காலத்தையும் நம்பிக்கையையும் அழிக்கா விட்டாலும், ஹீருவின் சிறிய தந்தையினது எதிர்காலத்தை அறவே அழித்துவிட்டது. அவரை நினைக்கும்போதெல்லாம் ஒரு மரத்தின் கவனமே வரும். தனிமையாகக் கவைகளெல்லாம் துண்டிக்கப்பட்டு

நிற்கும் அடிமரம். கிளைகள் ஒவ்வொன்றாக வாடி வதங்கிப் பட்டுப்போய் நீண்ட நாளைக்கு அப்பால் மரமே அழிந்து விடுகிறது—ஹீருவின் சிற்றப்பா இருந்த நிலையும் இதையே ஒக்கும்.

*          *          *

அவர் என்னை, "உன் அம்மாவும் சித்தியும் போய் விட்டார்களாமே? அப்பனே" என்று விசாரித்தார்.

ஒரு பெருமூச்செறிந்து நான், "ஆமாம், உங்களுக்கு இந்தத் தள்ளாத வயஸில் இந்தமாதிரி ஏற்பட வேண்டுமா?" என்றேன்.

"எல்லாம் தலை எழுத்து. அதை மீறமுடியுமா?" என்றார் அவர்.

அவருடைய கண்கள் இரண்டும் கலங்கின. உதடுகள் அடக்கிய அழுகையினால் துடித்தன. ஆறுதல் கூற ஒரு மொழியும் எனக்குக் கிடைக்கவில்லை. கீழே தரையை நோக்கியவண்ணம் இருந்தேன்.

வெய்துயிர்த்துக் கண்களைத் துடைத்துக்கொண்டு அவர், "இந்தக் கஷ்டத்தைப் பார்த்தாயா? எல்லாம் போயும் சொத்து முழுவதையும் நான்தானே தலையில் சுமந்து கொண்டிருக்கிறேன்? கோர்ட்டு வழக்கு எழவெல்லாம் கவனிக்காமற் போனால் வேறு வழி? அதற்கும் நான் ஒருவனே பிணைப்பட்டிருக்கிறேன்" என்றார்.

"வந்துவிடும்படி ஹீருவுக்குக் கடிதம் எழுதுங்களேன்" என்றேன்.

"எழுதினேன். அப்புறம் யோசித்துப் பார்த்தேன். அவன் படிப்பின் வாயில் மண் விழுமே; அதோடுகூட இப்போது யுத்தம் நடக்கிறது. எங்கே பார்த்தாலும்

கப்பல் மூழ்கிவிடுகிறது. இந்தச் சமயத்தில் எப்படி அவனை வரவழைப்பது?" என்றார்.

அப்போது முதல் உலக மகாயுத்தம் ஆரம்பமாகி விட்டது. எம்டனின் உபத்திரவத்தினால் இந்து மஹா ஸமுத்திரத்தில் அமைதிக் குறைவு. அதற்குமேல் அவர், "ஒரு காரியமாக உன்னை அழைத்தேன், அப்பா" என்றார்.

நான் ஆவலுடன், "என்ன?" என்றேன்.

"உனக்குக் கவனம் இருக்கும்; இரண்டொருதடவை என்னிடத்தில், கடனாக ரூபாய் வாங்கிக்கொண்டிருக் கிறாய்—அதாவது உன் தகப்பனார் பட்ட கடன். இப் போது திடீரென உன்னைக் கேட்கவில்லை. வட்டி ஏறி இருக்கிறதென்று சொன்னேன்" என்று கூறிக் குமாஸ் தாவைப் பார்த்து, "ஓய், நரேச் முகர்ஜியின் 'பாபத்'தை எடும்" என்றார்.

குமாஸ்தா கணக்கை என் எதிரே போட்டார். ஏற்கனவே அது தயாரிக்கப்பட்டிருந்தது. என் தகப்ப னார் வாங்கிய கடன்தொகை எண்ணூறு ரூபாய். இன்று வரை அவரும் என் தாயும் ஆயிரத்தைம்பது ரூபாய் அடைத்து இருக்கிறார்கள். நானூற்றுக்குமேல் நிற்கிறது கடன் பாக்கி.

எனக்கு வியப்பாக இருந்தது. என் முகத்தைக் கவனித்து அவர் என் எண்ணத்தை ஊகித்தவராய், "வட் டிக்கு வட்டி ஆனதால்தான் இப்படி ஆயிற்று. வருஷக் கடைசியில் சேருகிற வட்டியை அசலோடு சேர்த்துக் கொள்ளவேண்டியது" என்றார்.

"சரி. எனக்கு அவகாசம் கொடுங்கள். சீக்கிரத்தில் கடனைத் தீர்த்துவிடுகிறேன்."

"வேண்டிய அளவு தருகிறேன். எங்கள் நிலத்திற்குப் பக்கத்தில் உங்களுடையது இருக்கிறதே; அதை விற்றுவிடலாமே. ஹீருவின் ஸ்நேஹிதன் நீ. அதுவே போதும், உன் கடனைத் தீர்க்க. நிலம் அப்படி உயர்ந்ததுமன்று. உன் விஷயத்திற்குக் கொஞ்சம் வேண்டுமானால் விலையைத் தூக்கி வைக்கிறேன்."

அதே க்ஷணம் எனக்கு உலகத்தின்மீது கசப்பு மூண்டது. "அப்படியே ஆகட்டும். ஒரு விஷயம் யோசிக்கவேண்டியிருக்கிறது: நான் பாட்னாவுக்குப் போய்ப் படிக்க வேண்டுமென்று அம்மாவும் கோரியிருந்தாள். நிலத்தோடுகூட என் தோட்டம் முதலிய எல்லாவற்றையும் ஒரேவழியாக நீங்களே ஒரு விலை பேசி வாங்கிக்கொண்டால் ரொம்ப அனுகூலமாயிருக்கும்" என்றேன்.

"சௌகரியப்பட்டால் வாங்கிக்கொள்கிறேன். வீட்டைக்கூட விற்றுவிடுகிறாயா என்ன?" என்றார் அவர்.

"இல்லை. அது இருக்கட்டும். எப்போதாவது ஊருக்குத் திரும்பினால் பிதிரார்ஜித வீடென்று இருந்தால் தலையைச் சாய்க்க ஓர் இடம் இருக்குமல்லவா?" என்றேன்.

"இருக்கட்டும், அப்பா. இருக்கவேண்டியதுதான். உன் தாயின் சிராத்தம் முடிந்தபிறகு எல்லாம் யோசிக்கலாம்; போய்வா" என்றார்.

திரும்பி வரும்போது வழியில், 'இவர் காய்ந்து போன மரமல்ல; வேர் இன்னும் ஆழமாகத் தரையினுள் படர்ந்து, பூமியின் ஸாரத்தை உறிஞ்சுகிறது' என்று நினைத்துக்கொண்டேன். இதை உணர்ந்தபிறகே நான் நிசாநாத பாபுவை ஸம்ஸாரத்திற்குத் திருப்பும் தவறான நோக்கத்தை விட்டொழித்தேன்.

மாமி என்னைப் பார்க்க வந்தாள். "எல்லாவற்றையும் நீ விற்றுவிட்டுப் போய் விடுகிறாயே, அப்பா நரூ" என்றாள். அவளது வதனத்தைப் பார்த்தவுடன் இந்த உலகம் மீண்டும் அழகியதொரு பூம்பொழிலாய்த் தோன்றியது.

"வீடுமட்டும் இருக்கும். நடுநடுவே வருவேன், மாமி. உங்களையெல்லாம் மறந்துவிட முடியுமா?" என்றேன். பலபலவென்று அவள் கண்களிலிருந்து நீர் பெருகிற்று. முன்றானையால் அதைத் துடைத்துக்கொண்டு, "உன்னைப்போல் மனமொத்துப் பேசுபவர் எவரும் இந்த ஊரில் இல்லை எனக்கு. அந்தத் தடவை பூஜாவின் போது நீ—" என்று அவள் சொல்லும்போது நான் அதைத் தடுத்து, "என்னை உங்களைச் சேர்ந்தவனாக நினைக்கும்போது அந்த ஸமாசாரத்தை மறந்துவிடுங்கள்" என்றேன்.

அவள் சிரித்துவிட்டு, "மறக்கமுடிகிறதா? அது மனத்தோடேயே பின்னிக்கிடக்கிறதே" என்றாள்.

வார்த்தையை மாற்றுவதற்காக, "மாமா பஞ்சதபஸ் பண்ண ஓரே பித்துக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது" என்றேன்.

மீண்டும் அவளது இதழ்க்கடையில் மெல்லிய சிரிப்புப் பூரித்தது; "இல்லை. அதை அவர் நிறுத்திவிட்டார் என்றாள்."

நான் ஆச்சரியமடைந்து, "என்ன! என்ன! உங்களுடைய பேச்சைக் கேட்டாரா, மாமா? எப்படி மாமி?" என்றேன்.

இடி இடியென்று நகைத்து அவள், "என்னை அல்ப சொல்பமென்று எண்ணிக்கொண்டாயா? உங்கள் மாமா

எனக்குப் புதுப்பெயர் கொடுத்திருக்கிறாரே தெரியுமா? 'மாயக்காரி' என்றுதான்'' என்றாள்.

“எந்த மாதிரி மாயம் செய்து அவரை மயக்கி விட்டீர்கள்? சொல்லுங்கள் அதை.”

வாயில் புடைவைத் தலைப்பைப் பொத்திக்கொண்டு அவள், “உனக்கு வரப்போகிறாளே பெண்டாட்டி, அவளுக்குக் கற்றுக் கொடுக்கிறேன். உன்னிடம் இப்போது சொல்லிவிட்டால் அப்புறம் அந்த வித்தை வீணாகி விடுமே'' என்று சொல்லிவிட்டு வெளிப்பக்கமாகச் சென்றாள். சற்று நேரம் கதவு மறைவில் நின்றுவிட்டுத் திரும்பி வந்து, “உங்கள் மாமாவின் தபஸ் பங்கமாகி விட்டது'' என்று சொல்லி அடுத்த நிமிஷமே அவள் வெளியே போய்விட்டாள்.

*   *   *

சில நாளைக்கெல்லாம் ஹீரு வருகிறானென்று ஸமாசாரம் கிடைத்தது. நான் என் சொந்த ஊரைவிட்டு விலக உறுதியுடன் இருக்கும்போது ஹீரு ஒருகால் வந்து தடுத்தாலும் தடுக்கலாம். நண்பனென்ற முறையில் அவன் என் கடனை ரத்து செய்யலாம். இந்தச் சில தினங்களுக்குள்ளாகவே என் காரியத்தையெல்லாம் விரைவில் முடித்துக்கொண்டேன்.

நான் செல்வதற்கு முன் மாமியைப் பார்க்க அவர்களது வீட்டிற்குப் போனேன். நிசாநாதபாபு தம் சிறுவனை மடியில் வைத்தவண்ணம் பாட்டுப் பாடிச் சீராட்டிக் கொண்டிருந்தார்.

மாமி மறைவாகச் சிரித்துக்கொண்டே தன் புருஷனைச் சுட்டிக்காட்டி, “பார்'' என்றாள்.

மாமி அடைந்த வெற்றியின் விமரிசையை மனத்தில் பதித்துக்கொண்டே வீடு திரும்பினேன். நான் எழுதப் போகும் நூலுக்கு 'விஜயினி' என்ற பெயரையும் சூட்டினேன்.

ரெயில் வண்டியில் வந்து உட்கார்ந்ததும் என் கண்களில் நீர் வந்து மறைத்தது. 'எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவிய' என் நாடு பின்னால் தங்கிவிட்டது.

சந்திரநாதன் தொலைந்து போய்விட்டான். அன்று ஹீருவையும் இழந்தேன். அவன் திரும்பி வருவான்; ஆனால் அவனை நான் சந்திப்பேனோ மாட்டேனோ? நிசாநாத பாபுவைப்பற்றி எனக்கு இனி அக்கறை இல்லை. பாக்கியலக்ஷ்மியான தம் மனைவியின் நிறைகுடத்தின் மகிமையால் அவர் சாந்தம் அடைந்துவிட்டார்.

என் சித்த ஆகாயத்தில் நக்ஷத்திரங்கள் ஒவ்வொன்றாக அஸ்தமனமாயின.

# அத்தியாயம் 5

நீண்ட நாட்களுக்குப் பின், என் மன ஆகாயத்தில் மறுபடியும் கால புருஷ நக்ஷத்திரம் உதயமாவதைக் கண்டேன். சந்திரநாதன் வீட்டைத் துறந்து பன்னிரண்டு களுக்குப் பிறகு, நான் ஊரை விட்டுப் போய் ஒன்பது வருஷங்களுக்குப் பின்பு, திடீரென ஒரு நாள் அவனுடைய செய்தி கிடைத்தது.

அப்போது நான் இலக்கிய உலகில் தலையெடுத்து ஒரு முக்கிய ஸ்தானத்தையும் பெற்றிருந்தேன். வறுமையினின்று மீண்டெழுந்தேன். பிறர் என்னைப் புகழ்வதைக் கண்டு நான் பெருமிதம் கொள்வதும் வரவரக் குறைந்து கொண்டே வந்தது. கனவு உலகில் கண்டதைக் காரியத்தில் பரிணமிக்கச் செய்யும் காலத்திற்கு வந்துவிட்டேன். ஆனால் நடுநடுவே, உண்மையில், இது என்னை ஏமாற்றக் கற்பனை செய்யும் செப்பிடு வித்தையோவென்ற ஐயம் தோன்றும். பலமுறை, 'இதனால் பயன் ஏதாவது ஏற்படுமா?' என்று என் மனத்தை வினவியுள்ளேன். கோடிக்கணக்கான வருஷங்கள் புரண்டு சென்றதும் இம் மண்ணுலகின் ஆயுள் ஒரு நாள் முடிவுறும்; அப்போது எனக்குக் கிடைத்தவை யாவும் சாசுவதமா? உடனே, 'எனக்குப் புத்திமாருட்டமா ஒரு வேளை?' என்றெல்லாம் நினைத்துக்கொள்வேன். ஆனால் வாழ்க்கையின் ஆரம்பத்திற்கு இந்த ஏற்பாடுகள் யாவும் முக்கியமென்றே தோற்றுகின்றன. ஏனென்றால் வாழ்வாவது மாயம் அன்று, பாழ்போவதும் அன்று; அது சாசுவதமானது.

இவ்வாறெல்லாம் சிந்தனைகள் வருவானேன்? என் சொந்த விஷயத்தைக் குறித்து எனக்கு யாதொரு கவலையும் இல்லை. அதைப்பற்றி யோசிக்க வேண்டிய அவகாசம் கிடைக்கும். இன்று என் நினைவுகளை எவர் பொருட்டு அர்ப்பணம் செய்கிறேனே அவர்களே இருள் குவிந்த இவ்வறையின் சாயா படத்தில் உருவு பெற்று என்முன் வரட்டும்.

*            *            *

பாட்னாவை விட்டுக் கல்கத்தாவிற்கு வந்துவிட்டேன். என்னுடைய நூல்களைப் பிரசுரம் செய்பவர் ஒரு நாள் என் கையில் கடிதம் ஒன்றைக் கொடுத்து, "இந்தாரும்: உங்களுடைய நூல்களை ஆவலாகப் படிக்கும் அன்பர் யாரோ எழுதியிருப்பார்" என்று சிரித்தவண்ணம் சொன்னார்.

உறையில் இடப்பட்ட கடிதம் அது; அதைக் கிழித்தேன். ஆத்திரத்துடன், எழுதியவரின் பெயரை முதலில் கவனித்தேன். சந்திரநாதன்! அக்கணமே அவனைப்பற்றிய ஞாபகங்கள் ஒவ்வொன்றாக என் மனத்திடை எழுந்தன. தீர்க்கமான அந்த மூக்கு, தீரம் ஒளிரும் அந்தக் கூர்மையான கண்கள், பரந்த நெற்றியில் ஓடும் அந்த நரம்புக் கிளை—யாவும் என் கண்முன் வந்து நின்றன. இந்த நீண்ட தினங்கள் அவன் என் கண்களில் படாவிடினும் அவனுடைய ஒவ்வோர் அம்சமும் என் கவனத்துள் தெளிவாகப் பதிந்து இருந்தது. லிகிதத்தைப் பிரித்துப் படித்தேன். சந்திரநாதனுடைய பிள்ளைக்கு அன்னப் பிராசனம். அதற்காக அவன் அழைப்பு அனுப்பியிருந்தான்.

"என்னுடைய ஆத்மார்த்த நண்பருள் உன் ஒருவன் நினைவே எனக்கு முன்னால் வந்தது. ஆகவே உன்னை அழைக்கிறேன். அண்ணாவை நான் கூப்பிடவில்லை, அவசியமில்லையென்று கருதியே. நீ ஒருவன் வந்தாலே நான் மிகவும் ஸந்தோஷப்படுவேன்.

இங்ஙனம்,
உன்
சந்திரநாத்."

சந்திரநாதனின் ஞாபகம் வரும்போதெல்லாம் பூவின் சாயலைக் கொண்ட ஹீருவின் முகம் வந்து நிற்கிறது. அவன் சீமைக்குப் போய் விட்டானென்றும் இன்னும் திரும்பவில்லையென்றும் கேள்வி. அவனும் மறைந்து விட்டான். வெகுநாட்கள்வரை ஸமாசாரமே கிடைக்கவில்லை; ஒழியட்டும். சந்திரநாதனாவது சிக்கினானே! அதுவே போதும்.

சந்திரநாதனுடைய அழைப்பை நான் நிராகரிக்கவில்லை. கான்பூருக்குப் பிரயாணமானேன். கடிதத்தின் மூலம் சந்துருவின் இருப்பிடம் தெரியவந்தது. விலாஸம் குறித்தவாறு வண்டிக்காரன் அந்நகருக்குப் புறம்பில், கங்கை நதியின் கரையோரமாக உள்ள ஒரு நேர்த்தியான பங்களாவின்முன் என்னை இறக்கினான். பங்களாவின் முன்புறம் புஷ்பத் தோட்டம். வெளியிலிருந்து பார்த்தபோது வராந்தாவில் அமர்வதற்கான ஸுகாஸனங்கள், ஒரு மேஜை, சுவரில் பெரிய நிலைக்கண்ணாடி, 'ஹாட்' மாட்டி வைக்க மரக்கொக்கி, இன்னும் எவ்வளவோ தென்பட்டன. இவற்றைக் கொண்டு சந்திரநாதன் நல்ல தசையில் இருப்பதாக அனுமானித்தேன். அவனுடைய மதனி ஒரு சமயம், "அவன் மணிமாடம் கட்டிக்கொண்டு சுக

மாக வாழ்வதை நான் தடுக்கவில்லை" என்று சொன்னது அப்போது என் செவிகளில் ஒலித்தது.

வாயிற்கதவைத் திறந்துகொண்டு உள்ளே செல்லுகையில் சங்கடத்திற்குள்ளானேன். இதென்ன, பித்தளைத் தகட்டில் யாருடைய பெயர் அல்லவோ காணப்படுகிறது! 'ஸி. ஸிங்க்.' ஸிங்க் யார்? சந்திரநாதன் சட்டர்ஜியாயிற்றே! ஒரு வேளை தவருக வேறு இடத்திற்கு வந்துவிட்டோமோ வென்று திகைப்புக் கொண்டேன். என்னை ஏற்றிவந்த வண்டிக்காரனை அங்கே யாராவது வங்காளிகள் வாஸம் செய்கிருர்களா வென்று அறிந்து வரும்படி ஏவினேன். அதே சமயம் பங்களாவின் வராந்தாவிலிருந்து படுதாவை விலக்கிக்கொண்டு ஒரு சீக்கியக் கனவான் வந்தார். அவருக்கு வந்தனம் செலுத்தி ஆங்கிலத்தில், "இங்கே யாராவது—" என்று எடுத்தேன். மறுவிநாடி அந்தச் சீக்கியக் கனவான், கண்கள் ஆச்சரியத்திஞல் மலர, "நரேசா!...வாஸ்தவமாக நீதாஞ?" என்று ஓடிவந்தார்.

திகைத்துப் போய் நான் அக்கனவானையே பார்த்துக் கொண்டிருந்தேன். தாடி மீசையோடு இருந்தாலும் அவரிடத்தில் சந்திரநாதனுடைய ஒவ்வோர் அம்சமும் வெளிப்பட்டது; நெற்றியில் உள்ள திரிசூலம் போன்ற நரம்புகூட. ஆனுல் இளம்பருவச் சந்திரநாதனுக்கும் இப்போது காணப்படும் சந்திரநாதனுக்கும் எவ்வளவு வித்தியாசம்! என்னை மார்புறத் தழுவிக்கொண்டு அவன், "சட்டென்று அடையாளம் தெரிந்துகொள்ள முடியவில்லை. நான் சீக்கிய மதத்தைச் சேர்ந்ததனுல் பெயரை மாற்றவேண்டியதாயிற்று—மீரா, மீரா! வா இங்கே; யார் வந்திருக்கிருர், பார்" என்று உட் பக்கமாகத் திரும்பிக் கூப்பிட்டான்.

வெளியே வந்தாள் ஒரு யுவதி; அவள் அபூர்வமான அழகி. முகத்தின் சாயலினால் வடமேற்குப் பிராந்தியத்தைச் சேர்ந்தவளென்று ஊகித்தேன். உடை முழுதும் சீக்கிய மகளிருடையதைப் போலவே விளங்கியது. அரையில் 'பைஜாமா'. உடம்பில் 'பஞ்சாபி' (சொக்காய்). தலையைப் பாதி மறைக்கும் 'ஓட்னு' (போர்வை). பரவசமாகி அவளையே நோக்கினேன். வனப்பிலும், மேனி நிறத்திலும், சரீர அமைப்பிலும் தெய்வப்பாவையோவென்று நினைக்க வேண்டியிருந்தது.

* * * *

நான் இருட்டறையில் இருப்பதைக்கூட மறந்து போனேன். நான் ஸஞ்சரிக்கும் நினைவுலகம் அந்த வட நாட்டு மடந்தையின் பேரெழிலினால் ஒளிமயமாகியது.

அந்த லாவண்யவதி கைகூப்பி என்னை வரவேற்றுத் தட்டுத்தடுமாறும் வங்கமொழியில், "நமஸ்கார்" என்றாள். பிரமை விலகி ஒரு நிலைக்கு வந்தேன். லஜ்ஜை மேலிட்டு நான் ஒரு விதமாகப் பிரதிவந்தனம் செய்தேன்.

"என் மனைவி இவள்: மீரா" என்று சந்திரநாதன் எனக்கு அவளைப் பரிசயம் செய்துவைத்தான். "மீரா, இவர்தாம் என்னுடைய பிராண ஸ்நேஹிதர் நரேச் - நரேச் சந்திர முகோபாத்தியாயர்; சிறந்த எழுத்தாளர். உனக்கு இவர் எழுதிய கதைகளைப் படித்துச் சொல்லியிருக்கிறேனே?—நரூ, மீரா உன்னுடைய கதைகளைப் படிப்பதற்காகவே வங்கபாஷையைக் கற்றுக்கொள்ள ஆசைப்படுகிறாள். உன் கதைகள் என்றால், ஓடி வருவாள் கேட்க" என்றான்.

"என் நல்ல காலம்" என்றேன் சிரித்துக்கொண்டே. "வங்க பாஷையைக் கற்பதனால் இன்னும் எவ்வளவோ

அழகான விஷயங்களை அறியக் கொடுத்து வைக்கலாம். என்னைவிட எத்தனையோ மடங்கு சிறப்பு வாய்ந்தவர்கள் இயற்றிய நூல்களைப் படிக்கலாம்'' என்றேன் மீராவை நோக்கி.

மெல்லிய சிரிப்புடன் மீரா, "அவர்கள் எல்லாரும் எனக்கு எப்போது பரிசயமாவார்களோ?'' என்றாள்.

"நான் செய்த புண்ணியம் உங்களுடைய ஸ்நேஹத்தைப் பெற்றேன். இந்த உலகத்து எழுத்தாளரெல்லாம் உங்களுக்கு நண்பராக வரும் பக்ஷத்தில் நானே எல்லோரையும்விட எழுதுவதில் சிறந்தவனாய்விடுவேன்'' என்றேன்.

"வாஸ்தவமாகவே நீங்கள் எழுதிய கதைகள் யாவும் எனக்கு மிகவும் பிடித்தவை. உங்கள் ஸ்நேஹிதரையே கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்றாள் மீரா.

சந்திரநாதன் வேறு எங்கோ மனத்தைச் செலுத்தியவனாய் எங்களுடைய ஸம்பாஷணையில் சரியாக ஈடுபடவில்லை. எதிரில் இருந்த பாட்டைமேல் கண்கள் நிலைக்க அவன், "நீ எழுதிய விஷயங்களைப் படிக்கும்போது என் பழைய வாழ்வு புதிய உருவுடன் பிரத்தியக்ஷமாகும். பத்திரிகைகளில் உன்னைப் பற்றிய புகழுரைகள் வரும்போது நான் அளவில்லாத மகிழ்ச்சி கொள்வேன். உன் மேல் பொறாமைகூட உண்டாகும். நான் செய்ததெல்லாம் என்ன—?'' என்றான்.

சந்திரநாதனுடைய வாக்கியம் முடியவில்லை; நொடிப் பொழுதில் வெறுப்பிற்குரிய ஒரு நிகழ்ச்சி நேர்ந்தது. பங்களாவின் உட்புறத்திலிருந்து பொம்மைபோன்ற குட்டிநாயொன்று எகிறிக்கொண்டே சந்திரநாதனை நக்கி அவன் தொடைமேல் ஏறியது. சந்திரநாதன் வெறி பிடித்

தவன்போல், அந்த நாய்க்குட்டியின் மென்னியை மிருக பலத்துடன் அழுத்தி அதை வீசி எறிந்தான்.

நிரபராதியான அச்சிறு பிராணி, புரண்டு எழுந்திருக்க முயன்றது. ஆனல் அதனல் முடியவில்லை. அதன் ஒரு கால் முறிந்தே போய்விட்டது. அதன் முகம் எங்கோ பலமாக மோதுண்டதால் ரத்தமயமாயிற்று. நான் திடுக்கிட்டுப் போனேன். சந்திரநாதனுடைய மனேவியின் முகத்தைக் கவனித்தேன். அவளும் பயத்தினல் வெளுத்துப் போய்விட்டாள். கண்களில் நீர் கலங்கியது. சந்திரநாதனுடைய குரூரபாவம் மெல்ல மெல்ல மறைந்து கொண்டே வந்தது.

நீண்ட பெருமூச்செறிந்துவிட்டு அவன் தன் வேலையாளேக் கூப்பிட்டு, "மிருக ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போ, இந்த நாயை! ஜல்தி" என்றதும் என்ன உறுத்தியதோ அவன் உள்ளத்தை, தானே அந்தச் சிறிய பிராணியைக் கையால் அணைத்துக்கொண்டு மெதுவாக வாயிலேக் கடந்து வெளியே சென்ருன். அப்போது அவன் நெற்றியில் உள்ள நரம்புக்கிளே தடித்திருப்பதை நன்ருகக் கவனித்தேன்.

மீரா குற்றம் செய்தவளேப்போல், வாடிய வதனத்துடன், அரைகுறையான வங்கப் பேச்சில் வேலைக்காரனே விளித்து, "ஏ வதன்! அவருக்குக் கைகால் அலம்பிக் கொள்ள ஜலம் கொடு. இதற்குள் நான் டீ போட்டுக் கொண்டு வருகிறேன்" என்ருள்.

"அதற்கு இப்போது அவசரமில்லை. உங்களுடைய பிள்ளையை நான் இன்னும் பார்க்கவில்லை. வாருங்கள், போகலாம்" என்றேன்.

மீரா என்னை உள்ளே கூட்டிக்கொண்டு போய்த் தன் மகனைக் காண்பித்தாள். நவநீதசோரனைப் போன்ற வடிவமுள்ள பலசாலியான குழந்தை. தாயின் தண்மையான சாயலும், சந்திரநாதனுடைய திடகம்பீரமான ஆக்ருதியும் கலந்த சிருஷ்டி. தொட்டிலில் கிடந்தவண்ணம், ஆரோக்கியம் நிரம்பிய அந்தச் சிசு கால்களை உதைத்துக்கொண்டும் விரலைச் சப்பிக்கொண்டும் விளையாடியது. அதன் மாம்பழம்போன்ற கன்னத்தை ஆதரவுடன் தடவிக்கொடுத்து, "ரொம்ப அழகான பாப்பா.—டேய் என்ன பார்க்கிறே? கண்ணே பாப்பா" என்று சொல்லி, அதனுடன் சற்றுக் கொஞ்சினேன்.

ஆதரவு காட்டவே குழந்தையும் கைகால்களைப் பின்னும் பலமாக உதைத்துக்கொண்டு தொட்டிலை அலப்பியது.

மீரா என்னைப் பார்த்து, "பையன் எப்படி இருப்பான் சொல்லுங்கள்? பெரியவனானால் உலகம் அவனிடத்தில் பக்ஷம் காட்டுமா? அல்லது பயப்படுமா?" என்றாள்.

அவள் முகத்தை நோக்கினேன். சற்று முன் அரும்பிய நீர்த்துளி இன்னும் அவளுடைய கண்களில் பளபளத்தது. ஆனால் அவ்விழித்திவலையின் மறைவில் எதையோ எதிர்பார்க்கும் ஓர் உணர்வின் சுடர் ஆடிக்கொண்டிருந்தது. அவள் தன் மகனையே உற்று நோக்கியபோது அதை அடையும் வழியைத் தேடுவதுபோல் இருந்தது. ஜோதிட நூலில், சிசுவின் முகலக்ஷணத்தைக் கொண்டு அதன் பிற்காலத்தை நிர்த்தாரணம் செய்யும் நுட்பங்கள் இல்லவே இல்லை. இருந்தும் நான் அவளைப் பார்த்து, "உலகம் இவனைக் கட்டாயம் போற்றும், மீரா

தேவி! உங்களுடைய சுபாவத்தை இவனும் பெற்று விளங்குவான்'' என்றேன்.

மீராவின் வதனம் பிரகாசமாயிற்று; "இவனுக்கு என்னவென்று பெயரிடுவது? 'குமார் கிஷோர் ஸிங்க்' என்று வைக்கலாமா?'' என்றாள்.

"சௌரியத்திலும், வீரியத்திலும் கார்த்திகேயக் கடவுளைப் போன்று இருக்கவேண்டும்; அக்கடவுளைப் போலவே இளம்பிள்ளையாய் என்றென்றும் எல்லோருடைய அன்பிற்கும் பாத்திரமாவான்.''

மீரா தன் கையாலேயே டீ தயாரித்துத் தந்தாள். அதை அருந்தும்போது, சந்திரநாதன் திரும்பிவந்தான். ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு என் பக்கத்தில் அமர்ந்தான். "சந்திரநாதனுக்கும் ஒரு 'கப்' கொடுங்கள். டீ பருகிக்கொண்டே கொஞ்ச நாழிகை நாங்கள் இருவரும் தமாஷாகப் பேசுகிறோம்'' என்றேன் மீராவை நோக்கி.

மீரா தன் புருஷனைக் கவனித்தாள். சந்திரநாதன், "இன்றைக்கு டீ குடிக்க வேண்டாமென்று விரதம் இல்லை எனக்கு. நரேச் சொல்லுகிறான்; கொடு'' என்றான்.

"ஏன் அப்படி?'' என்றேன்.

சிரித்தவண்ணம் சந்திரன், "அது என் இஷ்டம்'' என்றான்.

"இஷ்டமா? இந்த மனம்போன போக்கு எந்தக் காலத்திலும் கொஞ்சம் உன்னிடத்தில் இருக்கத்தான் இருக்குமோ? இதுபோல் இன்னும் எத்தனை வேடிக்கை பண்ணியிருக்கிறாய் சொல்லு?'' என்றேன்.

"எத்தனையோ! எந்தக் கட்டு, காய்தாவுக்கேனும் யாருக்கேனும் சரி, என் சுகத்தின் பொருட்டாக இருந்தாலும் சரி, நான் அடங்கிப் போகவே மாட்டேன். பசி என்றைக்கு அதிகமாக எடுக்கிறதோ அன்றைக்குப் பட்டினி கிடப்பது என் வழக்கம். பசிக்குப் பயந்து சாப்பிடுவது ஒருவிதத்தில் அடிமைத்தனமல்லவா?"

நான் கொல்லென்று சிரித்தேன். "எப்போதுமே விநோதமானவனடா நீ!" என்றேன்.

இதற்குச் சந்திரநாதன் பதில் ஒன்றும் கூறவில்லை. அவன் மனம் இருந்தாற்போலிருந்து வேறு எங்கோ திரிய ஆரம்பித்துவிட்டது. அடிக்கடி நாற்காலியை விட்டு எழுந்து சற்று உலாவுவதும், மீண்டும் வந்து அடைவதுமாக இருந்தான். மீரா டீ போட்டுக்கொண்டு வந்து அதை மேஜைமேல் வைத்தாள்.

"சந்திரநாத், வா டீயைக் குடி" என்றேன்.

"உம்...என்ன?" என்றதும் அவன் சுழன்று வந்து நாற்காலியில் உட்கார்ந்தான். இரண்டே விழுங்கில் டீயைக் குடித்து விட்டு எழுந்து, "நன்றாக இல்லை டீ" என்றான்.

நான் மட்டும் பரமதிருப்தியுடன் மீரா பரிமாறிய டீயை அருந்தினேன். அந்தமாதிரி நன்றாகத் தயாரிக்கப்பட்ட தேயிலைப் பானத்தை நான் அதற்கு முன் ருசிபார்த்ததே இல்லை.

எனக்குப் புரியவில்லை; திடீரெனச் சந்திரநாதனுக்கு ஏன் இந்த மனமாற்றம் ஏற்படவேண்டும்? அவனுக்கு நிமிஷநேரத்தில் ஏன் இப்படி எல்லாம் கசந்து போக வேண்டும்? என் வருகை அவனுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லையோ ஒரு வேளை?

வேலைக்காரன் ஒருவன் அங்கே வந்து, "தோட்டக்காரன் வந்துவிட்டான். என்ன புஷ்பங்கள் தேவை யஜமானுக்கு?" என்று கேட்டான்.

காரணமின்றி வெறுப்பும் சினமும் முகத்தில் கொதிக்க, "வேண்டாம் பூ! போ!" என்றான் சந்திரநாதன்.

நான் ஏதோ குற்றம் செய்தவன் போல் எனக்குப் பட்டது.

சில நிமிஷங்கள் பொறுத்து அவனைச் சாந்தப் படுத்த மெல்ல நான் அவனோடு, "நீ சீக்கிய தர்மத்தை எதற்காக ஏற்றுக் கொண்டாய்? இந்தத் தாடியும் மீசையும் எனக்குச் சுத்தமாகப் பிடிக்கவே இல்லை. உன் முகக்களையை இவை பாழ்படுத்துகின்றன, போ" என்றேன்.

அவன் தாடியைத் தடவிக்கொண்டே, "ஏன்? இதற்கென்ன? நன்றாகத்தான் இருக்கிறது. 'கருவண்டு போல்' என்று நீங்களெல்லாம் வர்ணிக்கிறீர்களே, அது மாதிரி" என்றான்.

"சீ! நீ எப்படி வேண்டுமானாலும் சொல்லிக்கொள். எனக்கென்னவோ பார்க்கப் பிடிக்கவில்லை. மீராவைப் போன்ற ரூபவதியின் அருகில்—"

"ஹோ ஹோ" என்று உரத்த சிரிப்புடன் அவன், "ப்யூடி அண்ட் தி பீஸ்ட் (அழகியும் மிருகமும் போலத்) தானே!" என்றதும் சரேலென்று எழுந்துபோய்ச் சுவரில் தொங்கும் பெரிய நிலைக்கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக்கொண்டே, "இதோ, இந்த க்ஷணமே சிரைத்துத் தள்ளி விடுகிறேனடா; நீ சொன்னது சரிதான்" என்றான்.

சொன்னபிரகாரம் அவன் க்ஷவரச் சாமான்களைக் கொண்டுவந்து க்ஷவரம் செய்துகொள்ள உட்கார்ந்து விட்டான்! மயிரை நீக்கிக்கொண்டே, "சீக்கிய தர்மத்தில் பராக்கிரமம் இருக்கிறது. அதற்காகவே அதை நான் கடைப்பிடித்தேன். இல்லாவிட்டால் வேறு தர்மத்தைக் கைக்கொண்டு அந்த ஸம்பிரதாயத்தின்படி விவாகம் செய்து கொண்டிருப்பேன். தாடி மீசை வளர்க்கச் சொல்லாத மதங்களுக்கு என்ன குறை?" என்றான்.

## அத்தியாயம் 6

அன்று பகற்பொழுது நாங்கள் என்ன பேசினோமென்பது என் நினைவில் இல்லை. அன்று மாலை நேரத்தில் நிகழ்ந்தவைமட்டும் என் நினைவில் பதிந்து இருக்கின்றன. கங்கையின் கரைமேல் நானும் சந்திரநாதனும் உல்லாஸமாக வீற்றிருந்தோம். சந்திரநாதனுடைய பங்களாவுக்குப் பின்னால் கங்கை. வேலைக்காரன் அங்கே எங்களுக்காக ஸுகாஸனத்தைப் பரப்பி யிருந்தான். குளிர்காலத்துக் கங்கை. பளிங்கு போன்ற ஜலராசி. பிரவாகித்து ஓடினாலும் பொங்கி இருகரையும் பெருகும் நீரோட்டமல்ல; எதிர்க்கரையிலுள்ள வயல்களில் பயிர்கள் கதிர் முற்றியதால் பழுத்த மஞ்சள் நிறங்கொண்டன. அத்திசையே என் கண்கள் பதிந்தன.

சந்திரநாதனுடைய முகம் மீண்டும் ஆழ்ந்து விளங்கியது. அவன், "நரூ, இலக்கிய உலகில் உனக்குள்ள மதிப்பும் புகழும் எவ்வளவு தூரம் சென்றிருக்கின்றன?" என்றான்.

நான் ஆச்சரியத்துடன் அவன் முகத்தையே கவனித்தேன்.

"வங்காளம் வரைக்குமா; பிற தேசத்திலும், அதாவது அந்நிய மொழிகளிலும் உன் ரசனைகள் பரவி இருக்கின்றனவா?"

"ஏன், இதரபாஷைகளிலும் அவை மொழிபெயர்க்கப்பட்டுள்ளன."

அவன் மேலே பேசவில்லை.

"எதற்காக இந்த வார்த்தை?" என்று வினவினேன்.

"வாழ்க்கை அவலமாவதைக் குறித்துத்தான் எனக்கு மனவருத்தம். நரு, உனக்கு வந்த பிரக்கியாதியைக் கண்டு வாஸ்தவத்தில் பொறுமை கொள்கிறேன். இன்று ஒரு பாவத்தையும் அறியாத அந்த நாய்க்குட்டியைக் கொடூரமாய் நடத்தியதற்கு இதுவே காரணம்."

இதைக் கூறிவிட்டு அவன் மௌனமாக இருந்தான். நானும் வாயைத் திறக்கவில்லை. "எத்தகைய கீர்த்திக்கும் நான் அருகதை அற்றவன். ஒரு சமயம் ஐ. ஸி. எஸ்., படிக்கச் சந்தர்ப்பம் வாய்த்தது. ஆனல் அதை நழுவவிட்டேன். உயர்ந்த உத்தியோகமானலும் அதுவும் அடிமை வாழ்வுதானே!"—நாற்காலியை விட்டு எழுந்திருந்தான் சந்திரநாதன். அனுவசியமாகக் கீழே இறைந்து கிடந்த சிறு கற்களை ஓடும் கங்கையின் நீரின்மேல் விட்டு விட்டு எறிந்தான். முடிவில் இரண்டொன்றைத் தரைமீதே மோதி அடித்து விட்டுத் தன்னிடத்தில் வந்து அமர்ந்தான்.

"நான் யுத்தத்திற்குச் சென்றிருந்தேன், தெரியுமா?" என்ருன்.

வியப்புற்று நான், "போர்முனைக்கா போயிருந்தாய்? எனக்குத் தெரியவே தெரியாதே! பன்னிரண்டு வருஷங்களாகின்றன, நீ ஊரை விட்டுப் போய். நீ உயிருடன் இருப்பதும் இராததும் எங்களுக்கு எப்படித் தெரியும்? உன் தமையனர்—" என்பதற்குள் சந்திரநாதன் குறுக்கிட்டு, "அண்ணவைப்பற்றி எதுவும் எடுக்கவேண்டாம்" என்ருன்.

"பிறந்த ஊரைக்கூட மறந்துவிட்டாயே!" என்றேன்.

"அந்தக் கிராமம் ஒன்றுமட்டுமோ என் சொந்த இடம்? என் வாழ்க்கை செழித்து வளர அச்சிறு கிராமம் போதுமானதன்று." இதை மொழிந்ததும் அவன் சற்றுச் சும்மா இருந்தான். மறுபடியும் பேசத் தொடங்கினன்: "உலகம் எவ்வளவு விசாலமானது தெரியுமா உனக்கு, நரூ? எப்படி விசாலமானதோ அப்படியே விசித்திரம் நிரம்பியது. எந்த இடமும் என்னுடைய ஊர். உலக மக்கள் அனைவரும் என்னுடைய சுற்றத்தவர்—"

பாதிப்பேச்சிலேயே அவன் நிறுத்திவிட்டான். கங்கையின் அகலமான மார்பிடை அவனுடைய கண் பார்வை நிலைத்து இருந்ததைக் கவனித்தேன். நாற்காலியின் கைப்பிடியை அடிக்கடி அவன் ஓங்கி அறைந்த போது அதை உடைத்து விடுவானென்றே எண்ணி விட்டேன்.

அன்று எனக்குத் தோற்றியவாறே இன்றும் இவ் விருட்டறையில் ஒரே நிலையாக நினைவுகளைப் புரட்டிப் பார்க்கும்போது, சந்திரநாதனைக் காண நான் சென்றது சரியான காரியமன்று என்றே என் மனத்தில் பட்டது. அகோரமான பசியினுல் தூங்கும் ஒருவனைத் தட்டி எழுப்புவது வீண் அனர்த்தத்தை விளைவிக்கிறமாதிரி தான். சந்திரநாதனுடைய உள்ளத்தில் பதுங்கித் திரியும் அழுக்காறு என்னும் பேய் வேற்றுருவம் கொண்டு வெளியே வருவதை நன்றாக அறிந்தேன்.

பேச்சின் தோரணையை மாற்ற, "அதெல்லாம் கிடக்கட்டும், சந்திரநாத்! உன் ஸமாசாரத்தைச் சொல். யுத்தத்திற்குப் போயிருந்தாய்...அப்புறம்?" என்றேன்.

"'மிலிட்டரி' வாழ்க்கையே மிகவும் அற்புதமான தடா! அந்த ஒரு துறையே எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்த ஒன்றுக்கே நான் அடிமைப் பட்டேன். ஆனால் போர்முனையில் நடந்த படுகொலை உண்டே! அப்பா, மிகவும் பயங்கரமானது! அநாகரிகமானது! நான் இதை ஒப்புக்கொள்ளாமல் இல்லை. 'சுயேச்சை' என்பதை அங்கே சிறிதேனும் எதிர்பார்க்க முடியாது. மனுஷ்யத்துவம் அவ்விடத்தில் இல்லை. வெறும் கட்டுப்பாடுதான். ஆனால் என்ன ஆச்சரியம்! இதற்கிடையிலும் மனுஷ்யனின் உயர்ந்த பண்பு வானையளாவிய கோபுரம்போல் உயர்வாக அடிக்கடி வெளிக்கிளம்பும். ஒவ்வொரு படைவீரனின் மரணமும் ஒவ்வோர் அழியாக் கீர்த்தி ஸ்தம்பம்! போர்முனைக்குச் சென்று அங்கே கூத்தாடும் நாசத்தைக் கண்டதும் எனக்கே அருவருப்பு மூண்டது. எடுத்தற்கரிய நரஜன்மம், மானிடரின் கலைச்செல்வம், யுகயுகமாக வரும் சிற்பிகளின் கைத்திறன், ஞானிகள் திரட்டிய அறிவுக் களஞ்சியம், அரும்பாடுபட்டு விஞ்ஞானிகள் கண்டுபிடித்த அபூர்வமான ரகசியங்கள் யாவும் பாழாயின!" என்றான்.

நான் குறுக்கிட்டு, "அவற்றையெல்லாம் நான் கேட்கவில்லை......ஊரைவிட்டுப் போனதுமுதல் ஆரம்பித்துக் கதையைச் சுருக்கமாகக் கூறி முடித்துவிடு" என்றேன்.

சந்திரநாதன் சிரித்து, "இவையெல்லாவற்றையும் ஒரு கதையாக எழுதப் போகிறாயா? சரிதான்" என்று ஆரம்பித்தான்:

"மனத்தில் பெரிய பாரம் அழுத்த வீட்டைத் துறந்து வெளிக்கிளம்பினேனா? ஹீருவின்மேல் எனக்

குத் துவேஷம்; அதுவே இவ்வாறு செய்வதற்கு எனக்கு வலிமையைத் தந்தது.”

கங்கையின்மீது கண்களைச் செலுத்தியவண்ணம் அவன் சொன்னவற்றைச் செவியில் போட்டுக்கொண்டேன். தொலைவில் திசைமுடிவில் வானும் கங்கையாறும் ஒன்றோடு ஒன்று இழைந்தன. வெண்ணிறச் சீலைவிரித்த படகுகள் சில கங்கையின் மடியில் வெண்சிறைக் குருகினம்போல் விரைந்து சென்றன. மெல்ல மெல்ல இவை யாவும் பொருளற்றவையாகிச் சந்திரநாதன் சொல்லும் விசித்திர அனுபவங்களைக் கேட்கும் ஸ்வாரஸ்யத்தில் மங்கி மறைந்து போயின.

“அன்று இரவு களைப்பாற நான் எந்த இடத்திலும் தங்கவில்லை. கறேலென இருட்டு; ஜனசந்தடியற்ற பாட்டை. வழியின் இருசாரியிலும் வெட்டவெளி. நக்ஷத்திரங்கள் தரும் சிறுவெளிச்சத்தில் வழி நடந்தேன். பெரிய காரியத்தை ஸாதிக்க வேண்டுமென்ற அவா என் உள்ளத்தில். வர்த்தமான் ஜில்லாவில் கால் வைத்துக் ‘கிராண்ட் டிரங்க்’ ரோட்டைப் பிடித்துக் கொண்டேன்.”

பளிச்சென நானே நேரில் காண்பவைபோல் இருந்தன, அவன் வர்ணித்தவை. என்னைச் சுற்றி இருந்த வாஸ்தவ உலகம் எங்கோ மறைந்துவிட்டது. அகக் கண்முன் வர்த்தமான், மான்பூம், ஹாஜாரிபாக் ஆகிய ஜில்லாக்களின் விசித்திரமான காட்சிகள் அடங்கிய படத்திரைக்கு முன்னால், கழி முனையில் தன் சிறு மூட்டையைத் தொங்கவிட்டுக்கொண்டு, அசல் உழைப்பாளியைப் போல் இளைஞனை சந்திரநாதன் சென்று கொண்டிருந்தான். செழுமையான வயல்களையும், மேடும்

பள்ளமுமான செம்புலன்களையும் கடந்து, கரிச்சுரங்கத்தின் கப்பியந்திரம், புகை உமிழும் வானுயர் குழாய்கள் இவற்றின் இடையே செல்லும் நெடுவழியே போய்க் கொண்டிருந்தான். அதன்பின் ஹாஜாரிபாக் அரணியப் பிரதேசம். தூரத்தில் ஆகாயத்தின் ஒரு மூலையில் தென்படும் குன்றுகளின் மெல்லிய நீலத்தொடர். இவை யாவும் பின் செல்ல யுவகன் சந்திரநாதன் சிங்க பூமுக்கு வருகிறான்.

"டாடா நகரை இலக்காகக் கொண்டே புறப்பட்டேன். அவ்விடத்திற்குப் பத்து மைல் தொலைவிலுள்ள ஒரு கிராமத்திற்கு வரும்போதே அந்திவேளையாகிவிட்டது. இரவை அவ்வூரிலேயே கழிக்க நேரிட்டது. கிருஷ்ண பக்ஷம். இருந்தாலும் ஆகாயம் வெளிச்சமாகவே இருந்தது. தென்மேற்கு மூலையில் செவேலென்று ஜ்வலிக்கும் வானம். அது டாடா தொழிற்சாலையில் இரும்பு உருக்கிகள் விடும் தீக்கொழுந்தென அப்புறம் தெரியவந்தது.

"பொழுது புலரும் தறுவாயில் நான் புறப்பட்டேன். ஸ்வர்ணரேகை என்னும் ஆற்றங்கரையை அடைந்து எதிரே என் கண்களைத் திருப்பினேன். நான் பார்த்த அற்புதத்தை என்னவென்று சொல்வது! வரிசை வரிசையாகப் புகைப்போக்கிகள்; யந்திரங்களின் பேரிரைச்சல். பட்டப்பகலாதலால் இரும்பு உருக்கிகள் கக்கும் தீக்கொழுந்து தெளிவாகப் புலப்படவில்லை. புறுவின் கூட்டம்போல் வெண்ணிறப் புகை சுழன்று காற்றில் கலந்தது. தொழிற்சாலையின் வெம்மையையும் உணர்ந்தேன். தொழிற்சாலையுள் நான் புகும்போதுதான் முதல் தடவையாக மனிதனுக்கு என் தலை வணங்கிற்று—

ஜம்ஷேட்ஜிக்குத்தான். அச்சமயம் யுத்தம் மூண்ட புதிது. தொழிற்சாலை கிடுகிடுவென்று விருத்தியாகத் தொடங்கியது. ஓ! என்ன அசுரப்பிரயத்தனங்கள்! மூளை சிதறும்படியான சப்தகோலாஹலம்! என்னுள் ஒவ்வொரு நரம்பும் சிலிர்த்தது. உருகும் பதனில் இருக்கும் எஃகுத் தகடுகளை வேண்டிய வடிவில் அடித் தெடுத்தனர். இரும்பு திரவமாகி நீரைப்போல் பெரிய மண் குழாய்கள் மூலம் ஓடியது. அன்றாடம் கூலிக்கு அங்கே வேலையில் அமர்ந்தேன். நான் கைக்கொண்டது மிகவும் கௌரவமான வேலை அல்லவா, நரூ? பயங்கர சக்திவாய்ந்த யந்திர பூதத்தைத் துரும்பு போன்ற மனிதன் அடக்கி ஆளுகிறான், தன் இஷ்டப்படி! உருக் கும் இடத்தில் தளதளவென்றிருக்கும் எஃகுப் பாளங்கள். அவை விடும் வெம்மையும் ஒளியுந்தான் என்ன! சூரியனிலிருந்து விண்ட துண்டுகளாகவே இருந் தன அவை. இரும்பு உருக்கிகளின் வாயைத் திறந்து அவற்றுள்ளே ரஸாயனப்பொருள்களை 'ஷவல்' மூல மாகத் தள்ளுவது என்னுடைய வேலை. ஏமாந்தால் உயிர் போகும் காரியமாக இருந்தாலும் என்வரை அது அற் புதம் அற்புதமே!"

இதைச் சந்திரநாதன் முடித்ததும் ஒரு பஞ்சாப் காரன் அங்கே வந்து தன் பாஷையில் சந்திரநாதனுடன் என்னவோ சொன்னான். அதே மொழியில் சந்திரநாதன் அவனுடன் சில வார்த்தைகள் பேசி அனுப்பிவிட்டான்.

"யார் அவன்?" என்றேன்.

"என்னுடைய தொழிற்சாலையின் மேஸ்திரி."

"தொழிற்சாலையா?" என்று கூறி வினவும் பாவனை யில் சந்திரநாதனைப் பார்த்தேன்.

"இங்கே எனக்குச் சொந்தமான ஒரு மோட்டார்த் தொழிற்சாலை இருக்கிறது. இதன் மூலமாகத்தான் எனக்கு ஜீவனம்.—அது இருக்கட்டும். தற்செயலாக நடந்த ஒரு விபத்து நான் முன்னுக்கு வர வழி கோலிற்று. 'ரோலிங் மெஷின் ஹவுஸி'ல் வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். ரோலிங் யந்திரம் இடையரூது சுழன்று கொண்டே இருக்கும். அதன் விசையினால் தழல்போல் கனியும் எஃகுத்தூலங்கள் தாழும்போது பெரிய மின் சாரச் சம்மட்டிகள் அவற்றைப் பல உருவங்களாக அடித்து நீட்டின. இவ்வாறு ஒரு சமயம் பழுக்கக் காய்ந்த இருப்புத் தூலம் ஒன்று இறங்கும்போது சட்டென நழுவிக் கீழே வேலை செய்துகொண்டிருந்த பட்டாணியன் ஒருவன்மீது சரிந்தது. அவன் வீரிட்டான்; தீர்ந்தது. 'ஸ்விச்' (மின்சார விசையின் திருப்பி) யைக் கையாளும் வங்காளி யுவகன் அதை விட்டுவிட்டு அவனைக் காப்பாற்ற ஓடிவந்தான். பக்கத்தில் இருந்த நான் அந்தப் பட்டாணியனைக் காப்பாற்றி இருப்பேன். 'ஸ்விச்'சை விட்டு விட்டதால் மேலிருந்து தாழும் ஒரு சட்டம் 'ரோலர்' நடுவில் சிக்கிக் கொண்டது. சற்று நாழிகை ஆகி இருந்தால் மூலயந்திரமே உடைந்து போயிருக்கும். மனிதனின் உயிரையும் மதிக்காமல் யந்திரத்தைக் காப்பாற்ற 'ஸ்விச்' இருக்கும் இடத்திற்கு ஓடினேன். துரதிருஷ்டம் பிடித்த அந்த வங்காளியும் சறுக்கிக் கொதிக்கும் தூலத்தில் மோதிக்கொண்டு உயிர் துறந்தான். 'ஸ்விச்'சை நிறுத்திவிட்டுத் திக்பிரமித்துப்போய் நாவெழாமல் நின்றேன். துரை வந்து என் முதுகில், 'என்ன அபார ஸாஹஸம்!' என்று தட்டிக்கொடுத்த போதுதான் எனக்கு ஸ்மரணை வந்தது. அவ்வளவுதான்;

கொஞ்சநாளைக்கெல்லாம் சில பரீக்ஷைகளில் தேறி நான், ‘போர்மான்’ பதவிக்கு வந்துவிட்டேன்.”

இதைக் கேட்டதும் எனக்கு மயிர்க்கூச்செறிந்தது. “மனுஷ்யனைக் காப்பாற்றுமல் யந்திரத்தைக் காக்க ஏன் ஓடவேண்டும் நீ?” என்றேன்.

சந்திரநாதன் சிரித்துக்கொண்டே, “அப்படியா! அந்த யந்திரத்தின் ஒரு பாகம் கெட்டுவிட்டால், அடியோடு தொழிற்சாலையின் வேலையே நின்று விடும். அதனுல் ஏற்படக்கூடிய பெருத்த நஷ்டத்தைப்பற்றி உனக்கு என்ன தெரியும்? அது ஒரு யந்திரந்தானே என்று நீ நினைக்கிறுய். ஆனுல் என் கண்களுக்கு அதுவே சிருஷ்டி கர்த்தாவான பிரும்மாவின் ஓர் அம்சமாகத் தோற்றியது. புதுவிதமான பொருள்களை அது படைக்கிறது” என்றுன்.

என் கற்பனைக்கண்ணுக்கு எதிரே வந்து நின்றது, ஒரு கோரக்காட்சி. அந்த வங்காளி யுவகனின் கருகிய உடல் மரணவேதனையினுல் விலு விலுத்துக்கொண்டிருந்தது. பக்கத்தில் சந்திரநாதன் நிச்சலமாய் உட்கார்ந்திருந்தான். பெருமூச்சு விட்டு என் நினைவுக்கு வந்தேன். கங்கையின் அக்கரையை நோக்கினேன். கதிரோன் ரஸம் ததும்பும் செங்கனிபோல் தாழ்ந்து கொண்டிருந்தான். தானியக் கதிர்களை ஏந்திப் படகுகள் சில இக் கரையை அண்டிக்கொண்டிருந்தன. நீர்த்துறையில் ஒரு படகோட்டி, நதி நடுவே செல்லும் மற்ருெரு படகை நோக்கி, “ஏஹோ” என்று கூவினுன்.

எதிர்பார்த்ததைவிட அமைதியோடு, “அப்புறம் என்ன?” என்றேன்.

"என்னை அடக்கி வைக்கக் கூடிய சக்தி எவருக்கும் இல்லை. நான் மடமடவென்று உன்னத நிலைக்கு வந்தேன். முதலாளிகள் என்னைத் தொழிற்சாலை சம்பந்தமான விஷயங்களைக் கற்றுவரப் பிரத்தியேகமாகச் சீமைக்கு அனுப்ப உத்தேசித்தனர். அதேசமயம், யுத்தத்திற்காக வங்காளிகளைப் படையில் சேர்த்துக் கொண்டிருந்தனர். என் மனத்துள், 'இதுவே எனக்கு உரிய இடம்; எனக்கு ஏற்ற வேலை' என்ற எண்ணம் சட்டென உதித்தது. உடனே அத்தொழிற்சாலையிலிருந்து விலகினேன். யுத்தத்திற்கு ஆட்களைப் பொறுக்கும் உத்தியோகஸ்தன் என் கட்டுமஸ்தான உடலைப் பார்த்து வாய் பிளந்தவனாய், 'வாஸ்தவமாக நீ வங்காளியா?' என்றான். 'ஆம். அதற்கென்ன ஸந்தேகம்?' என்றேன்."

கங்கையின் அக்கரையில் கண்களை நிறுத்தி அவன் மீண்டும் பேச்சைத் தொடர்ந்தான்: "அன்று நான் பெற்ற அனுபவங்கள் இன்று சொப்பனமாகவே தோற்றுகின்றன. தொழிற் சாலையில் ஐந்நூறு, ஆயிரந்தான் சம்பளம் வாங்கி எந்தத் தெய்வத்திற்குப் பிரீதி? வெள்ளம் போல் செல்லும் பட்டாளத்தின் முன்னணியில் இருப்பேன் நான். என் எதிரே மேஜைமீது போர்முனையின் படம் கிடக்கும். சுற்றிலும் டெலிபோன்கள், நான் ஆக்ஞை இடுவதற்கு. உத்தரவு பிறக்கிறது. மட மட வென்று குண்டூசிகளை எடுத்து விட்டுப் படத்தைச் சுருட்டிக்கொண்டு தயாராகிறேன். கவிதையிலாவது எவ்விதமான இலக்கியத்திலாவது எனக்குத் துளியேனும் விருப்பம் இல்லை; அது உனக்கே தெரியும். ஆனால் அன்று

என்னவோ ரவீந்திரரின் ஒரு கவிதை என் மனத்துள் எழுந்தது:

ஐயோ! அந்த இன்பந்தான் என்னே; உலகத் தொல்லையை உதறித்தள்ளிக் கையில் வெற்றிச் சங்கம் கொண்டு ஜனத் திரளிடையே பாய்ந்து ராஜ்யங்களை ஆக்கியும் அழித்தும் கொடுமையைக் கொன்று வீழ்த்துவதில் என்னே இன்பம்!''

இதைச் சொல்லிவிட்டு அவன் மௌனங்கொண்டான்.

அப்போது அவனைப்பற்றிய ஞாபகங்களுக்குத் தொடர்பு இராத ஒரு ஸம்பவம் நிகழ்ந்தது. அதுகூட நன்றாகக் கவனம் இருக்கிறது. இந்த நினைவுமாலையில் அதிகப்படியான ஒரு மலரைத் தொடுத்து விட்டேன். ஆகாயத்தில் அன்று மெல்லிய மேகத்துகில் படர்ந்திருந்தது. அஸ்தமிக்கும் சூரியனின் கடைசிக்கிரணங்கள் அம்மேகத் துகிலில் செம்பஞ்சைத் தோய்த்தன. நடுவான் வரையில் செவேலென்று இருந்தது. எதிர்க்கரையிலுள்ள வயல் வெளிகளிலும் அவ் வர்ணக் குழப்பமே. கங்கையின் புனல் உருக்கிய தங்கமாகத் தோற்றியது.

சந்திரநாதனுடைய பங்களாவுக்குச் சமீபமாகவே 'கான்பூர் வாட்டர் ஒர்க்ஸி'ன் 'பம்பிங்க்' நிலயம். செவ்வையாகக் கட்டப்பட்ட நீர்த்துறைக்கு மேலே தோட்டம். அங்கே கணக்கற்ற பட்டுரோஜா மலர்கள் கண்களைப் பறிக்கும்படியாகப் பூத்துவிளங்கின. அந்தத் துறைப்படியில் ஒரு ஹிந்துஸ்தானி புருஷனும் சுமார் நாலு வயதுள்ள அழகான அவனுடைய பெண் குழந்தையும் காற்று வாங்க வீற்றிருந்தனர். குழந்தை படிகளின் மூலம் இறங்கி, தகதகவென்று உருக்கிய பொன் போல் ஓடும் கங்கை நீரைத் தன் சின்னஞ் சிறு உள்ளங்கையில்

அள்ளி எடுத்துப் பார்த்துக் கீழே பெருகவிட்டது. மறுபடியும் எடுத்துக் கவனித்தது. குழந்தையின் பிதா, "என்னடி பாப்பா பார்க்கிறே?" என்று கேட்டான், வாஞ்சையுடன். கையிலுள்ள ஜலத்தை ஆச்சரியத் துடன் காட்டி, "என் கையில் இருந்த பொன்னெல்லாம் எங்கே, அப்பா, போய்விட்டது?" என்றது அது பரிதாபக் குரலில். நீரில் பிரதிபலித்த ஸ்வர்ண காந்தியும் வர வர மங்கிக் காணுமற்போயிற்று. சூரிய ஒளியின் ஒரு கீறல்மட்டும் அகன்ற விண்ணிடைத் தயங்கியது.

## அத்தியாயம் 7

அதே ஸமயம் மீரா அங்கே வந்தாள். வேலையாள் ஒருவன் முக்காலியைக் கொண்டுவந்து அதன்மேல் டீ அடுக்கை வைத்தான். அவன் பின்னாலேயே பக்ஷண வகைகளை எடுத்துக்கொண்டு புன்சிரிப்புடன் மீரா வந்தாள். சந்திரநாதனைப் பார்த்துக் கொஞ்சம் குறையு மாக வங்காள மொழியில், "இன்று எந்தத் தினுசுப் பக்ஷணங்கள் பண்ணியிருக்கிறேன்? சொல்லுங்கள் பார்க்க லாம்" என்றாள்.

"பஞ்ஜாபி வகை" என்றான் சந்துரு.

குதூஹலத்துடன் தலையசைத்து அவள், "இல்லவே இல்லை" என்று மறுத்தாள்.

"ஆனால் பெஷாவர் அல்லது மார்வாடித் தினுசானதாக இருக்கும்."

"அதுவும் இல்லை" என்றாள் மீரா. பிறகு மெல்லிய சிரிப்புடன் அவள் என்னை நோக்கி, "என்னை ஏளனம் செய்யமாட்டீர்கள் என்று எண்ணுகிறேன். வங்காள தேசத்தவர் பண்ணுவதுபோன்ற சிற்றுண்டிகளைச் செய் திருக்கிறேன்" என்று சொல்லிவிட்டு மேஜைமீது இரண்டு தட்டுக்களில் பேணியும் பால்பூரியும் பரிமாறினாள்.

சந்திரநாதன் உடனே பால்பூரி ஒன்றை எடுத்து வாயில் போட்டுக்கொண்டு சுவைத்ததும், "பலே பேஷ்!" என்றான்.

நான் மீராவை ஏற இறங்கப் பார்த்தேன். அப்போது அவள் அழகான புடைவை உடுத்திருந்தாள்: ஹிந்துஸ்தானி ரீதியில் கெட்டிச் சிவப்பு வர்ணச் சேலை. அப் புடைவையும் அவள் அணிந்திருந்த ரத்தச் சிவப்பான 'ப்ளௌஸு'ம் ஒன்றையொன்று எடுத்துக்காட்டும்படி விளங்கின. அவள் அக்கினி ஜ்வாலையுள் அடங்கிய செழுஞ்சுடரெனத் தோற்றினாள். மேலும், அவளுக்கு எதிரே மேற்குத் திசை முடிவெங்கும் பரவிய செக்கர் வான். அந்தச் சுற்றத்தில் அவளைக் கண்ட எவன்தான் மெய்ம்மறக்கமாட்டான்?

நான் அவளை உபசரிக்க, "உட்காருங்கள்" என்றேன்.

மீரா முல்லை முறுவலுடன் சந்திரநாதனைக் குறிப்பாகப் பார்த்து, "நான் உட்காரலாமா?" என்றாள்.

சந்திரநாதன் அவளைவிட்டுப் பிரியாக் கண்களுடன், "நீ உட்கார்ந்து விட்டால்...? இன்று ராத்திரி நருவுக்கு விருந்தாயிற்றே; அதற்கு உன் கையாலேயே தின்பண்டங்களைச் செய்ய வேண்டாமா?" என்றான்.

"சரி; போய் அந்தக் காரியத்தைக் கவனிக்கிறேன்" என்றாள் மீரா.

அவள் திரும்பிச் செல்வதைப் பார்த்ததும் எனக்கு இருப்புக்கொள்ளவில்லை. "வேண்டாம். நீங்கள் இங்கே வந்து எங்களுடன் உட்கார்ந்து வார்த்தையாடுங்கள். நீங்கள் ஏன் சமைக்கவேண்டும்? அதைவிட இங்கே சற்று உட்கார்ந்துவிட்டுப் போனால் திருப்தியாயிருக்கும்" என்றேன்.

மீரா தன் கணவன் முகத்தை ஒருதரம் நோக்கினுள். சந்திரநாதனுக்கு இது பிடிக்கவில்லையென்பதை ஊகித்துக் கொண்டேன். "என்னைப் பார்த்துக்கொண்டு ஏன் நிற்கிருய், மீரா? உன்னை உட்காரச் சொன்னுல் உட்காரேன்" என்ருன்.

மீரா உட்கார்ந்தாள். அவளை நோக்கி, "புதுத் தினுசாய் நீங்கள் சேலையை உடுத்திருப்பது எனக்கும் பிடித்திருக்கிறது. புடைவையின் நிறமும் நன்ருக அமைந்திருக்கிறது. வர்ண விசித்திரங்களில் உங்களுக்கு இயற்கையிலேயே ஒரு ருசி இருக்கிறது. இந்தமாதிரிச் சிவப்பு வர்ணத்தில் எவ்வளவோ புடைவைகள் பார்த்திருக்கிறேன். ஆனுல் இந்த ரத்தவர்ண ஆடையில் நீங்கள் அதிரூபவதியாக விளங்குகிறீர்கள்!" என்றேன்.

"பத்தேபூர்ஸிக்ரியில் கூடிய சந்தையில் அன்று இதே சேலையை நீ அணிந்திருந்தாய் அல்லவா? மீரா" என்ருன் சந்திரநாதன்.

மீராவின் முகத்தில் உவகையின் ஒளி பரவியது. "ஆமாம், உங்களுக்கு இன்னும் கவனம் இருக்கிறதா?" என்ருள்.

"போய் அதை அவிழ்த்துவிட்டு வேறு உடை உடுத்து வா. அந்தச் சேலையைக் கட்டிக்கொண்டு என் ஒருவனைத் தவிர வேறு எவர் முன்னிலையிலும் வரக்கூடாது" என்ருன் சந்திரநாதன்.

மீரா குற்றவாளியைப்போல் தலை இறங்கி நின்ருள். சந்திரநாதனும் தன்னிடத்தினின்று எழுந்தான்.

'இவ்வளவு திடமற்றவனு சந்திரநாதன்!' என்று நான் வியப்புற்றேன்.

வெட்ட வெளிச்சமான அவனது வாலிப வாழ்க்கையில் இந்தப் பெருங்குறை எங்கோ ஒரு மூலையில் பதுங்கி இருந்ததுபோலும்! கங்கை நதியை நோக்கிய வண்ணம் சிந்தனையில் நான் ஆழ்ந்திருந்தபோதிலும், மெதுவாக மறையும் காலடி ஓசையிலிருந்து மீரா அவ்விடத்தைவிட்டு அகன்றதை உணர்ந்தேன். அவள் பின்னாலேயே 'பூட்ஸ்' அணிந்த காலின் பலத்த சப்தம் கேட்கவே, நான் திரும்பிப் பார்த்தேன்.

சந்திரநாதன் மீராவைப் பின் தொடர்ந்தான். மீராவைக் கொடுமையாக நடத்துவானோ என்ற திகிலினால் எழுந்தேன். படுதாவின் பின்புறம் பிரகாசமாக விளக்கு எரியும் அறையினுள் மீரா மறைந்து போனாள். திரையில் அவளது நிழல் அசையாமல் நிற்பதைக் கண்டேன். காற்றினால் திரை மெல்ல அசைந்தது. ஆனால் அந்த நிழலின் அவயவங்கள் சற்றும் அசையாமல் ஒரே நிலையில் நின்றன. சந்திரநாதனும் அவளைத் துரத்துவது போல் உள்ளே பிரவேசித்தான். அவன் எதையும் கவனிக்காமல் முரட்டுத்தனமாகச் செல்லும் வேகத்தினால் திரை ஒரு புறமாகக் குவிந்தது. என் கண்முன் பிரகாசமான அவ்வறையின் ஒரு பகுதி பளிச்செனத் தென்பட்டது.

சந்திரநாதன் மீராவுக்கு யாதொரு கேடும் விளைவிக்கவில்லை. அவன் மீராவை இழுத்துத் தன் மார்போடு அணைத்துக்கொண்டிருந்தான். மீராவின் வதனத்தின் மேல் அவனுடைய முகம் கவிந்திருந்தது. இருவரும் இவ்வாறு இணைவதைக் குறித்து நான் ஆனந்தங் கொண்டேன். அதன் பரபரப்பை அடக்கக் கங்கை நீரில் படியும் இருளை நோக்கி நின்றேன். கீழ்வானிலிருந்து அந்தகாரம் என் முன்னே பெருகி வந்து கொண்டிருந்தது.

சந்திரநாதன் திரும்பிவந்து என் பக்கத்தில் அமர்ந்தவனாய், "மனிதனுடைய மனமென்னும் விசாலமான கோபுர வாயிலில் கணக்கற்ற பிச்சைக்காரர்களின் வாஸம். ஒவ்வொருவருக்கும் ஒவ்வோர் ஆசை. புகழ்மேல் விருப்பம், மதிப்பான வாழ்வின்மீது மோகம், பணம் குவிக்கவேண்டுமென்ற அவா—இந்தமாதிரி ஆசைக்கு ஓர் அளவே இல்லை. இவற்றுள் ஒன்றையாவது விரும்பாத மனிதனே இல்லை. நான் இதைத் தவறென்று கூறவில்லை. ஒவ்வொருவனும் ஓர் அலெக்ஸாண்டராகவோ, தைமூராகவோ, நாதிர்ஷாவாகவோ ஏதாவது ஒரு பிரயாசையின் தலைவனாக விரும்புகிறான். ஒவ்வொரு சமயம் ஒவ்வோர் ஆசை மனிதனின் மனப்பீடத்தில் ஏறிக்கொள்கிறது. நான் வங்காளச் சைனியத்தில் சேர என் பெயரைக் கொடுத்தபோது அழியாப்புகழ் பெற வேண்டுமென்ற பேரவாவே என் மனத்திடை நிரம்பி யிருந்தது" என்றான்.

நான் சிரித்துவிட்டு, "சிறுவனாயிருக்கும்போது எனக்கென்னவோ நீ காரியவாதியாய் இருப்பாயென்று பட்டது. ஆனால் இப்போது நேரில் பார்த்தபிறகு நீ மிகவும் நிலையற்ற சித்தமுடையவனாகவே தோற்றுகிறாய்" என்றேன்.

"பாறையில் எங்கேயாவது மலர்ச்செடி வளருமோ? ஆனால் பாசி படர்வதற்கு அங்கே இடம் இருக்கிறது. நிலையுள்ள சித்தம் படைத்தவன் எவன் இருக்கிறான் இந்த உலகில்? நரூ, இந்தக் கண்ணீர் உடலென்னும் யந்திரத்தில் ஒரு முக்கியமான ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறது. மனத்தை எவ்வளவு கடினமாகவும், நெஞ்சைக் கல்லைப் போலவும் ஆக்கிக்கொண்டாலும், கண்ணீர் வரும் வழியை அடைத்துவிட்டாலும் கடைசியில் பாறையாக மாறிய

மனத்தைச் சுற்றிப் பசுமையான பாசியைப்போல் அது வெளிப்பட்டுத்தான் தீரும்.

"போகட்டும்; இதைக் கேள்: போர்க்களத்தில் சென்ற பிறகு மற்றோர் அதிர்ச்சி மூண்டது. விருத்திக்கு வர வழி இல்லை என்பதை அறிந்தேன். கறுப்பு மனிதர்களாகிய நமக்கு என்றென்றும் கீழ்மட்டத்தில்தான் இடம். உறை பனிபோல் தலைமேல் உட்கார்ந்து கொண்டு நம்மை அழுத்துவதற்கு ஸர்வ உரிமையும் வெள்ளையர்களுக்கே இருந்தும் நம்பிக்கையை நான் விடவில்லை. யுத்தம் முடிவடைந்ததும் சர்க்கார் இலாகாவில் ஏதாவது 'சான்ஸ்' கிடைக்குமென்று காத்திருந்தேன். ஆனால் என்ன ஆச்சரியம்! என் மனம் வரவர வெறுப்பே அடைந்து வந்தது. எமதூதர்கள் நர்த்தனமிடும் போர்க்களத்தின் நடுவே நிற்கும்போது என் உடல் சிலிர்த்திடும். சாவின் பயத்தினால் அல்ல; கடவுளின் சிருஷ்டி வியர்த்தமாவதைக் கண்டுதான். என் சொந்தப் பிராணன் அழிவதைக் குறித்து ஒருநாளும் நான் வருத்தப்பட்டதில்லை. ஆனால் மனிதனின் மிருக ஸ்வபாவத்தைக் கண்டதும் - ராக்ஷஸவேட்கையைக் கண்டதும் - வேதனை, வெறுப்பு, அசூயை யாவும் ஒன்று சேர்ந்து வந்தன. தான் தனியாக வாழ்வதற்கு மனிதன் கையாளும் காட்டுமிராண்டித்தனமானது என்ன என்ன ஹிம்ஸையையும் அழிவையுமெல்லாம் நிகழ்த்துகிறது! கடவுள் பல காலமாகப் படைத்தவை யாவும் அழிந்த பின்பு அவற்றைப் புதிப்பிக்க எத்தனை யுகங்கள் ஆகுமோ?

"ஓய்வு நேரங்களில், மெஸொபொடேமியாவில் நிர்மானுஷ்யமான ஈச்சம் புதர்களின் மறைவில் இதைப் பற்றியே என் சிந்தனை செல்லும். மனிதனின் நீச ஆசைகளை ஒழிக்க ஓர் அருள்மொழியோ, விடுதலை மந்திரமோ

இல்லையே என்று என் மனம் ஏங்கும். போர் முடிவதற்கு முன்பு ஒரு தினம் நடந்த சம்பவம் எனது ஸங்கற்பத்தைப் பின்னும் உறுதியாக்கியது. என் மனத்தில் கூடு கட்டியிருந்த புகழ், மதிப்பான வாழ்வின்மேல் உள்ள இச்சை ஆகியவை சட்டெனச் சிதைந்தன. கூட்டில் வாழ விரும்பிய என் மனப்பறவை அதை வெறுத்துப் பரந்த வானை நோக்கிச் சிறகை விரித்தது. அவ்வளவு பெருஞ் சிறகுடைய பறவை ஒரு சிறிய வரம்பிற்குள் எப்படி அடங்கி ஒடுங்கி யிருந்ததென்று இப்போதுகூட அதிசயமாய் இருக்கிறது.

"துருக்கிய யுத்தக்கைதி ஒருவன் இருந்தான். அவன் மிகவும் சாந்தமான பிரகிருதி. ஏதோ மண் வெட்டும் வேலைக்கு அனுப்பினோம் அவனை. அடங்கி வேலை செய்துகொண்டிருந்தான். ஒருநாள் என்னவோ திடீரென்று ஏதோ வார்த்தையின் பேரில் கோபம் தலைக்கேறித் தொழில் மேஸ்திரியை அடிக்கப் போய்விட்டான். உடனே அவனுக்குத் தண்டனை விதிக்கப்பட்டது. எந்த விதமானது தெரியுமா? கைகால்களைக் கட்டி அவனை ரெயில் தண்டவாளத்தின்மேல் படுக்கவைத்து எஞ்ஜினை ஓட்டினார்கள். இது அதிகாரிகள் எவருக்குமே தெரியாது; என் மனம் மட்டும் இதற்கு எதிராக எழுந்தது. ஸந்நியாஸம் பூணவேண்டுமென்ற திடவைராக்கியம் கொண்டேன். உலகோர் உய்யும்பொருட்டு அருள்வாணியை அழிவற்ற நித்தியலோகத்திலிருந்து கொண்டுவர முற்பட்டேன்.

"யுத்தம் முடிந்ததும் ஒரு முக்கியமான வேலையைக் கற்றுவர என்னை அனுப்புவதாக இருந்தார்கள். இஷ்டப்பட்டிருந்தால் ஐ. ஸி. எஸ்., பரீக்ஷைக்கும் போய்த்

தேறி வந்திருக்கலாம் நான். ஆனல் எல்லாவற்றையும் நிராகரித்து விட்டேன். எங்களுடைய மேலதிகாரி பிரமித்துப் போய், 'என் மான் (யுவகனே)! என்ன நீ இவ்வாறு செய்துவிட்டாய்?' என்ருன். 'என்ன செய்தேன்?' என்றேன். 'நல்ல சந்தர்ப்பம் வரும்போது ஏன் நழுவ விடுகிருய்?' என்ருன் அவன். 'ஆமாம்' என்றேன். துறவு மனப்பான்மை என்னை வசப்படுத்திக் கொண்டது அச்சமயம். கிளம்பிவிட்டேன். எனக்குத் துணை கையிலுள்ள ஒரு கழியே. அதோடு புறப்பட்டேன். என் மூட்டையில் ஒரு கம்பளி, லோட்டா இவையே இருந்தன."

வைராகியாய்ச் செல்லும் சந்திரநாதன் எவ்வாறு இருந்திருப்பானென்று என்னல் இன்றளவும் கற்பனை செய்துகொள்ள முடியவில்லை. அந்த வைராக்கிய வாழ்வின் பிரதிபிம்பம் சந்திரநாதனுடைய அகக்கண்ணுக்கே இப்போது புரிபடாமல் இருக்கலாம். பெருங் கீர்த்தியை விரும்பித் திக்கற்றவனய் அரையில் கந்தலுடன் ஒரு யுவகன் விண்வீழ் கொள்ளியைப்போல் திரிந்துகொண்டிருந்தான். உலகத்தவர்முன் உன்னதமாக வீற்றிருப்பதற்குத்தான். புத்தனைப்போல் அன்று; ஒரு கிறிஸ்துவைப் போலவும் அன்று; ரோமாபுரி வாழ்வில் ஊறும் சமயாசாரியான போப்பைப் போன்றுதான். அச் சுவை பெறவே அவனுக்கு வைராக்கிய வெறி ஏற்பட்டது.

"நரூ, உண்மையில் நாட்டை அடைந்ததும் ஆண்டியைப்போல் சில காலம் சுற்றி அலைந்தேன். ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலை வரையில் பாரத தேசத்தைப் பார்வையிட்டேன். ஒரு தரமல்ல; இரண்டு தடவை. ஸமுத்திர தீரத்திலும், அடர்ந்த காட்டிலும், பனிவரை

கள் மீதும், கோயிலிலும், மசூதிகளிலும், மயானங்களிலுமாக எத்தனையோ இடங்களில் சுற்றித் திரிந்தேன். ஆனால் நான் அடைய விரும்பியது எனக்குக் கிட்டவில்லை.''

சற்று நேரம் பேச்சை நிறுத்திவிட்டான் சந்திரநாதன். அவனுடைய மனக்கண் முன்பு என்னவோ தோன்றி இருக்கவேண்டும். அமைதி நிலவும் அவனது முகச்சாயலும், தியானத்தில் லயித்திருப்பது போன்ற விழி நோக்கும் இதைக் காட்டின. "ஒரு கிழவியின் கவனம் எனக்கு அடிக்கடி வருகிறது'' என்று மீண்டும் பேச்சைத் தொடங்கி, "பதரீநாத் போகும் வழியில் நான் அவளைக் கண்டேன். யாத்திரிகர்கள் எல்லாரும் திரும்பி வந்து கொண்டிருந்தார்கள். அப்போது அந்தக் கோஷ்டியில் வரும் ஒரு பாட்டி என்னைப் பார்த்தவுடன், நான் வங்காளமொழி பேசுவதைக் கவனித்துக் 'கோ' என்று அழ ஆரம்பித்து விட்டாள். 'யாரடாப்பா நீ, நதியா நிமாயி*யைப்போல் ஏகாங்கியாய் வந்து விட்டாயே? எந்தத் துர்ப்பாக்கியவதியை அழ வைத்துவிட்டு ஓடி வந்திருக்கிறாய்? சொல்லப்பா' என்றாள். 'உன் ஊர் எதுடாப்பா?' என்றும் கேட்டாள். பாட்டி என்று ஒருவரும் இந்த உலகத்தில் எனக்கு இல்லை. நான் எவ்வளவு தூரம் விளக்கியபோதிலும் அவள் என் பேச்சை நம்பவில்லை. அவள் என்னோடு பேச நின்றுவிடவே, கூட வந்த யாத்திரிகர்கள் அவளை விட்டு முன்னேகினர். அவள் என்னைக்கொஞ்சத்தில் விடுவதாயில்லை.

"'உனக்கு யாரும் இராதுபோனால், வா என்னோடு ஊருக்கு. என் பிள்ளைக்கு ஏராள நிலம் நீர் இருக்கிறது.

---

*ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர்.

வீடு கட்டிக்கொடுத்து உனக்குக் கல்யாணமும் செய்து வைக்கிறேன்; வாடாப்பா' என்றாள். 'இதென்ன! பெரிய ஸங்கடத்தில் மாட்டிக்கொண்டோமே' என்று எண்ணினேன். கடைசியில் அந்தக் கிழவியை ஏமாற்றிவிட்டு எப்படியோ வந்துவிட்டேன். ஆனால் வரும்பொழுது அழுதுவிட்டேன்" என்றான் சந்திரநாதன்.

இதைக் கேட்டதும் என்னால் பெருமூச்சு விடாமல் இருக்க முடியவில்லை. ஜேபியிலிருந்து ஸிகரெட் ஒன்றை எடுத்துப் பற்றவைக்க வத்திக்குச்சியைக் கிழிக்கும்போது அந்த வெளிச்சத்தில் பளபள வென்று சந்திரநாதனுடைய கண்களில் நீர் தளும்பிக் கொண்டிருந்ததைப் பார்த்தேன். அவனைத் தொட்டு, "சந்துரு! ஏன் கண்ணீர் விடுகிறாய்?" என்றேன்.

அவன் சிரித்துவிட்டான். லஜ்ஜைமேலிட உடனே கண்களைத் துடைத்துக்கொண்டு, "அன்னையைவிட உயர்ந்த ஸ்திரீ ஜன்மம் வேறு இல்லை இவ்வுலகில். யசோதைகோபகுமாரனை மாடுகளை மேய்த்துவர வெளியே அனுப்புவாள். ஆனால் அவன் திரும்பி வருவதற்குள் எவ்வளவு வேதனை, எவ்வளவு ஏக்கம் கொள்வாள்! இதென்ன வெட்கக்கேடென்று பலர் இதை எண்ணுவார்கள்; ஆனால் என் வரைக்கும் அந்தக் கிழவியை மறக்க மாட்டேன்.

"ஒவ்வொரு சமயம், 'ஏனோ அவளை ஏமாற்றினோம்? அவளோடு சென்றிருந்தால் எல்லாம் அனுகூலமாகவே முடிந்திருக்குமே' என்று எண்ணுவேன். 'கிழவியைத் தாயாகப் பெற்றிருப்பேன். ஆரோக்கியம் நிரம்பிய மாநிறமான நாட்டுப்புறப் பாவை ஒருத்தியை மணந்திருப்பேன். அவள் மூஞ்சியால் அடிப்பதும் எனக்குச் சகித்துப்

போயிருக்கும். எனக்கு வெறுப்பு அதிகமாகத் தட்டும் சமயத்தில் ஹாய் என்று தாழ்வாரத்தில் உட்கார்ந்து கொண்டு யாதொரு கவலையுமின்றிப் புகையிலையை மென்று கொண்டிருப்பேன்' என்றெல்லாம் யோசனை செய்து கொள்வேன்'' என்றான்.

சட்டெனச் சந்திரநாதனுடைய மதனி-என் மாமி யின் ஞாபகம் வந்தது எனக்கு.

அடுத்த நிமிஷமே சந்திரநாதன் பெரிய சிரிப் பொன்று சிரித்துவிட்டு, "சே! ஒதுக்கித் தள்ளு இவற்றை யெல்லாம். ஒவ்வொரு ஸமயம் மனிதன் என்ன மூடத் தனமாய் நடந்து கொள்கிறான், பார்: அது போகட்டும், எப்படியாவது......மேலே சொல்லுகிறேன் கேள்'' என் றான்.

"முடிவில் ஹிமாலயத்திற்கு ஒரு தரமாவது போக வேண்டுமென்று பிரதிக்ஞை செய்து கொண்டேன். கொடுத்து வைத்திருந்தால்தானே கிடைக்கும்? போனேன், ஒவ்வோர் ஊராகச் சுற்றிப் பார்த்துக்கொண்டே. திடீரென ஒரு நாள் ஊர் சுற்றுவது எனக்கே பிடிக்காமல் போய்விட்டது. நேரே ஹிமோத்கிரிக்குப் போக ஸ்திரப் படுத்திக் கொண்டேன். வழியில் பத்தேபூர் ஸிக்ரிக்கு வரும்போது, அங்கே உள்ள அக்பர்ஷாவின் ஸமாதி யைக் காணக் கணக்கற்ற பேர் போய்க்கொண்டிருந்தனர். அதோடு அங்கே பெரிய சந்தை. அதைப் பார்த்துவிட்டு ஆக்ராவில் ரெயில் ஏறலாமென்று இருந்தேன். அந்தச் சந்தையின் காட்சிகளைத்தான் நான் என்னவென்று வர் ணிப்பது? நரு! நீ பார்த்திருக்கிறாயா, எப்போதாவது அந்தமாதிரிச் சந்தையை? பெரிய பெரிய கண் காட்சி களையும் கும்பமேளாவையும் பார்த்ததுண்டு. ஆனால்

இதற்கு இணை எதுவும் வராது. ரொம்ப அபூர்வமானது. கண் கொள்ளாச் சேவை!" என்றான்.

அந்தச் சந்தையை நானும் பார்த்திருக்கிறேன். உண்மையில் முன்பின் நிகழாததோர் அற்புதக் காட்சிதான்! மனோகரமானதே. இப்போது நினைத்துப் பார்த்தாலும் கண்ணெதிரே அது வந்து நிற்கிறது. அன்று அதைப் பற்றிச் சந்திரநாதன் வர்ணிக்கும் போதுகூட நான் தன்மயமாகிக் கான்பூரில் ஓடும் கங்கையின் நீர்ப்பரப்பில் கவிந்து வரும் இருட்படலத்தில், அந்தச் சந்தையின் சித்திரம் மெல்ல மிதந்து வருவதைக் கண்டேன். காணக் கிடைக்காததோர் சித்திரவிழா அது. ஸமாதியின் நாற்புறமும் மனிதவர்க்கத்தின் கோலாஹலம். அக்பரின் நினைவைச் சோபிக்கச் செய்யும் அந்த உத்ஸவம் புதுவருஷக் கொண்டாட்டம்போல் இருந்தது. எந்தப் பக்கம் திரும்பினாலும் வர்ண வைசித்திரியம்: ரோஜா வர்ணம், செவ்வந்தி வர்ணம், பசுந்தளிரின் நிறம், கிளிப்பச்சை, வஸந்த வர்ணம், சம்பக வர்ணம். வானவில்லின் ஏழுநிறங்கள் தோய்ந்த சேலைகளும் ரவிக்கைகளும் அணிந்த அரம்பையரின் கூட்டம். அவர்கள் வரிசை வரிசையாகச் சென்றுகொண்டிருந்தனர். அவர்களுடன் ஆடவரும் இருந்தனர். ஆனால் அவர்கள் மகளிர் பக்கத்தில் மங்கிக் கிடந்தனர். பெருங் கடலில் கதிரவன் செங்கதிர்களை வீசித் தாழும்போது செம்மை பரவி நுரைத்தெழும் அலை வரிசைகள்போல், வர்ணத் துகில் புனைந்த பாவையரை நுரையாகவும், ஆடவரை இருண்ட அலைநீராகவும் பாவித்துக்கொள்ளவேண்டும். நுரைவீசும் திவலைகளிலே தான் வர்ணபேதங்கள் முதலில் தென்படுகின்றன. பெண்பாலாரே முன் அணியில் இருந்தனர். அந்தக் கூட்டத்

தில் இரண்டொரு பிச்சைக்காரிகள் கந்தை கட்டிய கோலத்துடன் போவதைப் பார்த்தேன். மரத்தடியிலும், சத்திரங்களிலும், இடிந்துபோன பெரிய விடுதிகளின் பாழடைந்த தாழ்வாரங்களிலும் அவரவர் தத்தம் இடங்களைப் பிடித்துக்கொள்வது அந்தக் கங்கையின்மேல் படியும் இருளில் தெளிவாக என்முன் வந்து நிற்கிறது. திரள் திரளாக அவர்கள் செல்வது அலைவரிசைகள்போல இருந்தது. கொஞ்சநாழிகை ஓர் இடத்தில் சூழ்ந்து நிற்கிறார்கள். அதற்குள் பின்னால் வரும் மற்றொரு யாத்திரிகர்களின் கும்பல் தங்கினவர்களைத் தாண்டிச் செல்கிறது. அப்புறம் இவர்களும் நகர ஆரம்பிக்கின்றனர். கங்கையின் திரையொலியிடையே மடந்தையர் அணிந்திருக்கும் நூபுரத்தின் ஓசை கலீர்கலீரெனச் சப்தித்து நாட்டியப் பெண்களின் ஆடல் பாடல்களை நினைவூட்டியது.

சந்திரநாதனுடைய பங்களாவுக்கு அருகிலே மற்றொரு குடும்பத்தவர் இல்லத்தில் பெண்கள் சிலர் ஏதோ விஷயத்தைக் குறித்து வாதாடிக் கொண்டிருந்தனர். அது, சந்தையில் கூடியிருந்த பெண்டிர், "என்ன சமையல் செய்கிறது; சொல்லேன்?" என்பதுபோன்ற அற்ப விஷயங்களைப் பற்றி ஒருவரோடு ஒருவர் வாதிப்பதை ஒத்திருந்தது. பேச்சு அடங்கி ஓயாச் சிரிப்பாக மாறி அந்த இடம் கலகலப்பாக இருந்தது.

"கடை கடையாக நுழைந்து பெண்கள் பேரமாடி ஏதாவது வாங்கியபடி இருந்தனர். வர்ணம் தீட்டிய விளையாட்டுக்கருவிகள், சோப்பு, சோழி, பித்தளை விக்கிரஹங்கள், வெண்கலச் சாமான்கள், ஜயபூர் வேலைப்பாடுடைய முலாம் பூசிய நாகரிகமான பொருள்கள்,

சலவைக்கற் சிலைகள், ஸுர்மா என்னும் கண்ணுக்கு இடும் வாஸனைமை, அத்தர் போன்ற நறுஞ் சாந்தங்கள், விதவித நிறங்களில் சேலைகள், பூஞ்செடிகள், விசிறி, சவரி, அரக்குத்தொடிகள், புது மோஸ்தரான பளிங்கு வளையல்கள் எல்லாம் சேர்ந்து ஸ்வர்க்கத்தில் திகழும் பெருந் திருவிழாவாகத் தோற்றி அணங்குகள் கூடும் அழகிய சந்தையோ வென்று பிரமிக்கும்படி இருந்தது அவ்விடம். திசை தப்பியவனைப் நான் அப்பெரிய ஜனஸமுத்திரத்தில் அலைந்து கொண்டிருந்தேன். என் மனத்துள் வாஸம் செய்யும் ஒரு வைராகியின் காவி உடை அடிக்கடி சுற்றுப்புறம் திகழும் மோஹனக் காட்சிகளினால் நழுவி விழும் போல் இருந்தது. மீறிச் செல்லும் மனத்தைக் கடினமாக்கிக்கொண்டேன்" என்றான் சந்திரநாதன்.

நான் சிரித்துக்கொண்டே, "வைராகியாகப் போகிறவன் இந்தமாதிரி காமத்தை எழுப்பும் ஓர் இடத்தை அண்டினால் இப்படித்தான் நேரும். அந்த ஸ்வர்க்க போகத்தினால் உன் வாழ்க்கையும் அழகிய காவியமாக மாறிவிடும்" என்றேன்.

சந்திரநாதன் உரக்கச் சிரித்தான். அந்தமாதிரிச் சிரிப்பது அவனது இயல்பு அன்று. கபடற்ற அச்சிரிப்பினால் என் உடலும் புளகித்தது. இதனால் அவன் மனத்துள் படிந்திருந்த மாசு தொலைந்ததென்று உணரலானேன்.

"விசுவாமித்திரரின் தபஸ் எவ்வாறு பங்கமடைந்தது தெரியுமோ இல்லையோ? கேள்: ஓர் எக்கா வண்டியை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு சந்தையைச் சுற்றிப் பார்த்துவிட்டு, ஆக்ராவை அடைந்து ரெயிலில் ஏறி

ஜோஷீமடத்தில் தங்க வேண்டுமென்று பிரதிக்ஞை செய்து கொண்டேன் அல்லவா? அரை குறையாகச் சந்தையைப் பார்த்து அலுத்துப் போய் நான் வண்டிக் காரனை, 'வேறு இடத்திற்கு ஓட்டு' என்று சொன்னேன். பாவம், அவனுக்குச் சந்தையை நான் நன்றாகப் பார்க்க வில்லையே என்ற குறை. 'அந்தப் பக்கம் இன்னும் பேஷாக இருக்குமே, சாமி. அந்தப்புரத்துக் கிளிகளை அங்கே யதேஷ்டமாகப் பார்க்கலாமே' என்றான். 'சே! ஓட்டு வண்டியை' என்று அவனை அதட்டினேன்.

"சந்தையின் கடைசிக் கடையண்டை வரும்போது வாஸனைத் தாம்பூலத் தூள் விற்கப்படுவதைக் கண்டு அங்கே இறங்கி, அந்தச் சரக்கை வாங்கிக்கொண்டேன். ஜனங்களுடைய சந்தடி யெல்லாம் பின்னால் மறைய எக்கா ஜில்ஜில்லென்று போய்க்கொண்டிருந்தது. நன் றாகக் கவனம் இருக்கிறது, நரு: என் மனத்துள் இருக் கும் துறவியை விளித்து, 'எனக்கு எதை அருள் புரி வாய்?' என்று வினவினேன். அழியா அருள்வாக்கை உலகத்தவரிடையே பரவச் செய்வதே என் வேலை அல்லவா? உடல் சுண்டிப் போனாலும், ஒளிமயமானது என் மனம். வழியில் மனிதர் நடமாட்டம் அவ்வளவாக இல்லை. இரண்டொரு சேட் கோஷ்டியினர் மட்டும் சந்தையை நோக்கி விரைவாகச் சென்று கொண்டிருந் தனர். அவர்களுள்ளும் பெரும்பாலோர் பெண்களே; சிறுவர்களும் இருந்தனர். வழியோரத்தில் குளம் ஒன்று இருந்தது. நிர்மானுஷ்யமான இடம் அது. உயர்குலத் துப் பெண்கள் நீராடுவதற்கு அவ்விடம் சௌகரியமாக இருப்பதைக் கண்டு அவர்கள் அங்கே இறங்கினர். அவர் களைப் பாராமல், கண்களை எதிர்ப்பக்கமாகச் செலுத்திய

போதிலும், ஒரு புடைவையின் நிறம்மட்டும் என்னைப் பின்புறமாகத் திரும்பிப் பார்க்கத் தூண்டியது. நல்ல ரத்த வர்ணமான சேலை. சேலையின் உடைமைக்காரியின் மீது என் நாட்டம் செல்லவில்லை; ஆனால் அந்தத் துகிலின் செந்நிறமே என் உள்ளத்தைக் கவர்ந்தது. திரும்பிப் பாராமல் என்னால் இருக்க முடியவில்லை. அவர்களும் என் கண்ணுக்கு எட்டாத இடமாய் நகர்ந்து போய் விட்டனர். ஆனால் எனக்கு மட்டும் குஷி கிளம்பியது.

"என் கைக்கழியைப் பக்கத்தில் காணவில்லை. வண்டியின் மூலை முடுக்கெல்லாம் தடவிப் பார்த்தேன். எக்காவாலாவை வண்டியை நிறுத்தச் சொன்னேன். வண்டிக்காரன் அதை நிறுத்தினான். 'என் கழியை எங்கேடா போட்டுவிட்டாய்? மடையா' என்றேன். அற்பமான வஸ்துதான், அந்தக் கழி. நான் அதைக் காசு கொடுத்துக் கூட வாங்கவில்லை. உனக்குத் தெரியாதாடா; நாம் இருவரும் ஒரு மூங்கிலை இரண்டு துண்டுபோட்டு ஒவ்வொன்று எடுத்துக் கொண்டோமே? அந்தக் கழியை நம்பியே விசாலமான இந்த உலகத்தில் புகுந்தேன். வெகுநாளைய நண்பன் அல்லவா அந்தக் கழி எனக்கு? எப்படிப் பிரிய மனம் வரும்?" என்றான் சந்திரநாதன்.

எனக்கு மூங்கிற் கழியின் நினைவு வந்தது. பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது இரண்டு பேருமாக ஒரு மூங்கிலை வெட்டித் தலைக்கு ஒரு துண்டு எடுத்துக்கொண்டோம். என் கழி தொலைந்துபோய் எத்தனையோ நாட்களாயின. அதைப்பற்றி ஸ்மரிக்க வேண்டிய அவகாசமே ஏற்படவில்லை.

"அந்தக் கழியின்பேரில் எனக்குப் பற்றுதல் அதிகம். அது அன்று வழியில் தொலைந்துபோனதே மேலாயிற்று.

எனக்கு எதன்பேரிலும் பற்றுதல் அதோடு அற்றது. ஆனால் மனம் கேட்கிறதா? எக்காவாலா, 'ஐயோ, சாமி! நான் ஒன்றையும் அறியேன்! வண்டியின் முன்னால் உட்கார்ந்திருக்கிறேன். கழி போன இடம் எனக்கு எப்படித் தெரியுங்கோ?' என்றான். அவன் சொன்னது வாஸ்தவமே. 'யஜமான், ஒருவேளை நீங்கள் கடைசியாக ஒரு கடையில் இறங்கினீர்களே. அப்போ வண்டிமேலே இருந்தது; பார்த்தேனுங்கோ......வழியில் எங்கேயாவதுதான் விழுந்துபோயிருக்கும்' என்றான். அவன் சொன்னதும் சரியென்றே பட்டது. 'இங்கேயே தூங்கு. நான் போய்த் தேடிக்கொண்டு வருகிறேன்' என்று அவனிடம் கூறிவிட்டுச் சந்தையை நோக்கி நடந்தேன்.

"பாதையைக் கவனித்துக்கொண்டே சென்றேன். கழியைக் காணவில்லை. சந்தையின் இடையே செல்லும் போது அந்தத் தடியின் கவனமே என் மனத்துள் சுழன்றது. வெகுநாள்வரைக்கும் வாழ்க்கையில் என் துணைவனாக நின்றது அது. என் உடலின் பளுவைத் தாங்கி இருக்கிறது. என் மூட்டையைச் சுமந்து இருக்கிறது. கால் தடுமாறி இடறி விழும்போது என்னைக் காப்பாற்றி இருக்கிறது. ஒருபோதும் அது எனக்குப் பிரதிகூலமாக இருந்ததில்லை. ஆபத்துக் காலங்களில் என்னைவிட்டுச் சற்றும் விலகியதில்லை.

" 'பாபூஜி' என்று எக்காவாலா என்னை நோக்கி, இந்த வழியாக அந்தச் சேட் குடும்பத்தாரைத் தவிரவேறு யாருமே போகவில்லை. குளத்தில் குளித்துவிட்டு, நேரே சந்தைக்குத்தான் போயிருப்பாங்க......அவங்க கையில் தான் உங்களுடைய கழி சிக்கியிருக்கவேண்டும்' என்றான். சட்டென அந்த ரத்த வர்ணச் சேலை என் மனக்கண்முன்

வந்து நின்றது. 'வா, அவர்களைத் தேடிப் பிடிக்கலாம்' என்றேன் எக்காவாலாவிடம்."

சந்திரநாதன் மேலே என்ன சொல்லப் போகிறுனென்ற ஆவலுடன் என் இடத்தில் ஆர அமர உட்கார்ந்தேன்.

அவனும் எனக்குள்ள ஆவலைக் கவனித்தான். "எப்படி இருக்கிறது? என் கதை விசித்திரமாக இல்லையா?" என்றுன்.

"அப்படித்தான் எனக்கும் படுகிறது" என்று சொல்லி ஒரு ஸிகரெட்டைப் பற்றவைத்தேன்.

"எனக்கும் ஒன்று தா" என்றுன் சந்திரநாதன்.

"உங்கள் மதாசாரப்படி தூமபானம் கூடாதே" என்றேன்.

"மதத்தில் எனக்கு நம்பிக்கை இல்லை. என் மதம் என்னுடைய சொந்தமான சிருஷ்டியே" என்றுன். ஸிகரெட் குடித்துக்கொண்டே அவன், "இன்னும் ஒரு கோப்பை டீ அருந்தலாமே...மீரா...மீரா!" என்று கூப்பிட்டான்.

மீரா வராந்தாவில் தோன்றினுள்.

சந்திரநாதன் எழுந்து அவளைப் பார்த்து வேடிக்கையாக, "பெரிய மனசு பண்ணி இரண்டு கோப்பை போட்டுக்கொண்டு வரமுடியுமா? மீரா!" என்று அவளது கொழுவிய கன்னத்தை மெதுவாகக் கிள்ளினுன்.

மீரா, சிரிப்பும் குதூகலமும் கொந்தளிக்க உள்ளே சென்றுள்.

சந்திரநாதன் தன்னிடத்திலேயே வந்து அமர்ந்ததும் தன் கதையைத் தொடங்கினுன்: "அந்தச் சேட் குடும்

பத்தினரை ஓர் இடம் பாக்கி இராமல் தேடிப் பார்த்தும் அவர்கள் எனக்கு அகப்படவில்லை. அந்தச் செந்நிறச் சேலையும் என் கண்ணில் படவே இல்லை. ஒவ்வொரு மரத்தடியிலும் வந்து பார்த்தேன். வருவோர் போவோர் ஒவ்வொருவரையும், 'இந்தப் பக்கம் சேட் குடும்பத்தவர் யாராவது சென்றதைக் கவனித்தீர்களா? அந்தக் கூட்டத்தில் பெண்டுகள் அதிகமாக இருப்பார்கள். அவர்களுள் ஒருத்தி கண்ணைப் பறிக்கும் சிவப்பு வர்ணப் புடைவை கட்டிக்கொண்டிருப்பாள்' என்று விசாரிப்பேன். சிலர் ஏதாவது புலன் சொல்லுவார்கள்; ஆனால் எல்லாம் தவறுகவே இருக்கும். ஒரு நடனமாதின் பின் வாசிக்கும் ஸாரங்கிக்காரன் என்னைத் தேவதாஸிகள் இருக்கும் விடுதிக்கு அழைத்துச் சென்றான். தற்செயலாய் வழியில் ஒரு பெரிய வீட்டின் தாழ்வாரத்தில் அந்த அக்கினி வர்ணச் சேலையை நான் கண்டேன். அந்த இடத்தில் நுழைந்தேன். கேட்டு அறிந்ததில் அங்கே ஒரு சேட் கூட்டத்தார் மேல் மாடியில் இருப்பது ஊர்ஜிதமாயிற்று. எப்படி அவர்களை அண்டுவதென்று யோசனை செய்து விட்டு வண்டிக்காரனை மாடிக்கு அனுப்பினேன். தீக் கொழுந்து போன்ற அந்தச் சேலைக்காரி அங்கே இருப்பது தெரிந்தது. எத்தனையோ விதமான வர்ண மேலாடைகள் அந்த இடத்தை அழகுறச் செய்தன. கிளிப் பிள்ளைக்குச் சொல்வதைப் போல் வண்டிக்காரனிடம், எந்த விதமாக அவர்களை விசாரிப்பதென்று விளக்கினேன்: 'டேய், கையைக் கட்டிக்கொண்டு, அந்தச் சேட் கூட்டத்தார்தாமாவென்று ஜாடையாகப் பார். அப்புறம், வங்காளி பாபுவின் கைத்தடி—ஸாதாரணமான கழி—ரஸ்தாவில் நழுவிவிழுந்துவிட்டதை நீங்கள் யாராவது அந்தப் பக்கமாக வரும்போது பார்த்தீர்களா, அற்பமான வஸ்து

தானுலும் பாபுவுக்கு அதன்மேல் பிடித்தம் அதிகம்' என்று உபதேசத்தைப் பாதியில் நிறுத்திக்கொண்டேன்.''

* * *

ஆள்காரன் டீ அடுக்கை எடுத்து வந்தான். மீராவும் வந்தாள் பின்னாலேயே. அவளே டீயைத் தயாரித்தாள். சந்திரநாதன் எழுந்து மீராவைத் தனிமையில் அழைத்து அவளுடன் ரகசியமாக என்னவோ சொன்னான். அவன் கண்மட்டும் என்மேலேயே இருந்தது. பிறகு சிரித்த முகத்துடன் அவன் என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான். மீரா அவ்விடத்தைவிட்டு நழுவிக்கொண்டிருந்தாள்.

"ஏய், யாரடா அங்கே? விளக்கு ஏற்றி வை" என்று வேலைக்காரனுக்கு ஏவலிட்டான் சந்திரநாதன். பின்பு மீண்டும் ஆரம்பித்தான். "எக்காவாலா மேலே சென்றான். நான் கீழே காத்துக்கொண்டிருந்தேன், என்ன நடக்கப்போகிறதென்பதை அறிய. சில நிமிஷத்திற்கெல்லாம் பல பெண்கள் சேர்ந்து நகைக்கும் இனிய ஒலி கதவு சாளரங்களையும் குலுக்கியது. ஒரே சிரிப்பானது பல அலைகளாகப் பரவியது. என் மனத்துள் குடியிருந்த ஒரு துறவி இதனுல் சலனம் கொண்டு துடித்தான். வண்டிக்காரன் திரும்பி வந்து, 'சாமி, அவங்க உங்களுக்குத் தங்க வந்தனத்தைத் தெரிவிச்சு மேலே வரச் சொன்னுங்க' என்றான். எனக்கென்னவோ அது துளியேனும் ஒப்பவில்லை. எரிச்சல் கொண்டவனாய் வண்டிக்காரனைப் பார்த்து, 'எண்டா! இதெல்லாம் உன் சில்விஷமமா?' என்றேன்.

"பாவம், அவன் தன் கையைக் கூப்பிக்கொண்டு சொன்னான்: 'அப்பா...அப்படிச் செய்வேனா? எங்கப்

பன் மேலே ஆணையாச் சொல்லறேன்: அதெல்லாம் ஒண்ணுமில்லே. நீங்க சொல்லிக் கொடுத்தபடியே சொன்னேனுங்கோ. ஆனா அவங்க கொஞ்சங்கூட யோசிக்காமே ஒன்னு சிரிக்க ஆரம்பிச்சுட்டாங்க. அதுவும் பெண்பிள்ளைங்கதான் அதிகமாகச் சிரிச்சாங்க. பாபுவை மேலே இட்டுக்கொண்டு வா பார்க்கணும் இன்னாங்க என்றான்.

"அதே ஸமயம், வராந்தா முகட்டில் நடுவயது தாண்டிய ஒரு பெரியவர், கிராதியின் மேல் கவிந்து என்னை, 'பாபூஜீ! நீங்கள் மேலே வரலாமே. தயை பண்ண வேண்டும்' என்றார்.

"நான் சற்றுத் தயங்கினேன். மாடியில் காட்சி அளித்தவர் தாமே இறங்கி வந்துவிட்டார். அறிமுக மானவுடன், அவர் ஆக்ரா காலேஜில் ஒரு புரொபஸர் என்பது தெரியவந்தது. மாடிக்குச் சென்றேன். கால்கள் வெடவெடவென்று நடுங்கின. நம்மை எந்தவிதமாக நினைப்பார்களோ என்று சற்று அதைரியமும் ஏற் பட்டது.

"விசாலமான கூடம். அதன் மத்தியில் விரிக்கப் பட்ட ஜமக்காளத்தின்பேரில் எல்லாரும் வீற்றிருந்தனர். நான் நுழைந்தேனே இல்லையோ மீண்டும் அதே குலுங் கும் சிரிப்பு. அங்கே ஒருபுறமாகக் கிடந்த இரண்டொரு புருஷர்களும் இதில் கலந்துகொண்டனர். நடுவயதின ரான மாதர் சிலர் பெரிய மரத்தட்டில் ஏராளமான கனி வகைகளைத் தளராக அறுத்து நிரப்பிக்கொண்டிருந்தனர். திக்பிரமித்துப் போய் நான் அவ்விடத்திலேயே நின்று விட்டேன். அப்போது பக்கத்து அறையிலிருந்து வெளியே வந்தாள் ஒரு யுவதி. அவள்தான் அந்தச்

செந்நிறப் புடைவைக்காரி. நேர்முகமாகக் கண்ணெடுத்துப் பார்க்க என்னால் கூடவில்லை. கணுக்காலை நோக்கியவுடன் தெரிந்து கொண்டேன்.”

சந்திரநாதனுடைய பேச்சிற்குத் தடை ஏற்பட்டது. வேலைக்காரன் பிரகாசமான விளக்கு ஒன்றை ஏற்றி மேஜையின்மேல் கொண்டு வைத்தான். அவ்வொளியினால், இருள் சிதறுண்டு அவ்விடத்தைவிட்டு ஓடியது. கங்கை நதியின்மீது அதன் வெளிச்சம் லேசாக விழுந்தது. கங்கையின் சிற்றலைகள் அதைப் பிரதிபலித்துப் பளபளவென்று துள்ளின. விளக்கை அப்புறப்படுத்துவதற்கு வேலையாளுக்கு ஏவலிட வாய் திறக்கும்போது, எதிரே எழிலுடன் தோன்றினாள் மீரா—செக்கர்வானைப் பழிக்கும் அவ்விந்தைச் சேலை உடுத்திய மீரா! முன்பு மங்கிய வெளிச்சத்தில்தான் அவளை அந்த உடுப்பில் பார்த்தேன். இந்த ஜாஜ்வல்யத்தில் மிகத் தெளிவாகக் காட்சி அளித்தாள். இதற்கு ஓர் உவமையும் சொல்லத் தெரியவில்லை எனக்கு.

“இதுவே அந்தச் சேலை. இவளே அந்த ரூபவதி. மீரா! வா உட்கார். உன்னை நான் முதல்முதல் சந்தித்த அதிசயத்தைத்தான் இப்போது நரேசிடம் சொல்லிக் கொண்டிருக்கிறேன்” என்றான் சந்திரநாதன்.

மீரா அவனுடைய முகத்தையே ஊன்றி நோக்கினாள்.

* * * *

சந்திரநாதன் பேச்சைத் தொடர்ந்தான்: “இதைக் கேள், நரு! ரத்தாம்பரத்தைத் தரித்தவள், என்னைப் பார்த்தவுடன் சிரிப்பை அடக்கிய குரலில், ‘பாபூஜி, உங்களுக்கு என்ன தேவை? ஏதாவது எங்களால் முடிந்த

தைச் செய்கிறோம்' என்று சொன்னாள். அவளுக்குச் சிரிப்புப் பொங்கி எழுந்தது. உடன் இருந்தவர்களுக்கும் அப்படியே வந்தது. அவமானத்தால் என் தலை தரையோடு தரையாகக் கவிழ்ந்துவிடும்போல் இருந்தது. எப்படியோ சமாளித்துக்கொண்டு, 'ஒன்றுமில்லை. சிறிய கழிதான். அற்பமான வஸ்து; ஆனால் வெகுநாட்கள் நான் அதனுடன் பழகிவிட்டேன். பிரிந்து விட்டதனால் சஞ்சலப்படுகிறேன்' என்றேன்.

"செந்நிறச்சேலையின் சொந்தக்காரி, 'பாபு! நீங்கள் பிடித்ததை ஸாதிக்கும் பேர்வழிபோல் எனக்குத் தோற்றுகிறது. ஒரு துச்சமான தடி: அதன் மேலா இவ்வளவு பாசம் உங்களுக்கு?' என்றாள்.

"அங்கேயிருந்த மற்றப் பெண்கள் இடிஇடியென்று நகைத்தனர். ஆனால் என்னோடு உரையாடும் அந்தச் சிவப்புப் புடைவைக்காரியின் குரலில் ஏளனத்தின் குறிப்புத் தினையளவும் தொனிக்கவில்லை. 'மன்னிக்க வேண்டும். மனத்திற்கு உகந்த ஒரு பொருளிடத்தில் உங்களுக்கு இவ்வளவு அசையாத பற்று இருப்பது தெரியாமல் இதையெல்லாம் கூறிவிட்டேன்' என்றாள்.

"இந்தத் தடவை நான் அவளை நிமிர்ந்து நோக்கினேன். என்ன அழகு போ! இளவயசு. அவள் கண்களிலும் முகத்திலும் வியப்பு, ஊக்கம் முதலிய என்ன என்னவோ அபூர்வ உணர்ச்சிகள் ஒன்றுகூடியிருந்தன. ஒரே நொடியில் இவ்வளவு மாறுதலா? என் மனத்துள் இருந்த வைராக்கியம் இறந்துபோய், அதற்குச் சமாதியும் கட்டிவிட்டேன்.

"நீ சொன்ன பிரகாரம் அக்பர்ஷாவின் கல்லறைக்குப் பக்கத்திலேயே அழகுத் தெய்வங்கள் கூடும் அந்தச்

சந்தையில் என் மனோ வைராக்கியத்திற்கும் ஸமாதி கட்டி விட்டேன். என் உள்ளத்தில் இடங்கொண்டவள் எனக்கு முற்றும் அறிமுகம் இராதவள். என்னுள் அதுவரை மறைந்து கிடந்த, கூரையினில் கூடுகட்டி வாழ விரும்பும் ஒரு பறவையும் கூரையின்கீழ்ப் புகலிடம் தேடும் தொன்மையான மனிதனும் அரசாட்சி செலுத்த ஆரம் பித்தனர். அந்த இடத்திலேயே நின்று திகைத்தவண்ணம் அந்த லாவண்யவதியைப் பார்த்து, கற்பனையில் அவளோடு இன்புற்று, வீடு வாசல், மக்கள், சுற்றத்துடன் வாழ்வது போல் கண்டேன்.

"அப்போது புரொபஸர், 'இவள் என் பெண் மீரா' என்றார்."

* * * *

இதோடு சந்திரநாதன் மௌனமாகி விட்டான்; மயங்கிப்போய் மீராவைப் பருகிவிடுவதுபோல் பார்த் தான்.

மீராவின் கண்ணோக்கும் அவன் பக்கமாகவே சென் றது. நான் ஸிகரெட்டைப் பற்ற வைத்துக்கொண்டு கங்கை நதியின்பேரில் கவனத்தைச் செலுத்தினேன்.

சிறிது நாழிகைக்கெல்லாம் மீரா, "சாப்பிட வரலாம்; எல்லாம் ஸித்தமாகிவிட்டன" என்றாள்.

சந்திரநாதன் என் பக்கமாகத் திரும்பினான். அப்புறம் என்ன நடந்ததென்று அவனைக் கேட்க நான் முற்பட வில்லை. நம்மவரென்று சொல்லப்படுவோரை வாழ்க்கையில் அதிசயமான ஸந்தர்ப்பத்தில் பார்க்கக் கொடுத்து வைத் திருந்தேன். முதல் சந்திப்பிலேயே நன்னிமித்தமாகத் தம்பதிகளின் கண்கள் கூடுவது போலவே அவர்கள் உள்ள

மும் ஒருமித்துக் கடைசிவரை இருப்பதே பரமசுகிருத மாகும்; அதற்குமேல் எதுவும் அவசியமில்லை. மேலே தெரிந்துகொண்டு என்ன ஆகவேண்டும்? ஆகையால் எழுந் திருந்தேன்.

## அத்தியாயம் 8

மற்ற விஷயங்களை மீராவின் மூலமாகச் சேகரித்துக் கொண்டேன். ஆவல்கொண்ட மனம் கலைஞனின் வாழ்க்கை நியதியை அதிக்கிரமித்தது.

மறுநாள் காலையில் சந்திரநாதன் தன் தொழிலைக் கவனிக்க வெளியே சென்றதும் மீராவிடம், "யஜமானர் வீட்டில் இல்லாததால் யஜமானி அல்லவோ விருந்தினரை உபசரிக்க வேண்டும்? வாருங்கள். நாம் இருவருமாய் டீ அருந்திவிட்டுப் பேசலாம்" என்றேன்.

அமைதியைத் தரும் தன் சிரிப்புடன் மீரா என் அருகில் வந்து அமர்ந்தாள். காலை வெளிச்சத்தில் அவளை ஒரு முறை பார்த்தேன். இணையற்ற வடிவழகு! இந்தக் காலம்மட்டும் க்ஷத்திரிய யுகமாக இருந்திருந்தால் இந்தப் பாவைக்காகப் பெரும் போர்கூட மூண்டிருக்கும்! சந்திர நாதன் மனத்துள் இருந்த துறவு மாண்டது இவ்வழகியின் ஒளிபட்டே. 'இவர்களுடைய இல்லறம் அழியாத ஸ்வர்க்க போகமாக இருக்கவேண்டும். இவர்களது வாழ்வு பயங்கரம் தரும் எலும்புச் சடலமாக மாறக் கூடாது' என்று உள்ளூற வேண்டிக் கொண்டேன். சாந்தமான ரூபம் அவளது. முகத்தில் ஏதோ ஒரு துயரின் சாயல். அவளைக் கண்டபேர் அவளிடத்தில் அனுதாபம் கொள்ளாமல் இருக்கமாட்டார். கூர்ந்து கவனித்து, 'வாழ்க்கை நதியின் அலையெனக் கலகலப்பாக இருக்கும் ஒரு பெண் முன்பின் தெரியாத சந்திரநாதனைப்

போன்ற ஒரு மனிதன் எதிரே நின்று சிரிப்பும் வியப்பும் மேலிட, மனத்திற்கு உகந்த ஒரு பொருளின்மீது அவ்வளவு பற்றுதலா என்று எவ்வாறு வினவத் துணிந்தாள்?' என ஆச்சரியங்கொண்டேன்.

*　　*　　*

"அதிர்ஷ்டம் என்பதில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?" என்று மீரா கேட்டாள்.

"எதற்காக இதை எடுத்தீர்கள்?" என்று வியப்புக் கொண்டவனுய்ப் பதிலுக்குக் கேள்வியைப் போட்டேன்.

"நான் அதை நம்புகிறேன். முதலில் எனக்கு நம்பிக்கை இல்லை; இப்போது உண்டு."

"உங்களுக்கு நம்பிக்கை எவ்வாறு மூண்டது? அதைச் சொல்லுங்கள். சந்திரநாதனை மணந்து கொண்டதே ஒருவேளை—?"

"ஆம்! என்னுடைய தகப்பனுர் ஒரு சேட். ஆனல் வியாபாரம் கீபாரம் ஒன்றிலும் அவர் ஈடுபட்டதில்லை. வாழ்நாள் முழுவதும் படிப்பதிலும் எழுதுவதிலுமே கழித்துவிட்டார். என்னையும் நன்ருகப் படிக்கவைத்தார். தம் வரைக்கும் அவர் நாஸ்திகர். நானும் நாஸ்திகமே கொண்டாடினேன். ஆனல் உங்களுக்குச் சொல்வதனுல் என்ன தவறு? சந்தைக்குச் செல்லும் மார்க்கத்தில் ஓர் அற்பமான மூங்கில் துண்டை - கைத்தடி துச்சமான வஸ்துதானே?-கண்டேன். எடுத்துக் கொண்டேன், வேடிக்கையின் பேரில். அந்த மாதிரி எதற்கும் உதவாத பொருள்கள் பல, வழியில் எவ்வளவோ தென்படுகின்றன. என்ன ஆச்சரியம்! எனக்கு ஏனே அந்தக் கழியின்மேல் நாட்டம் சென்றது? என்னவோ தோன்றியது. எதற்

காக அதை எடுத்து வைத்துக்கொண்டேனே அது எனக்கே தெரியவில்லை.''

இதன் பின்னர் மீரா சொன்னதன் சாரம்: சந்திர நாதன் அவர்கள் குடும்பத்தில் ஒருவனாகிவிட்டான். மீராவின் தந்தை உதாரமான மனம் படைத்தவர்; சேட்டானாலும், வெறும் பண தேவதையைப் பூஜிப்பவரல்ல. ஸரஸ்வதியின்மேல் பக்தி கொண்டவர். சந்திரநாதனுடன் ஸம்பாஷித்ததில் அவர் அவனுடைய குணவிசேஷங்களில் திருப்திகொண்டார்.

மீரா மேலும் சொல்லுவாள்: "வீட்டைத் துறந்து வந்துவிட்டாரென்று கேள்விப்பட்டதும் எனக்கு அழுகை வந்துவிட்டது. மறைவில் சென்று புலம்பினேன். நானே வலுவில் அவரைத் தொட்டு, "நீங்கள் வேறு எங்கும் செல்லவேண்டாம். எங்களுடன் வந்து விடுங்கள். உங்கள் உள்ளத்தில் இருக்கும் ஓர் அசையாத பற்றுதலை, மனிதர்களுக்கல்லாமல் வெறும் கல்லுக்கா தரப்போகிறீர்கள்?'' என்றேன்.

"அப்பா அவரைப் பார்த்து, 'உங்களுடைய கவி ரவீந்திரர் அந்தமாதிரி இருக்கும்படி கூறவில்லையே' என்றார். அந்த இடத்திலே ஒரு கவிதையை அவர் எடுத்துச் சொன்னார். அதன் அர்த்தம், வைராக்கியத்தினால் விடுதலை வந்துவிடாது என்பதுபோல் ஒன்று.''

நான் சிரித்துவிட்டு, "ஓ! அதுவா? 'வைராக்கிய ஸாதனே முக்தி ஸே ஆமார் நய்' என்பதுதானே?''

"அதுவே'' என்றாள் மீரா.

"அப்புறம்?''

"அப்புறமா?''

மீராவின் கண்கள் கனவுகாண்பனபோல் இருந்தன. யௌவனதசைக்கு வந்தவன், தன் பால்ய காலத்தைத் திரும்பிப் பார்த்துக்கொள்ளும் ஒரு நோக்கு அது; நடு வயதின் எல்லையை அடைந்தவன், யௌவனத்தைப் பற்றிக் கனவு காணும் காமுறு நோக்கும் மீராவின் கண்களில் புலப்பட்டது. "அப்புறம், உங்களுடைய நண்பருக்கும் எனக்கும் ஆழ்ந்த பற்றுதல் ஏற்பட்டது. எனக்குத் தெரியாத ஓர் அன்னியன் என் வாழ்வில் வந்து எவ்வாறு இன்பத்தைத் தரமுடியுமென்பது எனக்கே தெரியவில்லை."

சந்திரநாதன் மீராவின் தகப்பனாரிடம் மீராவைத் தனக்குத் தரும்படியாசித்தான். மீராவின் பிதா தாராள மனமுடையவர். இந்த விவாகத்திற்குத் தம் அனுமதியைத் தந்தார். சந்திரநாதன் விடைபெற்றுச் செல்ல மீராவிடம் வரும்போது சற்றும் அச்சம் இராமல் அவளும் அவன் கையைப் பிடித்துக்கொண்டு வீட்டை விட்டு வெளியேறிவிட்டாள்.

"கேளுங்கள் இதை" என்று கூறி மீரா, "இம்மை மறுமை எல்லாம் என் ஆருயிர்க் காதலருக்கு எதிரே திருணமாகத் தோற்றின" என்றாள்.

திடீரென அடக்கமுடியாத அவாவினால், என்னையும் மீறி நான், "இன்றளவும் அப்படித்தானே?" என்று கேட்டுவிட்டேன்.

மீராவுக்குத் தூக்கி வாரிப் போட்டது; அவள் மெய் சிலிர்த்து, "ஆமாம்; இன்றளவும்" என்றாள்.

இதைக் கூறி முடித்ததும் தான் சொன்ன விஷயத்தை அவள் தானே பரிசோதிப்பதுபோல் இருந்தது. சரியெனத் தெளிவதற்காகத் தன் தலையை அசைத்தாள் இரண்டு தரம்.

நான் நினைத்த நாரி அல்ல அவள். வாழ்க்கையின் அலைகளை அவள் பின்னால் விட்டுவிட்டு வந்திருக்கிறாள். ஆனால் கடலை நோக்கிச் செல்லும் நதியைப்போல், அவள் இரண்டறக் கலந்துவிட்டாளோ அல்லது குறுக்கிட்ட மலையின் இடுக்கில் சிக்கி எங்கேயாவது மறைந்துவிட்டாளோ? ஒன்றும் புரிந்துகொள்ள முடியவில்லை. பெரு மூச்செறிந்து நான் அவளை விளித்து, "மேலே என்ன நடந்தது?" என்றேன்.

"உங்கள் நண்பருக்குச் சீக்கியமதம் புகவேண்டுமென்று ஓர் எண்ணம் பிறந்தது. சட்ட ரீதியாக ரிஜிஸ்டர் செய்த விவாகத்தில் அவருக்கு விருப்பமே இல்லை. எனக்கும் இல்லை. குருத்வாரத்தில் நாங்கள் சீக்கிய சமயம் பூண்டோம். சீக்கிய ரீதியாகவே எங்கள் விவாகம் நடந்தேறியது."

"அப்புறம்?" என்றேன்.

"அப்புறம்?"

என் கேள்விக்கு மறு கேள்வியைப் போட்டுவிட்டு மீரா பேசாமல் இருந்தாள். வெகுதூரம் பிரவாகித்துச் செல்லும் கங்கை திசைமுடிவில் வானைச் சேரும் இடத்தில் அவளுடைய கண்கள் நிலைத்தன.

மேற்கொண்டு வினவுவதை நான் நிறுத்திவிட்டேன். மௌனமாகவே நாங்கள் இருவரும் அமர்ந்திருந்தோம். அச்சமயம் உள்ளே சந்திரநாதனுடைய குழந்தை அழும் குரல் கேட்டது. மீரா விரைவாக எழுந்து சென்றாள். மகனை மடியில் வைத்துக்கொண்டு வெளியே வந்து, "நீங்கள் சொன்ன 'துஷ்டு' என்ற வார்த்தை மிகவும் அழகாய் இருக்கிறது. துஷ்டு, என் துஷ்டக் கண்ணு!" என்று குழந்தையுடன் கொஞ்சிக் குலாவினாள்.

நானும், "குழந்தையென்றால் துஷ்டாகத்தான் இருக்கவேண்டும்" என்றேன்.

குழந்தை கதறி அழத் தொடங்கியது. "இந்தப் பிள்ளையை வைத்துக்கொள்வது பெரிய தொல்லை. ஒவ்வொரு ஸமயம் எப்போது இவன் பெரியவனாகப் போகிறானென்று இருக்கிறது."

இதைக் கூறிவிட்டு அவள் உட்புறம் சென்றாள். அவள் சென்று இரண்டு மூன்று நிமிஷங்களுக்கெல்லாம் சந்திரநாதன் திரும்பிவந்தான். மோட்டார் ஸைகிளை உள்ளே இழுத்துக்கொண்டு வந்து அதிலாகவத்துடன் வாயிற்கதவைப் பின்னால் உதைத்துத் தள்ளிவிட்டு, வராந்தாவை அடைந்தான். மேஜைமீது ஸிகரெட் பாக்கெட்டைச் சர்ரென வீசி, "எடுத்துக்கொள்" என்றான் என்னை நோக்கி.

அனாவசியமான ஆர்ப்பாட்டத்தை அவ்விடத்தில் உண்டாக்கினான்.

"எங்கள் இருவருக்கும் டீ கொண்டு வந்து வை, மீரா. பாப்பாவுக்கு நல்ல பெயர் பார்த்து வைத்திருக்கிறேனே தெரியுமா? ஜிஞ்ஜிர் ஸிங்" என்று அவன் கூறுவது என் செவிக்கு எட்டியது. வியப்புற்ற குரலுடன் மீரா பதிலுக்கு, "ஜிஞ்ஜிர் ஸிங்கா!" என்று மொழிவதும் கேட்டது.

"ஆமாம், அது சரிப்படாது போனால் பந்தன் ஸிங்" என்றான் சந்திரநாதன்.

நானும் வியப்பிற்குள்ளானேன். மீராவின் குரலே அதற்குமேல் கேட்கவில்லை. சந்திரநாதன் வெளியே வந்து என் பக்கத்தில் உட்கார்ந்த வண்ணம், "புதிய வழியில்

என் வாழ்க்கையைத் தொடங்க உத்தேசித்திருக்கிறேன், நரூ!" என்றான்.

இதற்கென்ன பதில் தருவதென்று தோன்றாமல் அவனையே மௌனமாக வினவுவதுபோல் பார்த்தேன்.

"இந்த இடத்திலுள்ள தொழிற்சாலையை விற்றுவிட்டேன். இந்தத் தடவை மகத்தானதொன்றை ஆரம்பித்து ஸாதிக்கவேண்டும். பிரமாதமானது எதுவும் நான் கட்டப் போவதில்லை. ஆயிரம் பேர் தேனீக்களைப்போல் இரையும் தேன்கூடு எதையும் நிர்மாணம் செய்யப்போவதில்லை" என்றான்.

"வேண்டாம், வேண்டாம், சந்திரநாத்! இந்த மாதிரி காரியத்தைச் செய்யாதே. உன் பெயர் நிலைக்கும்படியான தொன்றை—" என்பதற்குள் அவன் "அது ஆகாத காரியம், நரூ! நான் எவ்வளவோ யோசித்துத்தான் இந்த முடிவிற்கு வந்திருக்கிறேன். இவ்வளவு அழகான பிரபஞ்சத்தில் பிரும்மாவின் பிரதிபிம்பமாக வந்திருக்கிறோம். எதையும் படைக்காமலா, எதையும் நிலைநிறுத்தாமலா இப்படியே அழுந்திக் கிடப்பேனென்று நினைக்கிறாய், நரூ?" என்றான்.

"உன்னால் முடியும். ஏனென்றால், இந்தச் சந்தர்ப்பத்தில்தான் வாழ்க்கையில் துன்ப மிகுந்த கட்டம் நிகழ்ந்து விடுகிறது" என்றேன்.

மீரா டீ தயாரித்துக்கொண்டு வந்தாள். அவள் அதை எடுத்து எங்களுக்குப் பரிமாறும்போது சந்திரநாதன், "மீரா, இங்கே இருக்கும் தொழிற்சாலையை விற்று விட்டேன்" என்று சமாசாரத்தை வெளிப்படுத்தினான்.

மீரா சந்திரநாதனுடைய முகத்தையே கவனித்தவளாய், "நல்லதாயிற்று" என்றாள்.

பின்பு, அவள் மெல்ல அவ்விடத்தை விட்டு நீங்கினுள். அவள் போனதையே கவனித்த வண்ணம் சந்திர நாதன், "மீரா அதிசயமானவள், கல்யாணமாவதற்கு முன்பு அதிகமாகப் பேசுபவள், சஞ்சலஸ்வபாவம் உடையவள். ஆனல் விவாகம் ஆனபிறகு, அவள் தினே தினே சாந்தமடைந்து வருகிருள். பொறுமையின் உருவாகவே விளங்குகிருள். எதன் பேரிலும் ஆசை இல்லே; பகை இல்லே; பரபரப்புக் கொள்வதில்லே. அப்படி விரோதம் மூண்டாலும்......" என்று கூறியதும் சிறிது நேரம் அவன் பேசாமல் இருந்து விட்டு, "நரூ, தெரியுமா உனக்கு? கொஞ்சநாளாகவே என் உள்ளத்தில் பெரிய புரட்சி மூண்டிருக்கிறது. விவாகம் ஆனபிறகு அழகிய சிறு வீடொன்று கட்டிக்கொண்டு மீராவுடன் வாழ்ந்து வந்தேன். நான் தொழிலாளியாகவும், சைனிகனுகவும் இருந்த சமயம் சேமித்து வைத்த பணம் பிற்காலம்வரை நாங்கள் சுகமாக இருக்கப் போதுமானதென்று எண்ணியிருந்தேன். அன்று எனக்கு எதன்பேரிலும் பற்றுதல் ஏற்படவில்லே. ஆனல் மெல்ல மெல்ல என் மனம்மட்டும் அமைதியை இழந்தது. ஒரு சிறு வரம்பிற்குள் அடங்கி ஒரே பெண்ணின் மூஞ்சியை எத்தனே நாட்கள் பார்த்துக் கொண்டிருப்பது? டாடாவின் நினேவுகள், யந்திரங்களின் கர்ஜனே, யுத்த கோஷம் எல்லாம் ஒவ்வொன்ருக என்னேத் தட்டி எழுப்பின. நான் எவ்வளவுக்கெவ்வளவு பரபரப்புள்ளவனே அவ்வளவுக்கவ்வளவு மீரா சாந்தங் கொண்டவள். இந்த மாறுதலே அப்போதுதான் நான் கண்டேன். அவள் மட்டும், வாயாடியாகவோ, சஞ்சலம் உடையவளாகவோ, ஸாதாரணமான பெண்களேப்போல வெகுளியாகவோ இருந்திருக்கும் பக்ஷத்தில், அவளேத்

துறந்துவிட்டு என்பாட்டிற்கு யதேச்சையாகப் போயிருப்பேன். ஆனால் மீரா என்னுடன் போராடும் முறையோ முற்றும் புதுமையானது; அற்புதமானது. மீராவைத் தோற்கடிக்க முடியாதென்பதை உணர்ந்தேன்'' என்றான்.

நான் பேச முற்பட்டேன்: "சந்துரு, உன் குழந்தைக்குக் குமார கிஷோர் என்ற பெயரைச் சூட்ட மீரா ஆசைப்படுகிறாள். பெயருக்கு யாதொரு பொருளும் இராததே மேல். என்ன சொல்லுகிறாய்?'' என்றேன்.

சந்திரநாதன், "மீரா! மீரா!'' என்று கூப்பிட்டான். மீரா வந்தாள். "உட்கார், மீரா'' என்றதும் அவன் அவள் பக்கம் ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டான். மீராவின் கரத்தைப்பற்றி, "குமார் கிஷோர் என்று குழந்தைக்கு நாமகரணம் செய்ய வேண்டும்?'' என்றான்.

மீரா கூச்சத்துடன், "'ஜிஞ்ஜிர்' என்ற பேருந்தான் காதுக்கு இனிமையாக இருக்கிறது. பொன்விலங்கு பூட்டிய நம் வாழ்வில் அவன் பொற் கிண்கிணி அல்லவா?'' என்றாள்.

"இல்லை, 'குமார் கிஷோர்' என்றுதான் வைக்க வேண்டும்'' என்றான் சந்திரநாதனும்.

புளகிதம் கொண்ட மீரா, "அதுவும் அழகான பெயர் தான்'' என்றாள்.

"மீரா, நான் சொல்வதைக் கேள். இங்கே உள்ள தொழிற்சாலையை விற்றுவிட்டேன். இனிமேல் வீடு கட்டுவதாயிருந்தால் அரசர்களுக்கு உரிய மாளிகை அல்லவோ நிருமிப்பேன். ஒவ்வொரு மூலையிலும் ஐசுவரியம் சொரிந்து கிடக்கவேண்டும். பெரிய தொழிற்சாலை

வைத்து, ஆயிரக் கணக்கான பேரைப் பரிபாலிப்பேன். உன் யோசனை என்ன சொல்லு?" என்றான்.

சிரத்தையும் வியப்பும் சேரத் தன் கணவன் முகத்தையே நோக்கிய வண்ணம் மீரா, "நன்றாகத்தான் இருக்கும்" என்றாள்.

அடிக்கடி, நான்தான் ஏதோ தவறு செய்தவன்போல் எனக்குப் பட்டுக்கொண்டே இருந்தது.

* * * *

சந்திரநாதன் ஆழ்ந்த பாவத்தோடு இராமல் சலனமும், மலர்ச்சியும் அடைந்திருப்பதைக் கண்டுகொண்டேன். அவனது கற்பனை வானில் ஒரு கோட்டை மெல்ல உருவெடுத்தது. மறுநாள் அதிகாலையில் பங்களாவுக்கு வெளியே உலாவச் சென்றபோது இதைக் குறித்தே என் எண்ணம் திரும்பியது. சந்திரநாதன், கையில் தன் சிசுவை அணைத்துக் கொண்டு என் எதிரே வந்து, "டே நரூ! நேற்று இரவு நான் இன்பத்தில் மூழ்கி இருந்தேன். இந்த மாதிரி நேர்ந்து வெகு நாளாயிற்று" என்றான்.

"இன்பமெல்லாம் மனம் வரைக்குமே, சந்துரு! ஸாதாரணமான வாழ்வில்தான் சுகம் பெற முடியும். இயற்கைக்கு நேர்மாறான வாழ்வே அல்லல்களுக்கும் அமைதியின்மைக்கும் மூல காரணம். இந்த மாதிரிக் குழந்தையையும், மீராவைப்போன்ற ஸ்திரீ ரத்தினத்தையும் வைத்துக் கொண்டு உன் வாழ்க்கையை ஏன் அநாவசியமாக எரித்துச் சாம்பலாக்குகிறாய்?"

குழந்தையைத் தன் மார்போடு சேர்த்துக்கொண்டு, "பாப்பா, என் மீராவைச் சுகத்தில் வைப்பதற்குத்தான் இந்தச் சிரமம் எல்லாமடா" என்றான்.

கழுத்தை அசைத்து அடிக்கடி அவன் சொன்னதை ஒப்புக்கொள்ளாமல், "இல்லை, இல்லை...ஒன்று: என்னை ஏமாற்றுவதற்காக இருக்கவேண்டும். இல்லாவிட்டால் உன்னையே ஏமாற்றிக் கொள்வதாகும்" என்றேன்.

சிறிது நாழிகை சும்மா இருந்துவிட்டு அவன் எழுந்திருந்து உள்ளே சென்றான். குழந்தையை அதன் தாயிடம் தந்துவிட்டு என்னிடம் வந்து, "யாரையும் ஏமாற்றவில்லை. இவ்வழகிய உலகில் என்னால் ஆகக் கூடியது ஒன்றுமே இராதா? கொஞ்சமேனும் என் ஞாபகச் சின்னத்தை வைத்துவிட்டுப் போக என்னால் இயலாதா? நான் விட்டுச் செல்வதெல்லாம் என் குட்டிப் பாப்பாவையே அடையும்" என்றான்.

அவனது முகம் ஆழ்ந்து விளங்கியது. எதிராக நான் எதுவும் பேசவில்லை.

ஹிந்து மதாசாரப்படி குழந்தையின் அன்னப் பிராசனம் நிறைவேறியது. குழந்தையின் மாமா ஸ்தானத்தில் நான் இருந்தேன். கடைத் தெருவுக்கு ஓடித் தட்டு, கோப்பை, விளையாட்டுச் சாமான்கள், குட்டி நிஜார், சொக்காய், பொன் ஆபரணம் எல்லாம் வாங்கிக்கொண்டு வந்தேன். இருந்தாலும் அரைகுறையான மனத்தோடு தான் வந்தேன்; குழந்தைக்கு அரைக்கச்சு மட்டும் அகப்படவே இல்லை. கடைத்தெருவில், இவற்றை யெல்லாம் பார்த்துச் சந்திரநாதன் என் காதைத் திருகி, "என் மைத்துனனாக வேஷம் போட்டுப் பிறந்தகத்து வரிசை கொண்டு வருகிறாயா? இவையெல்லாம் எதற்காகடா? அவசியமே இல்லை" என்றான்.

நானும் அவன் கரத்தைப் பிடித்திழுத்து, "என் தங்கை புருஷன் செய்யும் இந்த அதிகப்பிரஸங்கித்தனத்திற்கு இதுதான் நான் தரும் சீர்" என்றேன்.

எங்களுடைய வேடிக்கையான போக்கைப் பார்த்து மீரா மெதுவாகச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

வங்காளிப் பெண்களைப் போலவே அவள் சேலை உடுத்து, என் பாததூளியைச் சிரமேற் கொண்டு வணங்கினாள்.

என் மனத்துள்ளேயே, "பூமிதேவியைப்போல் எதையும் ஸஹிக்கக்கூடிய தன்மை உனக்கு இருக்கவேண்டும்; யமதர்மராஜனைப்போல் சக்தி வாய்ந்தவளாய் இருக்க வேண்டும். வாழ்க்கைப் போரில் உனக்கு வெற்றியும் மங்களமும் உண்டாகட்டும்" என்று அவளை வாழ்த்தினேன்.

## அத்தியாயம் 9

இது நிகழ்ந்தபின் சந்திரநாதன் மீண்டும் எங்கேயோ மறைந்தான். மன ஆகாயத்தில் ஓர் இடம் விடாமல் தேடியும், என் கற்பனையின் அந்தக் காலபுருஷ நக்ஷத்திரம் தென்படவில்லை.

திரும்பி வந்ததுமே சந்திரநாதனுக்கு ஒரு கடிதம் போட்டேன். மீராவிடமிருந்து பதில்கிடைத்தது. முத்து முத்தாக ஆங்கிலத்தில் எழுதி இருந்தாள். கான்பூர் தொழிற்சாலையைச் சந்திரநாதன் விற்றுவிட்டு, வேறொன்று ஸ்தாபிப்பதற்கு இடம் தேட எங்கோ சென்றிருக்கிறான், இன்னும் திரும்பவில்லை என்ற விஷயம் தெரியலாயிற்று. மீராவின் நினைவே எனக்கு ஸதாகாலமும் வந்தது.

> "ரத்தக் கலப்புடைய என் உறவினர்களை நான் மறந்துவிட்டேன். ஆனால் உங்களைக் கடவுள் என் உடன் பிறந்தவராக அனுப்பினார். உங்களை மறப்பது ஸாத்தியமன்று"

என்று எழுதியிருந்தாள் அவள்.

அவளுக்கு எழுதிய பதில் கடிதத்தில் நானும்,

> "சகோதரியே! இந்தத் தடவை நோன்புக்கயிறு* கட்டாயம் ஒன்று அனுப்புவாய் என்று நம்புகிறேன்."

---

* வங்காளத்தில் உறவினர்களுக்குப் பெண்கள் நோன்புக் கயிறு அனுப்புவது வழக்கம்.

எனக் குறிப்பிட்டிருந்தேன். ஆனால் அந்தக் கடிதம் 'டெட் லெட்டர்' ஆபீஸுக்குப் போய் என் கைக்கே வந்து விட்டது. அன்று நான் கண்ணீர் பெருக்கியது இவ்வளவு அவ்வளவன்று. மீரா, சந்திரநாதன் இருவரும் பரந்த இவ்வுலகில் மாந்தரின் பெருந்திரளில் எங்கோ தொலைந்து போயினர். ஆனால் என் சிந்தனை உலகில் முக்கியமாக விளங்கியவர் அவ்விருவருமே.

அவர்களைப்பற்றிக் கதை எழுதுவதில் நான் பித்துக் கொண்டேன். ஊணும் உறக்கமும் துறந்தேன். அவர்களது வாழ்க்கைக் கதையை மூன்றுதரம் மாற்றி அடித்து எழுதினேன். இதைப் பார்த்து என் நண்பர்கள், "இவனுக்கு மூளையில் ஏதாவது கோளாறு?" என்றுகூடப் பேசிக்கொண்டனர்.

கதையின் முடிவு எவ்வாறு இருக்கவேண்டுமென்பது என் கற்பனை சக்திக்கு எட்டவே இல்லை. ஆகவே எழுதுவதை விட்டொழித்தேன். கண்கூடாக அதன் முடிவு நிகழ்வதற்காகக் காத்திருக்கிறேன்.

* * * *

ஆ! மறுபடியும் என் அறையின் சாளரக் கதவு திறந்துகொண்டது. சிலுசிலென்று ஒரு வாடைக் காற்று உள்ளே புகுந்து உடலைச் சிலிர்க்கச் செய்தது. சிந்தனையின் தாரை தடையுற்றது. திறந்த ஜன்னல் வழியாக வீதியிலிருந்து வரும் விளக்கொளி என் மனக்கண் முன் நிற்கும் மர்மம் குடிகொண்ட நிழல்திரையை அறுத்து விட்டது.

ஜன்னற் கதவைக் கொக்கியிட்டு மூடிவிட உறுதி கொண்டு எழுந்திருந்தேன். மூடும்போது வெளியுலகின்

தோற்றம் என் கண்முன் சென்றது. நகரத்தின் புகையும் ஒளியும் கலந்த போர்வைக்குமேல் இருண்ட வானின் தெளிவற்ற உருவம். பல்லூழியாகத் தவம் செய்வது போல் கணக்கற்ற உடுக்கணங்கள் ஒளிச் செய்தியை மாநிலத்தை நோக்கிப் பரப்பின. இயற்கை ஒளியின் ஸங்கேதம், கீழே மனிதன் இயற்றும் மாசு நிரம்பிய புகைப் படலத்தால் அழிந்தே போய்விட்டது. மேற்குத் திசை வான் முகட்டில் இந்தப் புகைப்படலத்தை ஊடுருவி ஒன்றுமட்டும் பளபளவென்று ஒளிர்ந்தது. அதுதான் வெள்ளி. சில கணம் நின்று அதையே நோக்கினேன். கண்களைக் குளிரச் செய்யும் நீலச் சுடர்விடும் ஒளிக் கொழுந்து. ஜன்னலை மூடிவிட்டு என் இடத்தில் வந்து அமர்ந்தேன். இருள் நிறைந்த அறையில் மனத்திலுள்ள திரைச்சுருள் அவிழ்ந்து பரவியது.

வெண்மையும் கருமையுமான இறகுகள் படைத்துக் காலமென்னும் மாப்பறவை பறக்க ஆரம்பித்தது. இரண்டு வருஷமென்னும் நீண்ட வழியைக் கடந்து அது என் மன விருக்ஷத்தின் உச்சாணிக்கிளையில் இளைப்பாறத் தங்கியது.

அது யார்?—கற்பனைத் திரையின் ரகசியம் பின்னும் அதிகமாயிற்று.

மலர்மலிந்த இளவேனிலைப் போல், நிறத்திலும் செவ்வியிலும் மென்மையிலும் உயர்ந்து விளங்கும் மேனி; மிக்க விலையுள்ள பகட்டான வஸ்திரம் இடுப்பில்; உடம்பில் மெல்லிய பட்டில் 'பாஞ்சாபி'.* கழுத்தில் இருக்கும் அங்கவஸ்திரம் மாலைபோல் தரையளவு புரள,

*சொக்காய்.

கழுத்தை அழகாக வளைத்து நின்றுகொண்டு குறுநகை செய்வது யார்? ஹீருதான். ஹீரு வந்துவிட்டான்! "ஹீரு! ஹீரு! உன்னைப் பார்த்து ரொம்ப நாட்களாயினவே! சீமையிலிருந்து எப்போது திரும்பி வந்தாய்?" என்றேன்.

இவ்வாறு நான் எதிர்பாராத சமயம் ரகசியமாகவே அன்று ஹீரு என்னைத் தேடிக்கொண்டு வந்தான். பெண்களுக்குரிய மதுரச் சிரிப்புடன் அவன், "இன்று இரவு வெகுநேரமாகிறது. இதோ வந்துற்றுள் உன்றன் வாஸவதத்தை. மன்னரது தண்காவில் சிறு மகிழம்பூவின் செய்தி ஒன்றும் கிடைத்திலதே, நண்பா!" என்றான் ரஸிகத்தனமாக.

என்னுடைய ஹீரு என் அறையில் அழுக்கேறிய படுக்கையின் மேல் ஆர அமர்ந்தான். திகைப்புற்று வாய் பிளந்தபடி அவனையே ஏற இறங்கப் பார்த்தேன். ஏற்கனவே பிரகாசமான அவனது தேக வர்ணம் இப்போது பின்னும் மினுமினுப்புடன் விளங்கியது. மனத்திற்கினிய புஷ்பஸாரத்தின் நறுமணம் அவன் உடையிலிருந்து வீசி என் அறையைக் கமழச் செய்தது.

"ரொம்ப நாளைக்கு அப்புறம் வந்திருக்கிறேன். அதிதியை உள்ளங் குளிரப் பார், நரு! ஆனல் அவனுக்குத் தற்சமயம் நெஞ்சு குளிர ஏதாவது கொடுத்து உபசாரம் செய்தால் நன்றாக இருக்கும்; டீ கொண்டுவரச் சொல்லு" என்றான்.

பிரமை நீங்கி நான் எழுந்து அவனைக் கட்டிக் கொண்டு சொன்னேன்:

"நீ இப்படி வருவாயென்று நான் எண்ணவே இல்லை. எத்தனையோ நாளாகின்றன. பத்துப் பன்னிரண்டு வருஷம்—"

"கணக்குப் பண்ணி இப்போது என்ன ஆகவேண்டும்? நான் எதையும் கணக்குப் பண்ணுவதில்லை. இந்த உலகத்தில் ஒரு விருந்தாளியாக வந்திருக்கிறேன் நான். எப்போது வந்தேன், எப்போது போனேன் என்பதை அறிய நாள் கிழமையைப்பற்றி எனக்கு அக்கறையே இல்லை" என்றான் ஹீரு.

உலகத்துப் பொருள்கள், நிகழ்ச்சிகள் எவற்றையும் ஆழ்ந்து பாராமல் மேலாகவே நோக்கும் ஒருவிதமான தத்துவஞானம் உண்டு. சிலர் இதைத் தம் வாழ்க்கையுடன் ஒட்டி., எவ்வளவு தூரம் பயனடைந்திருக்கிறார்களென்பது எனக்குத் தெரியாது. ஆனால் இந்த மாதிரியான தத்துவஞானத்தில் புதுமை ஒன்று இருக்கிறது; அதில் மட்டும் ஸந்தேகமே இல்லை. இருந்தும் ஹீருவின் பேச்சுக்களில் வேதனையின் சாயலே அதிகமாகப் படிந்திருந்தது.

ஹீருவின் வேதனையைப்பற்றி நினைக்கும்போதெல்லாம் என் சுயவேதனையும் குமுமி எழும்பி அம்மாவின் கவனத்தை மூட்டிவிட்டது. ஆனால் அன்று அவனுடைய துயரே எனக்குப் பெரிதாகப் பட்டது. "எல்லாம் தெரியும். நீ வரப்போவதாகக் கேள்விப்பட்டேன். நீ அப்போதே வந்துவிட்டாயா?" என்றேன்.

'ஸிகரெட்'டைப் பற்றவைத்து ஹீரு, "வந்ததும் நேரே உன்னைத் தேடிக்கொண்டுதான் கிளம்பினேன். நான் எப்போதும் அதிதி என்று சொல்லவில்லையாடா? அதிதியானவன் நாள் கிழமையை மட்டுமா அலக்ஷியம் செய்

கிருன்? காலம், இடம் இவற்றின் கட்டுப்பாட்டிற்கும் அவன் அடங்கியவனல்ல. ஊருக்கு வந்தேன்; எனக்குப் பிடிக்கவில்லை. கிளம்பி வந்துவிட்டேன். இங்கே சில தினங்கள் சுற்றி அலைந்துவிட்டு மறுபடியும் ஊர்ப்பக்கம் போவேன். இந்தா 'ஸிகரெட்!'" என்று நீட்டினன்.

விலையுயர்ந்த 'ஸிகரெட்' பெட்டியிலிருந்து ஒன்றை எடுத்துக்கொண்டேன்.

"சுபதினமாகவும், நல்ல லக்கினமாகவும் பார்த்து உலகத்தின் அதிதியென்ற அபவாதத்தை வெட்டி யெறி, ஹீரு. ஒரு பேரழகியுடன் உன் திவ்ய ஸௌந்தர்யமும் இரண்டறக் கலக்கட்டும்" என்றேன்.

ஹீரு சிரித்து, "அழகை நான் வழிபடுகிறேன். அழகினிடத்தில் எனக்கு அளவற்ற பற்றுதல்; மெல்லிய லாரின் மாயையைத்தான் அஞ்சுகிறேன். பைங்கொடியைப் போன்ற அவர்களது கரபாசம் திறந்தபடியே இருந்தாலும் அவர்களது வாழ்க்கையின் மெல்லிய சுருக்கிலிருந்து விலகிக் கொள்ளாமற்போனல் தப்ப வேறு வழியில்லை. இதெல்லாம் இருக்கட்டும்: டீ கேட்டேனே; கொடுக்கிற வழியைக் காணேம்! இப்படியே அனுப்பி விடலாம் என்று எண்ணமா?" என்ருன்.

விரைவாக எழுந்து, 'ஸ்டவ்'வை மூட்டினேன். கெட்டிலில் ஜலம் வைத்துச் சரசரவென்று டீ தயார் செய்துகொண்டே, "உன் மனத்துள் அழகிய கொடி ஒன்றை வைத்து வளர்த்தாயே! அது இன்னும் அரும்பு முகிழ்க்கவில்லையா?" என்றேன்.

"உனக்கு அது கவனம் இருக்கிறதாடா? அது என் மனத்துள் நாளுக்கு நாள் ஓங்கி வளரும் ஒரு மரத்தை அணைத்துக்கொண்டு விளையாடிற்று. அதன் முடிவைக்

காண முடியாமல், என் மனக்கொடி வெட்கிச் செத்தது. இப்போது இருக்கும் என் மனம் கொடியற்றது. இனி மேல் அதன் வித்தை ஊன்றி அதை வளர்க்க மாட்டேன்.—ஏன் இன்னும் விவாகம் செய்து கொள்ளவில்லை நீ?" என்றான்.

அதைக் கேளாததுபோல் சிரித்துக்கொண்டே, "உன் சிற்றப்பா இலேசில் விடுவாரா? உனக்கு ஒரு பெண்ணைக் கட்டிவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பார். அவர் இப்போது எப்படி இருக்கிறார், சௌக்கியமா?"

தனக்குப் பழக்கமான தோரணையில் ஹீரு பதில் கூறினான் :

"யமன் அவரைக் கண்டுபிடிக்க முடியாமல் தவித்தான். கடைசியில் அவரும் யமலோகத்தில் தம் ஜமீன் காரியங்களைக் கவனித்து வருவதாகத் தெரிகிறது. அவரைப்பற்றி நான் ஏளனம் பண்ணவில்லை. பாவம், வாஸ்தவத்தில் அவர் விடுதலை பெற்றுவிட்டார். அவரை நினைக்கும்போதெல்லாம் துக்கம் வருகிறது. ஊரார் வரைக்கும் அவர் கெட்ட மனுஷ்யராய் இருந்தார். ஆனால் என் மட்டில்......"

அதற்குமேல் அவனால் சொல்ல முடியவில்லை. சில நிமிஷங்கள் பேசாமல் இருந்ததும், 'ஸிகரெட்' ஒன்றைப் பற்றவைத்துப் பிடித்துக்கொண்டே, "என்னோடு ஒரு தடவை நீ ஊருக்குவர வேண்டும், நரூ! வா, சில தினங்கள் அங்கே கழித்துவிட்டு வரலாம். ஊரிலே பெரிய உத்ஸவத்திற்கு ஏற்பாடெல்லாம் பண்ணியிருக்கிறேன். கல்கத்தாவிலிருந்து நாடகக் கோஷ்டி, ஸினிமா, ஸர்க்கஸ் எல்லாம் வருகின்றன" என்றான்.

"இவ்வளவு ஆடம்பரங்களெல்லாம் எதை உத்தேசித் தடா?" என்றேன்.

"வருஷ முடிவில் வரும் 'காஜன்'* விழாவுக்குத் தான். தேவாலய உத்ஸவங்களில் எனக்கு நம்பிக்கை இராமற் போனாலும் எமனிடத்தில்மட்டும் எனக்குப் பிடித்தம் உண்டு. ஆண்டு முடிவில் அவனுக்குப் பிரீதியாக ஓர் உத்ஸவம் கொண்டாட வேண்டுமென்று ஆசை."

"அந்த உபாஸனையில் ஈடுபட்டுத்தான் நாம் இந்தக் கதிக்கு வந்திருக்கிறோம்!" என்றேன் சிரித்தவண்ணம்.

"இந்த மாதிரியெல்லாம் நம்முடைய ஆசார்ய புருஷர்கள்தாம் உபதேசம் செய்வார்கள். ஆனால் என்னை மட்டும் விலக்கி விடப்பா. இந்த உபதேசத்திற்கும் என்னுடைய நடைமுறைக்கும் சற்றும் ஸமரஸம் ஏற் படாது. மரணத்தின்மீது எனக்கு ஒரு மோகம். என்னால் சாக முடியாவிட்டாலும், காலனின் பல முகமான திருவிளையாடல்களை நேரில் காண அவா எனக்கு. அதெல்லாம் போகட்டும்; இதைமட்டும் கேட்டுக்கொள்: 'பிலிம்' கம்பெனி ஒன்று நடத்தலாமென்று யோசித் திருக்கிறேன். ஒரு 'ஸ்டுடியோ'வும் இந்தச் சமயத்தில் என் கைக்கு வருகிறது. கதையின் ஜோடனை நான் விரும்பிய விதம் இல்லை. அதற்கு நீ ஏதாவது எழுது வாயா? பிரபல நக்ஷத்திரங்கள் அந்தப் படத்தில் நடிப் பார்கள். மலைகளிலிருந்து யானைகளை ஒவ்வொன்றாகக் கீழே உருட்டும்போது, பின்னணிச் சங்கீதத்திற்கு எதி ராக அவை மரண பயத்தினால் விகாரமாகப் பிளிறும். அப்போது தீவட்டியின் செந்நிற ஒளியில் 'நக்ஷத்திரங்கள்'

---

* காஜன்=ஜாத்ரை; நெருப்பு மிதி போன்ற ஒரு விழா. சிவபிரானுக்குப் பிரீதியாகச் செய்வது.

விசித்திர ஆடல்கள் புரிய வேண்டும்...எப்படி இருக்கிறது என்னுடைய கற்பனை?" என்றான் ஹீரு.

டீயை ஒரு கோப்பையில் ஊற்றி ஹீருவின் பக்கமாக நீட்டி, "சீமையிலிருந்து இந்த மாதிரி ஆபாஸமான விஷயங்களையா கற்றுக்கொண்டு வந்தாய், கடைசியில்!" என்றேன்.

தேநீரைப் பருகியவண்ணம் ஹீரு, "ஆபாஸமென்று கூறப்படும் விஷயங்களுக்கே எப்போதும் மதிப்பு அதிகமடா, நரு! அதனால் வெற்றியோ தோல்வியோ உண்டாகுமே என்ற பயம் இல்லை. அவல் பொரி வயிறு நிரம்பத் தின்றால் உடம்பிற்குக் கோளாறு ஏற்பட்டாலும் பரவாயில்லை. அவல் பொரி எப்போதுமே சுலபமாகக் கிடைக்கக் கூடியது. ஆனால் ஸிம்லா போன்ற மலைவாஸங்களுக்குச் சென்று திராக்ஷை, மாதுளை ரஸத்தில்—" என்று அவன் உவமை கூறுவது எனக்குச் சிரிப்பை மூட்டியது.

"சீமைத் துரைகளின் பிதற்றலை அப்படியே பின்பற்றுகிறாய் நீ" என்றேன்.

"கிடக்கட்டும்; 'பிலிமை'ப்பற்றி அப்புறம் பேசிக்கொள்ளலாம். இப்போது என்னோடு ஊருக்கு வருவாயா, மாட்டாயா?" என்றான் ஹீரு.

"ஊருக்கு வர யாதோர் ஆக்ஷேபமும் இல்லை. ஆனால் நீ ஏற்பாடு செய்திருக்கும் உத்ஸவம் எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை. ஏன் வீணாகப் பணத்தைப் பாழாக்குகிறாய்?" என்றேன்.

"பாழென்று சொன்னால் நான் ஒப்பமாட்டேன்; செலவென்று சொல். பணம் குவிந்து கிடக்கிறதடா, நரு! மாமாவின் சொத்தும் என்னை அடைந்துவிட்டது, தெரியுமா?" என்றான்.

தூக்கி வாரிப்போட்டு எழுந்தேன். "எப்படி? உனக்கு அம்மான்மார் மூவராயிற்றே. அவர்களுக்குப் பிள்ளை குட்டி உண்டே!" என்றேன்.

"ஆமாம். ஆனால், மரணதேவதையின் உபாஸகன் என்ற ஹோதாவில் அவர்கள் எனக்கு வழிவிட்டுப் போயினர். கல்கத்தாவில் ஏராளமான சொத்து, வீடு வாசல்; அதோடு ரொக்கமாகப் பணமும் இருக்கிறது. இரண்டு வாரங்களுக்கு முன்புதான் எவ்வளவு இருக்கு மென்று ஒரு மதிப்புப் போட்டேன். பதினெட்டு லக்ஷம் ரூபாய்க்குமேல் இருக்கும் மொத்த ஆஸ்தி. என் பிதிரார்ஜிதச் சொத்தும் மூன்று லகாரத்திற்குமேல் போகும். இவ்வளவையும் வைத்துக்கொண்டு என்ன பண்ணுவது? செலவு செய்யவேண்டாமா?"

நான் ஸ்தம்பித்துப்போய், 'இந்த ஊதாரிக்கு வந்த அதிருஷ்டத்தைப் பார்த்தாயா!' என்று நினைத்துக் கொண்டேன். எனக்கு ஒரு 'ஸிகரெட்'டை மீண்டும் வழங்கி அவனும் ஒன்று குடித்துக்கொண்டே உல்லாஸ மாகப் புகையைச் சுருளாக வெளியேவிட்டான். "செல வென்றால் அர்த்தம் என்னடா, ஹீரு? உனக்குப் பிறகு உன் சொத்துக்கு அதிகாரி யாராவது இருக்கமாட் டார்களா? இந்த மாதிரி பணத்தை வீண்விரயம் செய் தால் அவர்களே பாதிக்கப்படுவார்கள்" என்றேன்.

"நீ சொல்வது தவறு. ஒளிக்குப்பின் யாருக்கு அதிகாரம்? இருளுக்கு அல்லவா? பிறவிக்குப் பின் இறத்தலுக்கு. போகத்திற்குப் பின் வைராக்கியத்திற்கு. அதுபோலவே சொத்துச் சேர்ந்தபின் செலவு ஏற்படு கிறது. நல்ல காலம், என் கையில் சிக்கியதனால் அல்லவோ அந்தப் பணத்திற்குஇவ்வளவு வைபவம்!" என்றான்.

சட்டெனச் சந்திரநாதனுடைய ஞாபகம் வந்தது எனக்கு. ஆனால் அவனைப்பற்றிச் சொல்லும்போது என்னவோ ஒன்று தடுத்தது. வாயில் எழும்பிய பேச்சை ஒரு விதமாக மாற்றிக்கொண்டு, "இவ்வளவு பெரிய தொகை இருக்கிறதே; நிரந்தரமாகப் பலர் பிழைக்கும்படியான பெரிய காரியங்களை நடத்தலாமே" என்றேன்.

அவன் சிரித்தவண்ணம், "சிற்றப்பா இறந்த பின் ஊரார் யாவரும், 'அவன் வீடு வாசல் எல்லாம் எப்போது சுடுகாடாகுமோ?' என்று உள்ளூறப் பிரார்த்தித்தார்கள். அந்த மயானத்திலா மீண்டும் வீடுவாசலை நிர்மாணிக்க வேண்டும்?" என்றான்.

எனக்குப் புரிந்தது, அவனுடைய கருத்து. அதை வெளிக்குக் காட்டாமல், "உன் சாமர்த்தியமெல்லாம் தெரியுமடா; என்னை ஏமாற்றப் பார்க்கிறாய். நான் சொல்வதெல்லாம் என்ன? விருத்திக்கு வர ஏதாவது பெரிய தொழிற்சாலையோ வியாபாரமோ செய்யேன்; 'பில்மில்' பணத்தைக் கொட்டுவதைவிடப் பலனளிப்பதாய் இருக்குமே" என்றேன்.

வெகு அலக்ஷியமாக அவன், "விட்டுக் கட்டு. எனக்கு அந்தச் சள்ளை யெல்லாம் பிடிக்காது. யார் சிரமப்படுவது? அதற்கு நான் அல்ல ஆள்...பாரடா! டீ பொங்கி வழிகிறது" என்றான்.

கெட்டிலைக் கீழே இறக்கி வைத்தேன். மீண்டும் ஒருமுறை ஹீருவுக்குத் தேநீர்ப்பானம் வழங்கி, நானும் உட்கொண்டேன்.

"சந்திரநாதனுக்கு இந்தமாதிரி ஒரு பெரிய தொழிலில் இறங்கவேண்டுமென்ற பித்து அதிகம். நீ அவனுக்கு உதவி செய்யக்கூடும்; பங்குதாரனாகஇருக்கலாம்" என்றேன்.

அவன் பரபரப்பும் ஆவலும் சேர, "சந்திரநாதனா! எங்கே இருக்கிறான்? உயிருடன் இருக்கிறானா?" என்றான்.

"அவன் சுபாவத்திற்கு ஏற்றபடி முரட்டுப் பிடிவாதத்துடனே வாழ்ந்து கொண்டுதான் இருக்கிறான். கொஞ்ச நாட்களுக்கு முன்புதான் நான் அவனைப் பார்த்து விட்டு வந்தேன்."

சந்திரநாதனுடைய வரலாற்றை ஹீருவிடம் நிதானமாக வெளியிட்டேன்.

"சந்திரநாதன் 'பிரில்லியண்ட் சாப்' (கெட்டிக்காரப் பயல்). போர்முனை வாழ்க்கை அவனுக்கு ஏனோ கசந்து விட்டது! அவ்வளவு கோழையா அவன்?" என்றான் ஹீரு.

"இது கோழைத்தனம் அல்ல, ஹீரு. வாழ்க்கை பயனின்றி வீணாவதிலும், கடவுள் படைத்த ஜீவன்கள் அனாவசியமாக மாள்வதிலும் என்ன சுகம் இருக்கிறது?"

"எப்படிச் சொல்வது? என் மனத்திற்குப் படுகிறது: அந்த மாதிரி வெறுப்பதற்கு மூலகாரணம் மரண பயமாகத்தான் இருக்கவேண்டும்—தன் உயிர் போய்விடுமோவென்ற நடுக்கம்."

அவனோடு வாதாட எனக்கு இஷ்டமில்லை. வேறு விதமாகப் பேச்சைத் திருப்பினேன். "அதெல்லாம் எப்படியாவது போகட்டும். இப்போது நான் சொன்ன விஷயத்திற்கு என்ன பதில்? சந்திரநாதனோடு கூட்டாக ஏதாவது—" என்னும்போது வார்த்தையிடையே குறுக்கிட்டு ஹீரு, "அது சரிப்படாது. கூட்டாளி என்றால் கடன் கொடுப்பதுபோல் ஆகும். இதனால் எனக்குத் தொந்தரவே ஜாஸ்தி. கணக்கில்தான் நான் புலியாயிற்றே! வட்டிபோடவும் லாபநஷ்டம் பார்க்கவும் எனக்கு அவ்

வளவு புத்தியில்லையடா, நரூ! அதைவிட ஸ்நேஹிதன் என்ற முறையில் அவனுக்குத் தானமாகத் தருகிறேனே" என்றான்.

நான் தடுத்து, "வேண்டாம், ஹீரு. அதோடு நிறுத்தி விடு" என்றேன்.

ஹீரு சிரித்துவிட்டு, "கோபித்துக் கொள்ளாதே. . . . ஒழியட்டும், அந்தப் பேச்சு. நான் எதைச் சொல்லு கிறேனோ அது உனக்குப் பிடிக்கவில்லை; நீ சொல்லுகிற விஷயமோ எனக்கு ஏற்கவில்லை. இப்போது என்னோடு கூட வரப்போவதைப்பற்றிப் பேசு...என்ன, வருகி றாயா?" என்றான்.

என்ன சொல்வதென்று விழித்த பிறகு உடன்பட்டு, "சரி; வருகிறேன்" என்றேன்.

"நாளைக்கே—நாளைக்கு நான் புறப்படுகிறேன்."

முக்கியமான வேலை ஒன்று இருந்தது. "நாளைக்கு முடியாதடா, ஹீரு! வேலை இருக்கிறது" என்று சொன் னேன்.

அவன் இளநகையாட, "காரியத்தை உதறித் தள்ளக் கூடிய தைரியம் உனக்கு வரவில்லையேடா! சரிதான்; நான் நாளைக்குப் போகிறேன்; நீ அப்புறம் வாடா.—என்ன?" என்றான்.

"சரிதான்" என்றேன்.

ஹீரு எழுந்து, "வெளியே சற்று உலாவப் போக லாம்; வருகிறாயா? வாய்க்கு ருசியானது ஏதாவது சாப் பிடலாம்; ஏதேனும் தடை உண்டா?" என்றான்.

"அப்படி ஒன்றுமில்லை. இப்போது எனக்கு அளவற்ற காரியம் இருக்கிறது" என்றேன்.

*　　　*　　　*

ஏழெட்டு நாட்களுக்குப் பின்பு—ஆம்; ஏழே நாட்களுக்குப் பிறகுதான்—ஹீருவின் அழைப்பிற்கு இணங்கி ஊருக்குப் போயிருந்தேன். ஸ்டேஷனில் ஹீருவின் மோட்டார் எனக்காகக் காத்துக்கொண்டிருந்தது. பழக்கமான சுற்றுப்புறத்தில் விசையுடன் நான் சென்று கொண்டிருந்தேன். அந்தச் சுற்றுப்புறம் இன்றும் என் மனக்கண்ணெதிரே இவ்விருளிடையே வேகமாகப் பின்புறம் ஓடி மறைகிறது.

இருமருங்கிலும் நாவல், புன்கு செறிந்த மண் பாட்டை. மரங்களுக்கு இடையே நொச்சியும் அலரிச் செடியும் தழைத்த புதர்கள். ரதன் ஹாடி என்ற கிராமத்தைக் கடந்ததும் தாமரை படர்ந்த சங்கபதி என்ற விசாலமான ஏரி. நாற்புறமும் அதன் கரையில் கொறுக்கை. நீரில் தாமரை மலர்கள், சிதறிக் கிடப்பவைபோல் பூத்திருந்தன. வெகு நாளைக்குமுன் சங்கபதி என்ற பெயருடைய வணிகன் அதன் கரையில் வசித்துவந்தானும். அதனால் அந்தப் பெயர். அடுத்தது ராணீபாடா; கிராமத்துள் நுழைந்தவுடன் கோபுரம் போன்று பொழில் சூழ்ந்த மஹந்து ஆதீன மடம். இதன் வடகிழக்கு மூலையில்தான் ஒரு தென்னந்தோப்பு உண்டெனக் கவனம். அது இப்போது இருக்கிறதோ இல்லையோ. அதற்கு அப்பால் செவ்வந்தித் தோட்டம். இதைக் கடந்து சென்றதுமே எங்களது கிராமம். முதலில் தென்பட்டது தொம்பரவச் சேரி. விசித்திரமான நாடோடி ஜாதியினர் இவர்கள். பொத்தல்

குடிசைகளில் இறைவானத்தில் பாம்பை அடைத்து வைக்கும் பெட்டிகள் தொங்கிக் கொண்டிருந்தன.

பெரிய நாய்கள் அவ்விடத்தில் காவல் புரிந்தன. 'காஜன்' என்பது இந்த ஜாதியினர் கொண்டாடும் ஒரு விழா.

போகும் வழியில் ஒரு தொம்பரவப் பெண் கூத்தாட ஆரம்பித்துவிட்டாள். தொம்பரவக் குடிசைகளையும் கடந்தாயிற்று. இந்தத் தடவை ஒரு மூலை திரும்பியதும் முதலில் கண்களுக்குத் தென்பட்டது, சுற்றிலும் தோட்ட முள்ள ஹீருவின் வீட்டு மாடியிலுள்ள மச்சு உள். மாளிகைபோன்ற பெரிய வீடு. அதன் நாற்பக்கமும் கணக்கற்ற மாமரங்கள். புளிப்பும் தித்திப்புமான கனிகள் தரும் அந்த விருக்ஷங்கள் பல எங்களுக்கெல்லாம் அடையாளம் தெரியும். இலைகள் செழித்திருப்பதால் ஹீருவின் வீட்டின் கீழ்ப்பாகங்கள் நன்றாகப் புலப்படவில்லை. மரங்களின் உச்சிக்குமேல், மாடியிலுள்ள சிறு அறைமட்டும் ஒரு வெளுத்த மேகம்போல் காட்சி அளித்தது. மோட்டாரும் ஒரு முடுக்கில் திரும்பிற்று. இதென்ன! ஹீருவின் மாளிகையை எந்த மந்திரவாதி ஒரு மைதானத்தில் கொண்டு வந்து வைத்துவிட்டான்? தருக்கள் நிரம்பிய தோட்டம் எங்கே?

மளாரென்று ஏதோ முறியும் சப்தம் கேட்டது என் நினைவில் இருக்கிறது. "என்ன சப்தம் அது?" என்று கேட்டேன்.

மோட்டார் டிரைவர், "தோட்டத்திலுள்ள மரங்களை வெட்டிவிடுகிறாங்கோ" என்றான்.

"ஏன்?"

"ஐயாவின் உத்தரவு!"

என் பார்வையெல்லாம், அழிந்து போகும் அந்தத் தோட்டத்தின் மேலேயே நிலைத்துவிட்டது. இந்தப் பக்கம் தோட்டம் இருந்த அடையாளத்தையே காண முடியவில்லை; வேறு பக்கம் நெடிதோங்கிய மரங்களின் சிகை ஆடிக்கொண்டிருந்தன, நடுங்குவது போல். கோடரி யால் வெட்டுண்டு விருக்ஷங்களின் ஆன்மாக்கள் மரண வேதனையிலும் இளந்தளிருடன் சிரித்தன. ஒவ்வொரு வெட்டிற்கும் மரங்களின் உடல்கள் அதிர்ந்தன. அந்தக் காட்சிஎன் மனத்தை மிகவும் வருத்தியது. அன்று சந்திர நாதனை நினைத்துக் கொண்டேன்: அவனாக இருந்தால் இந்த மாதிரியான காரியம் செய்வானா?

மோட்டார். ஹீருவின் மாளிகை வாயிலின்முன் வந்து நின்றது. ஹீரு அங்கே இல்லை. மரம் வெட்டும் இடத்தில் மேற்பார்வை இட்டுக் கொண்டி-ருந்தான். அங்கே சென்றேன்.

அதே நிமிஷம் 'பொதீல்' எனப் பெரிய மாமரம் ஒன்று முறிந்து தரைமீது பயங்கர ஓசையுடன் சரிந்தது. "இதென்ன அநியாயம், ஹீரு? உன் மூதாதையர் சிரமப் பட்டு வளர்த்த இவ்வளவு பெரிய கனிவிருக்ஷங்களை ஏனோ இப்படி வீழ்த்துகிறாய்? ஒரு விஷயத்தில் அவை உனக்கு உறவினரல்லவா?" என்றேன்.

என் வார்த்தையை எனக்கே திருப்பி அவன், "நீ சொல்வது நிஜமே; அவை என் உறவினர்தாம். அவை எனக்கு நாலு பக்கமும், காற்றும் வெளிச்சமும் வர விடாமல் தடுத்துத் தாங்களே அனுபவிக்கின்றன அல்லவா? ஊசிமுனை அளவுகூட இடந் தாராமல் கப்பிக் கொண்டன. அதனால்தான் வெட்டி-த் தள்ளுகிறேன்" என்றான்.

அவன் சொன்னது எனக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணவில்லை.

"நல்லது. ஆனால் ஒன்று கேட்கிறேன்: நீ ஜன்மம் எடுத்து ஒரு மரமாவது நட்டு வளர்த்திருக்கிறாயா? இவ்வுலகில் தோன்றி ஒரு மரத்தையாவது அன்புடன் பூஜித்ததுண்டா?" என்று வினவினேன்.

"சிவனுடைய பத்தினியான ஸதி தக்ஷனுடைய வீட்டை நோக்கிச் செல்லுகையில் குபேரன் வழியில் நவரத்தின ஆபரணங்களினால் அவளை அலங்காரம் செய்வித்தான். ஆனால் நந்திதேவருக்கு அது பிடிக்கவில்லை. ஸதியின் உடம்பிலிருந்து எல்லா அணிகலன்களையும் கழற்றி எறிந்துவிட்டு, வில்வதளங்களையும் செம்பருத்தி மலர்களையும் எலும்பு மாலைகளையும் ருத்திராக்ஷ கண்டியையும் வளையல்களையும் அணிவித்தார். பட்டுவஸ்திரத்திற்கு மாறாகக் காவியாடையைத் தரித்து ஸதி பைரவியானாள். மனிதனுக்கு மனிதன் வித்தியாசம் உண்டு. ருசியில் வேற்றுமையும் இருக்கும். தீண்டாமையைப் போல், பிறருடைய போக்கை வெறுப்பதும் மனத்துள் முளைக்கும் ஒருவிதமான வியாதி" என்றான்.

அதற்குமேல் நான் எதிர்க்கவில்லை. குறிப்பினால் ஹீரு தனக்கும் எனக்கும் இடையே, உரிமையென்னும் கோட்டைக் கீறிக்கொண்டான். அவன் கீறிய கோட்டை மீறிச் சென்றால் என்னையே நான் அவமானப்படுத்திக் கொண்டதாகும். ஒன்றும் பேசாமல் ஹீருவின் பக்கத்திலேயே நின்றிருந்தேன். ஒவ்வொரு மரமாகக் கீழே சாய்ந்து பூமியைக் கவ்வியது. கருமையான இலையடர்ந்த மரங்கள் காயம்பட்டுத் துடிதுடித்தது இப்போது கூடப் பளிச்சென நினைவுக்கு வருகிறது.

என் கற்பனையின் நிழல்திரையில் பெரிய இரைச்சல் கிளம்பியது. 'காஜன்' விழாவின் அறிகுறியாகப் பறைகள் முழங்கின. அணி அணியாகப் பக்தர்கள் ஹீருவின் தோட்டத்துள் நுழைந்தனர். குங்கும களேபரமாய் விளங்கும் 'பாண கோஸாயி' என்பவனைத் தோளில் சுமந்து கொண்டு தொம்பரவப் பக்தர்கள் ஆரவாரம் செய்தனர்:

"போலோ சிவோ...ஹர...ஹர...பொம்...ஹர... ஹர...பொம்..."

நான் மெய்ம்மறந்தவனாய் அவர்கள் செய்வதையெல்லாம் கவனிக்கலானேன்.

இந்த ஜாதியாரைப்பற்றி என்றென்றுமே என் வரையில் ஆச்சரியம் கொள்வேன். இந்த நாடோடிகள், பொத்தல் குடிசைகளை நிராகரித்து விட்டுத்தேசமெங்கும் சுற்றச் சித்திரைமாதமே புறப்பட்டுவிடுவார்கள். மழைக் காலத்தில் இவர்களுடைய மண்குடில்கள் கரைந்து தரை மட்ட மாகிவிடும்; திரும்பி வந்து புதிதாகக் கட்டிக் கொள்வார்கள். அந்த வாஸமும் பாழடைந்து போகும்; மீண்டும் புதிய உறைவிடம் தேடிக்கொள்வார்கள். எவனைக் குறித்து இந்தக் 'காஜன்' உத்ஸவமோ அந்தச் சிவன் இவர்களுடைய சொந்தத் தெய்வம்.

இவர்களுள் ஆண்பாலார் மோடி போன்ற மாய வேடிக்கைகளைக் காட்டுவார்கள். பெண்பாலார் பாம்பு, குரங்கு முதலியவற்றை ஆட வைப்பார்கள்; சில சமயம் தாமும் நாகநிருத்தியங்களை ஆடிக் காண்பிப்பார்கள். அருமையானது அந்த நிருத்தியம்! கால்கள் அசையாமல் இருக்கும்போது உடலை வளைத்து வளைத்து அபூர்வமான வேலைகள் செய்வார்கள்.

"போலோ...சிவோ ... ஹர ஹர...பொம்...ஹர...ஹர...பொம்!"

என் சிந்தையின் ஓட்டத்தை அந்தச் சப்தம் கலைத்து விட்டது. பக்தர்கள் வெளியே செல்லும் பேரிரைச்சல்.

பறை அடிப்பவன் தலைமீதுள்ள பீலிக்கொத்தும் ஜாலரும் எழும்பி எழும்பிக் குதித்தன.

பக்தர்கள் சேர்ந்து ஆடும்பொழுது அவர்களது மார்பில் உள்ள மலர் மாலையும் அசைந்து ஆடியது.

பிரதான பக்தன் ஒருவனே எலும்பு மாலையை அணிந்திருந்தான். அவன், கோயில் சந்நிதிக்கு எதிரே இருக்கும் நந்தியைப்போல் இருந்தான், ரூபத்தில்.

அவர்கள் உத்ஸவம் முடியும் வரையில் கோயிலின் எல்லையை விட்டு எங்குமே செல்லக்கூடாது. கடினமான விரதங்களை அனுஷ்டித்து வந்தனர்.

* * *

இருட்டியதும் வாணவேடிக்கை. புதை வாணங்கள் அடிக்கடி சீறிக் கிளம்பின. பணம் ஏராளமாக விரயமானாலும் பார்ப்பதற்குமட்டும் வேடிக்கையாய் இருந்தது. கிரஹ நக்ஷத்திரங்களில் இருப்பவர்களை நோக்கி மண்ணுலகமாந்தர் ஒளி ஸங்கேதங்களை விடுத்தனர். 'ஔட்' வாணங்கள் வானை அளாவி வெடித்துச் சிவப்பும் நீலமும் வெண்மையும் பச்சையும் ஆகிய பல வர்ணங்களில் நக்ஷத்திரங்களெனச் சிதறிக் கற்பக விருக்ஷத்தின் கனிகள் போல் உதிர்ந்தன. தொலைவில் அண்டம் குலுங்கும்படி அதிர்வேட்டுக் கிளம்பியது. கொடை ஒன்று விண் வீழ்கொள்ளிபோல் ஆகாயத்தில் விரைந்து சென்றது.

காரணமின்றி மனிதன் தன் இஷ்டப்படி எதை வேண்டுமானாலும் செய்கிறான். இன்பத்தை நுகரும் மனிதன், நெருப்பிலும் பூவின் அழகைக் காண முயலுகிறான். விஷப் பாம்போடு நட்புக் கொள்கிறான். தன்னைக் கொல்லும் புலியையும் ஆட்டுவிக்கிறான். மனிதனுடைய போக்கே விந்தையானது!

எதையும் அழிக்கவல்ல ஒரு வன்மையைப் பெற மனிதன் படும் முயற்சிக்கு மூல காரணமாக நிற்பது மரணத்தை வென்று வரும் நோக்கமா அல்லது மரணத்துடன் விளையாடும் ஒருவித ஆசையா? வெற்றியின் மேலுள்ள அவாவிற்கும், விளையாட்டின்மேல் உள்ள அவாவிற்கும் வித்தியாசம் உண்டு. மனிதன் எதை அஞ்சுகிறானோ அதையே வென்று வர முயலுகிறான். அவ்விடத்து வேடிக்கை, மனிதன் தன் மனம் போனபடி விடும் இச்சையேயன்றி வேறு அன்று; அவாவும் வஸ்துவிடத்தில் அவனுக்கு வெறி பிடிக்கிறது.

ஹீரு என் அருகில் நின்றுகொண்டு அக்கினியின் லீலைகளைப் பார்த்தான். அவன் வாய்திறக்கவே இல்லை.

திடீரென ஆகாயத்தில் சீறி எழும் அழற்பிழம்பு ஒன்று வெகு தூரத்தில் மேடான இடத்திலுள்ள பூர்வீக ஜாதியாராகிய ஸந்தாளிகளின் குடிசைகள் மீது விழுந்து நூறுமுகமாகக் கொழுந்து விட்டு எரிந்தது.

வாண வேடிக்கையின் விளைவாக நூற்றுக்கணக்கான ஏழைகளின் ஓலை வீடுகள் தீக்கு இரையாயின. மக்களின் கூக்குரலினால் அந்நள்ளிரவு பயங்கரமாகத் தோற்றியது.

"ஐயோ! தண்ணீர்! தண்ணீர்!"

ஹீருவை இழுத்துக்கொண்டு குடிசைகள் எரியும் திக்கே ஓடினேன். வெயிலில் ஓலைகள் நன்றாகக் காய்ந்

திருந்தன. பொறி அதன்மேல் பட்டமாத்திரத்தில் தீப் பிடித்துக்கொண்டது. தொழுவங்களிலிருந்து மாடு கன்றுகள் அறுத்துக்கொண்டு மருண்டு வெளியே ஓடின. கோழிகள் உயிருக்காகத் திசைக்கு ஒன்றுகக் கூச்சலிட்டுக் கொண்டே சிதறிப் பறந்தன. பாவம்! பறக்கும்போது ஒரு கோழியின் இறக்கையின்மீது தகதகவென்று எரியும் மூங்கிலொன்று வெடித்து வீழ்ந்தது. அதோடு அது ஸமாப்தி.

"தண்ணீர்! தண்ணீர்! அணைக்கத் தண்ணீர்—!"

எங்கே போவது? அதற்குள் தீயின் மும்முரமும் அடங்கிவிட்டது. முன்பு கலகலப்புடன் இருந்தது ஸந்தாளிகளின் சேரி; சற்று நாழிகைக்கெல்லாம் அதன் கருகிய சடலமே நின்றது. ஹீருவைத் தேடி அலேந்தேன். அவன் அகப்படவில்லை. என் பின்னுல் அவன் வரவே இல்லையோ? திரும்பி வரும்போது, 'இந்த இடத்தில்தான் ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்கும் வித்தியாசம். இந்த இடத்தில்தான் மனிதனுடைய வெற்றி நிலேக்கிறது. அதோ வாணவேடிக்கை நடக்கிறதே, அந்த இடத்தில் வெறும் போகவிலாஸமே தலேவிரித்தாடுகிறது' என்று சிந்தையில் ஆழ்ந்தேன்.

ஹீருவின் தொடர்பு எனக்கு அருவருப்பையே அளித்தது. வாழ்க்கை உலகில் அவன் ஒரு தீண்டத் தகாதவனென்ற உறுதிக்கே வந்தேன் நான்.

ஹீருவைத் திட்டுவதற்காகவே அவனைத் தேடிக் கொண்டு சென்றேன். வீட்டில் அவன் இல்லை. உத்ஸவம் நடக்கும் இடத்தில் இருப்பானென்று சொன்னுர்கள். எவரையும் அழைத்துக்கொள்ளாமல் தனியாகவே உத்ஸவம் கொண்டாடும் இடத்தை நோக்கி நடந்தேன்.

நம் நாட்டில் தொன்றுதொட்டு வழக்கிலுள்ளது போன்ற உத்ஸவமே அது. கண்கூசும்படியான வெளிச்சத்தில், குதூஹலமும் இன்பமும் தேடித்திரியும் ஜனத்திரளில் கலந்தேன். அல்லோல கல்லோலத்தினுல் மனிதனுள் உறங்கி இருந்த காட்டுமிராண்டித்தனம், கொடிய விலங்குபோல் உறுமி எழுந்தது. 'ஸிகரெட்,' பீடி, கொழுப்புக் கலந்த நெய்யில் சுடும் பண்டங்கள் ஆகியவற்றின் துர்க்கந்தம் மூச்சுத் திணறும்படியாக இருந்தது. அது பரிசுத்தக் காற்றை விஷமாக்கியது.

வெகு சிரமப்பட்டுக் கடைசியில் ஹீருவைக் கண்டுபிடித்தேன். அப்போது நடுநிசி. ஜனசந்தடியும் குறைந்து கொண்டு வந்தது. சூதாடும் இடத்தில் அவனைப் பிடித்தேன். அவன் மடியில் நோட்டுக்கற்றைகளும், ராசி ராசியாக ரூபாயும் இருந்தன.

அவனை மெல்ல அழைத்துக் கொண்டு வெளியே வந்து வெறுப்புடன், "ஏண்டா, சூதாடவும் ஆரம்பித்து விட்டாயா?" என்றேன்.

"ஆமாம்" என்ருன் சிரித்துக்கொண்டே. அவனை எந்த விதமாகத் திட்டலாமென்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

"வா, கோயிலுக்குப் போகலாம்; சிவனுக்குப் புஷ்பாஞ்சலி போடும் வேளை நெருங்கிவிட்டது" என்ருன் ஹீரு.

'புஷ்பாஞ்சலி' என்றதும் என் ரத்தம் உறைந்து போய்விட்டது. எல்லாவற்றையும் மறந்தேன். சிறு வயதில் நான் பார்த்த நெருப்பு விழாவின் நினைவே என் வாயை அடைத்துவிட்டதே தவிர ஹீருவின் ஆகர்ஷணையல்ல. ஹீருவுடன் சென்றேன்.

பக்த கோஷ்டியார் ஆடிக்கொண்டிருந்தனர். "போலோ ஹர ஹர" என்று பாட்டைப் பாடி வட்டமிட்டு ஆடினர். ஒவ்வொருவர் கையிலும் மண்டை ஓடு. குதித்துக்கொண்டே நர கபாலங்களை அம்மானை ஆடி ஒருவன் வீசி எறிவதும் மற்றொருவன் பிடித்துக்கொள்வதுமாக இருந்தனர். சிலர் வெண்டலையைத் தம் முகத்துக்கு நேரே வைத்து அதன் மூலமாக இடி இடியென்று நகைத்தனர். அந்த இடம் ஒரு பேயுலகாய் விளங்கியது.

பறைகள் ஆர்த்தன. சட்டென வெண்டலை அம்மானையும் ஓய்ந்தது. அதற்குமேல் நிகழப்போவதுதான் திடுக்கிடும்படியானது. பக்தர்கள் சிவனுடைய முடிமீது மலர்களைத் தூவுவார்கள். மலர், தருக்களில் இதழ்விரியும் மலரல்ல; நெருப்பு மலர். சிவாலயத்தின் முன்பு கண கணவென்று ஜ்வலிக்கும் தழற்குவியல். அதன் ஒளியினாலும் வெம்மையினாலும் நடுயாமம் பயங்கரத்தோற்றம் கொண்டது. அக்கினி ராசிக்குப் பின்னால் காப்புக்கட்டிகள் நின்றிருந்தனர்.

"போலோ...சிவோ,...சங்கர...ஹர பொம்..."

முக்கியமான பக்தன் இரண்டு உள்ளங்கை நிறையக் கனற்பூவின் அஞ்சலியை எடுத்துக்கொண்டு கோயிலுள் ஓடினான். சிவலிங்கத்தின் சிரத்தில் எரிமலரை அவன் ஸமர்ப்பித்தவுடன் ஒவ்வொருவராகப் பக்தர்கள் அவனைப் பின்பற்றினர்.

"ஹீரு! ஹீரு!"

ஹீருவும் ஓடினான், இந்த மலரில் ஒரு பிடி எடுக்க.

"ஹீரு! ஹீரு!" என்று கூவிக்கொண்டே நானும் அவன் பின்னாலேயே ஓடினேன்.

## அத்தியாயம் 10

ஹீருவை, அந்தப் பயங்கர விளையாட்டிலிருந்து விலக்கிக்கொண்டு வந்தேன். இந்தப் பக்கம் வெறிபிடித்த பக்தர்கள் கண கண வென்றிருக்கும் தழற்குவியல் மீது ஆடல் புரிந்தனர். அதிசயமாக இருந்தது அந்தக் காட்சி. இரவின் கடையாமத்தில் மருட்சி தரும் இருளில் சிவந்து ஒளிரும் நெருப்பின்மேல் அவர்கள் ஆடுவது, என் மூளையைக் கலக்கிவிட்டது.

ஹீரு கைகளைக் கூப்பி யாரையோ குறித்து வணங்கி விட்டு, "வா, போகலாம்" என்றான்.

மாளிகையில் மாடி வராந்தாவை அடைந்தோம். "இன்று தூங்கக்கூடாது. சாவை வென்று வாழ்வு வெளி வருவதைக் காண்போம்; புது வருஷத்துக் கதிரவன் உதய மாவதை நின்று கவனிப்போம்" என்றான் ஹீரு.

இருட்கணம் மெல்லக் கரைந்து கொண்டே வந்தது. தொலைவில் ஜனங்களின் ஆரவாரம் அடங்கிப்போய்த் திருவிழா மும்முரம் ஓய்ந்து தூங்கி விழுவதுபோல் இருந்தது. ஸமீபத்தில் யாரோ சிலர் விரஸமாகப் பேசிக் கொள்வது கேட்டது.

"இன்று வருஷத்தின் முடிவு; அதன் மரணயோகம். அதன் மாயையிலிருந்து என்னால் விடுபட முடியவில்லை. நரூ, அதன் ஸ்பரிசம் என் கண்ணிதழ்களை அழுத்துகிறது. உனக்கு ஆக்ஷேபம் இல்லையே? விஷத்தைக்கொண்டு விஷத்

ளைப் போக்குவோம். சிவபெருமானைப்போல் கண்டத்துள் கறையேறாது போனால் யமனை ஜயிப்பது கடினமே. மதுபானம் கொண்டுவரச் சொல்லட்டுமா?" என்றான்.

"இதற்கு நீலகண்டனான சிவபிரான் பேரை இழுப்பா னேன்? அந்தக் கறை உன் கழுத்திலே நின்றுவிடும் பக்ஷத்தில் நான் கூறுவதற்கு ஒன்றுமில்லை. ஆனால் நீ விழுங்கும் விஷம் கண்டத்தில் தங்கிவிடாமல் உள்ளே சென்று குடலை அல்லவோ பற்றவைத்துக் காமக்கனலை உண்டாக்கும்?" என்றேன். ஹீரு எழுந்து, "வேறு வழி இல்லை. காமம் கனிந்தால் காமானந்த யோகி ஆகிவிடு வேன். தேகத்தின் மேலுள்ள பற்று, அனுபவம் முதிர முதிர, எனக்குத் தானாகவே ஒழிந்து போகுமே. இதனால் வைராக்கியம் முற்றி ஆத்யாத்மிக சர்ச்சையில் இறங்கி விடலாம் சுலபமாக; இல்லையா, நரு?" என்றான்.

சீமை மதுவகை அக்கினித் திரவம்போல் உள்ளே புகுந்ததும் அவனுடைய ஒவ்வொரு நரம்பையும், மூளை யின் துவாரங்களையும் பற்ற வைத்தது.

ஹீரு எங்களுக்குச் சற்றுத் தொலைவில் உள்ள ஆட் களைப் பார்த்து, "அங்கே என்னடா நடக்கிறது?" என்றான்.

"நீ இவ்வாறு கேட்பது சுத்த அநியாயம். தேகத்தி னுள் ஒளிந்து திரியும் நம்முடைய மனோவிகாரங்களைத் தான் நாம் பச்சையாகப் பார்க்கிறோம் என்றால், அவர்கள் என்ன செய்கிறார்கள் அங்கே என்பதை நீ ஏன் கிளறிக் கேட்கிறாய்?" என்றேன்.

"டே! யாரடா அங்கே?" என்று ஒருவனைக் கூப் பிட்டான் ஹீரு.

வேலையாள் வந்து ஸலாம் செய்தான். "அங்கே என்ன, தமாஷாடா? அது யாராய் இருந்தாலும் சரி, இங்கே இட்டுக்கொண்டு வா" என்று ஆக்ஞாபித்தான்.

சிறிது நாழிகைக்கெல்லாம், ஏவலாளின் பின்னாலேயே ஒரு பெண் வந்து நின்றாள். பார்த்தவுடன் தெரிந்து கொண்டேன்: நாடோடியாகத் திரியும் தொம்பரவர் மகள்.

ஹீரு விளக்கைப் பிரகாசமாக்கினான். இளமை ததும்பும் மாநிறமான பாவை. திரண்ட வடிவினாள். மேற்கு நாட்டவர்களைப்போன்று சீட்டிப் பாவாடையால் உடல் வனப்பை மறைத்துக்கொண்டிருந்தாள். கையில் ஒள்ளிய சங்கு வளையல்கள். கழுத்தில் இரண்டு மூன்று தினுசில் பாலை மணி வடங்கள். அது அவள் மாமை மேனிக்குப் பின்னும் அழகு செய்தது. இடுப்பில் ஒரு கூடையை வைத்துக்கொண்டு உடல் சற்று வளைய, "பாட்டுப் பாடட்டுமா, ஆடட்டுமா, பாபு?" என்றாள்.

அந்த நாடோடிப் பெண்ணின் குரலின் இனிமையும், பேச்சுச் சாமர்த்தியமும், கண்ணின் சுழற்சியும் உரோமம் சிலிர்க்கும்படி செய்தன. அழகிய குதலை மொழியர் இந்தச் சாதிப்பெண்களே! முழுவதும் துகில் மறைக்காத இவர்களது சரீர அமைப்பு எவரையும் மோகத்திற்குள்ளாக்க வல்லது. நாகரிகமற்ற இவர்கள் ஆடவர்கள் நெஞ்சைப் பதைக்கச் செய்யும் மாயக்காரிகள்.

பலமான தேகக்கட்டு, விரைவான நடை, பல்வேறு மொழிகளைப் பேசும் திறமை, தோளில் தோற் பறையையும், மூட்டை முடிச்சுக்களையும் சுமப்பது—அனைத்தும் இவர்கள்பால் வியப்பையே உண்டு பண்ணுகின்றன.

இவர்கள் தம் குழந்தைகளை எல்லோருடைய கண் எதிரிலும் வெட்டி மீண்டும் உயிர் மீட்கும் செப்பிடு வித்தைகளைக் காட்டி நெல்லும் காசும் சம்பாதிப்பார்கள். இவர்களில் மற்றும் ஓர் அதிசயம்: பெண்பாலார் புருஷர்களுக்கு அடங்கியவர்களல்ல; யதேச்சையாகத் திரிபவர்கள். தம்மை யாருக்கு வேண்டுமானாலும் விற்றுக்கொள்வார்கள். அதற்கு இவ்வளவு என்று ரூபாயைப் பெண்ணின் தந்தை பெற்றுக்கொள்வான்.

விசித்திரமான இந்த வகுப்பினருள் ஒரு கூட்டத்தார் எங்கள் ஊர்ப்புறத்தில் எந்தக் காலத்தில் குடியேறினார்களோ, தெரியாது. மழைக்காலம் வந்ததுமே இவர்கள் ஊர் ஊராகச் சுற்றக் கிளம்பிவிடுவார்கள். துர்க்கா பூஜை நெருங்கும் சமயம் ஒரு தரம் ஊருக்குத் திரும்புவார்கள். இவர்களும் துர்க்கையின் பண்டிகையை அனுஷ்டிப்பவர்கள். மறுபடியும் வெளியே சென்று தீமிதி விழாவுக்குத் திரும்பிவிடுவார்கள். சிவபிரானே இவர்கள் வழிபடு தெய்வம். சித்திரைமாத முதலில் எல்லோரும் வந்து கூடுவார்கள். பதினைந்து சிவலிங்கங்களைக் குளத்திலிருந்து கரையேற்றிக் கோயிலில் கொண்டு நிறுத்துவார்கள். இதைச் செய்யும் உரிமை இவர்களைத் தவிர வேறு எவர்க்கும் இல்லை. தீமிதித் திருநாளில் இவர்களே காப்புக் கட்டிக் கொள்வார்கள். இவர்களுள் நியமம் தவறாதவனே, முதலில் சிவபிரானது திருமுடிமேல் கனலாகிய மலரைத் தூவி வழிபடுவான். மழைக்காலம் வந்ததுமே மஹாகால பைரவ மூர்த்திக்குத் தண்மை செய்யச் சீதப்புனலில் முழுகிவிடுவார்கள். இந்தச் சடங்கு முடிந்தவுடன் வீடுகளைத் துறந்து உலகிடைச் சுற்றுவார்கள்.

போகட்டும் இதெல்லாம். ஹீருவைக் கவனித்தேன். அந்த அநாகரிக யுவதியைக் கண்கள் விரியப் பார்த்துக் கொண்டே இருந்தான். அந்தத் தொம்பரவ மடந்தையும் அளவற்ற விம்மிதத்தால் முருகுவாய்ந்த ஹீருவையே இமைகொட்டாமல் நோக்கினுள்.

"என்னடா அப்படிப் பார்க்கிருய்?" என்றேன், ஹீருவை விளித்து.

"இந்தத் தொம்பரவச்சியைத்தான்!" என்ருன்.

நான் சிரித்தேன். ஹீரு அதைக் கவனித்திருக்கலாம், ஒரு வேளை. "உயர்வான தோன்றுமில்லை. ஆனல் இவ ளிடத்தில் வெறிமூட்டும் ஒருவித அழகு இருக்கிறது. இவள் கைகளிலும், கழுத்திலும் யாராவது கருமணியைக் கட்டி அலங்கரித்தால் கட்டாயம் மரணதேவதையின் சாயலையே கொள்வாள். மஹாபாரதத்தில் சாந்தி பர்வத்தில் மிருத்யுவின் வர்ணனை வருகிறதே; கவனம் இருக்கிறதா?" என்ருன்.

"நல்லா ராஜாமவனைப்போல இவ்வளவு அழகா எப்படி ஆனீங்கோ, பாபு? என்ன அழகான நிறம் உங்க உடம்பிலே!" என்று ஆரம்பித்தாள், அந்தத் தொம் பரவர் மகள்.

நான் சற்றுக் கடுகடுத்தே, "ஏ பெண்ணே! இங்கே ஆட வந்திருக்கிருயா? இந்தக் கதையெல்லாம் அளக்க வந்திருக்கிருயா?" என்றேன். டகடகவென்று நகைத்தாள் அவள். அச்சிரிப்பின் இசையொலிதான் என்னே! மெய் சிலிர்த்தது. அந்தச் சிரிப்புக்கு ஓய்வே இல்லை; சிறு தென்றலெனச் சற்று நேரத்துக் கொருதரம் எழுந்தது.

"என்ன அப்படிச் சிரிக்கிருயே?" என்றேன்.

பின்னும் சிரிப்புப் பொங்க, "நீங்க என்மேலே கோவிச்சுக்கொள்வதைப் பார்த்துத்தான்" என்ருள்.

எனக்கு ஒன்றும் தோன்றவில்லை. ஆச்சரியத்துடன் அவள் முகத்தையே நோக்கினேன். அதே மாதிரியாக மீண்டும் சிரித்தவண்ணம் அவள், "அந்த ஐயாவைப் பார்த்தவுடன் எனக்கு ஆசை பிறந்துபோச்சு. அது உங்களுக்குச் சகிக்கவில்லையா, பாபு?" என்ருள்.

"நாகரிகமற்ற இந்தச் சிறுக்கி என்ன பேசுகிருள், பார்" என்று முதலில் ஆத்திரங்கொண்டேன். ஆனல் என்னல் சிரிக்காமலும் இருக்கமுடியவில்லை.

"இரு; உங்கள் பெரியவங்களைக் கூப்பிடுகிறேன்" என்று மிரட்டினேன்.

"என்ன செய்யமுடியும் அவங்களாலே? ராஜா வாட்டம் இருக்கிருரே, இதோ ஐயா, இவங்க ரூவா கொடுத்து என்னை வாங்கிக் கிட்டாராஞ, எங்க நாயஞ ஒண்ணும் சொல்லமாட்டார். போ!" என்ருள்.

ஹீரு கிண்ணத்தில் மதுரஸத்தை நிரப்பி, "ஏய்! நல்லா ஆடு, பார்க்கலாம்" என்ருன்.

அவ்வழகிய நாடோடி, "என்ன பாபு உங்கள் கையிலே? சாராயமா? எனக்குக் கொஞ்சம் கொடுக்க மாட்டீங்களா? அதைக் குடிச்சாக் குஷியா ஆடிக் காண்பிப்பேண்" என்றதும் அவள் தன் ஓலைப்பெட்டியிலிருந்து பாத்திரமொன்றை வெளியே எடுத்தாள். பிரகாசமான வெளிச்சத்தில் அது என்னவோவென்று ஸந்தேகம் கொள்வதற்கு இடமில்லை. மனிதனுடைய மண்டை ஓடுதான்!

"ஏய், அந்த மண்டை ஓட்டை எனக்குத் தருவாயா?" என்ருன் ஹீரு.

இனிமை பயக்கும் குரலில், "விட்டேன்னு சொல்லுங்கோ, பாபு. சந்திரன்போல அழகான முகத்துக்கு நேரா மனிசன் மண்டை ஓட்டைத்தூக்கிக் குடிப்பது நல்லா இருக்காது?" என்ருள்.

அந்த நர கபாலம் வழிய மதுவை ஊற்றினுன் ஹீரு. ஒரு சொட்டுவிடாமல், அவள் அதைப் பருகிவிட்டு, "ஊ . . . நல்லா இருக்குது! நல்லா இருக்குது! பாபு; ஜில்லுன்னு உள்ளே இறங்குது" என்ருள்.

ஹீரு, மதுரஸம் ததும்பும் தன் கிண்ணத்தை உயரத் தூக்கி, "மரணத்தின் சாயல் கொண்ட இந்த நாடோடியின் அழகையும் நான் உட்கொள்ளுகிறேன். நரூ, நீயும் ஆரம்பியேன்" என்ருன்.

"வேண்டாம்; இந்த அநாகரிகப் பெண்மேல் பிறந்த மோகத்தோடு உன்னிடத்தில் வளர்ந்துவரும் அநாகரிக இச்சைகளும் மாண்டொழியட்டும். இந்தத் திருவிளையாடல் ஓய்ந்தபிறகு, உனக்கு உகந்த நற்குலப் பெண்மணியுடன் வீட்டுக்கு வந்துசேர், அப்பனே!" என்றேன்.

இதற்குப் பதில் சொல்ல ஹீருவுக்கு அவகாசம் ஏற்படவில்லை. ஏனென்ருல் அந்தக் கீழ் ஜாதிப் பெண் பாட ஆரம்பித்துவிட்டாள். தனித் தினுசில், தனிக் குரலில், தனிப்பாணியில் பாட ஆரம்பித்தாள். ஸங்கீதக் கலையில் அத்தகைய ராகங்களைக் கேட்பது மிகவும் அபூர்வம்.

"உ-ர்-ர்-ஜாக் . . ஜாக். ஜாகின் கின்ஞ-ஜார் கினிஞ" என்று இசைத்தாள் ஒரு பள்ளை. அதோடு தன் தேகத்தை விதவிதமாக வளைத்து ஆடினுள். கால்கள் தரையில் பதிந்து இருந்தன; ஆனல் கால் விரலிலிருந்து எழுந்த ஓர் அலை அவள் உடலெங்கும் பரவிச் சென்றது.

அவள் பாடிக்கொண்டிருந்தாள்:

"உள்ளங் குமுறுகின்ற வேதனை யெல்லாம் - காற்றில்
ஊதி விடுவதற்கு மார்க்கமு முண்டோ?
மெள்ள எனக்குரைக்க வேண்டுமெடிநான் - இந்த
மேதினியி லேயுயிரைத் தரிப்ப தெப்படி?

சாதி யிழிந்ததென்று தள்ளி விட்டாரோ - நான்
சாதியிலே ஈனமோசொல்; அன்பர் வருவார்
வீதியி லென்றடைக்காய் ஏந்தி நிற்கின்றேன் - அந்த
மெய்யன் வரவில்லையே; நைந்து மாய்கின்றேன்.

செடியின் மறைவிலென்னைக் கண்ட ணுகுவாய் - அன்பா
சேர்ந்து மகிழ்வமர்ந்த மாதுளம் பூவை
நெடுகப் பரப்பிவிட்டேன் மாயவ னுக்கு - நல்ல
நித்திரைக் கேற்றவணை செய்து மகிழ்வேன்.

ஐயோஈ தென்னபாவம்! என்த லைவிதி - நான்
ஆசை யுடன்பறிக்கக் கையை நீட்டினேன்.
கொய்யாத முன்கிளைதான் முறிந்து விட்டதே - மிகக்
குழகனென் மாயவனைக் கூடுவ துண்டோ?"

சதங்கை அணியாத கால்களால் தாளம் போட்டுக் கொண்டே அவள் அற்புதமான நாக நிருத்தியத்தைக் காட்டி மகிழ்வித்தாள். மதுரஸத்தின் ஜ்வாலை அவள் உள்ளத்தில் எந்த உருவில் வேலை செய்ததோ அந்த விதமே அவளும் குதிக்கத் தொடங்கினாள். மதுவின் வெறி ஏற ஏற அவளுடைய கண்ணிமைகள் மயங்கின; செம்பட்டையான குழற்கற்றை அவிழ்ந்து பின்புறம் அலையோடியது. பாட்டு முடிந்தது; ஆனால் ஆடல் மட்டும் நிற்கவில்லை. வியப்பினால் கண்கள் அகல அவளையே நோக்கினேன்.

* * *

இன்றும் இவ்விருளில் என் மன அரங்கில் அந்த நாடோடி நிர்த்தமிடுகிறாள். இந்தக் காட்சிமட்டும் என் மனத்தில் நீண்ட காலம், என் வாழ்வின் இறுதிவரைக் கும் அப்படியே நிலைத்திருக்க வேண்டுமென்று விரும்பு கிறேன்.

இப்போது அந்த நாடோடி சொன்னது உண்மை யென்றே தோற்றுகின்றது; ஹீரு அழகன் என்று அவள் சொன்னபோது எனக்குப் பொறாமையே மூண்டது. அந்த நாடோடி மகள் என்னை மோகத்திற்கு உள்ளாக்கினாள். அதனால் நான் வருந்தவில்லை. இளமை யின் சுவை ததும்பும் அவள், வாஸ்தவத்தில் ரகசியம் குடிகொண்டவளே!

கண்ணிதழ்கள் பாதியளவு கூம்ப, ஹீரு அந்தத் தொம்பரவர் மகளின் ஆட்டத்தையே கவனித்துக்கொண் டிருந்தான். அவளது ஆடலும் முடிந்தது! களைப்பு மேலிட்டுத் தரைமீது மெல்லச் சாய்ந்தாள். சற்று நேரம் எவரும் பேசவில்லை.

ஹீரு நிச்சப்தத்தைக் கலைத்து,

"உம்பாவை நடம்பயில்வாய் ஊர்வசியே யாவர்க்கும்
பம்புகின்ற காதல்மயிர் பொடிப்பஅலை கொழிக்குமே!
மாதவருன் மெல்லடியில் தவப்பயனை மாய்க்கின்றார்
மேதகுமூ வுலகிளமை வெறிகொள்ளும் விழிக்கடையால்.
நெடுவிசும்பில் உடுமெணிகள் மார்பினின்றும் சிதறிவிழும்
துடிதுடிக்கும் மைந்தருள்ளம். துள்ளுமவர் குருதியே"*

என்று அவளை ஸ்துதி செய்தான்.

அந்தப் பெண்ணுக்கு இரைப்பு வாங்கியது.

---

*ரவீந்திரர் 'ஊர்வசிப் பாட்டு'

"எடு, உன் பாத்திரத்தை" என்றான் ஹீரு.

ஸந்தோஷம் பொங்க அவள் உடனே பாத்திரத்தை நீட்டினாள். ஹீரு தன்னுடைய கிண்ணத்தில் ததும்ப ஊற்றிக்கொண்டு மதுரஸத்தை அந்த நாடோடிக்கும் வழங்கினான்.

ஒரே மூச்சில் உட்கொண்டதும் அந்தப் பெண்ணுக்குத் திராணி வந்தது. "போ உன் இடத்திற்கு; நாளைக் காலை வந்தால் இனும் தருவேன். வாங்கிக்கொண்டு போகலாம்" என்றான் ஹீரு.

"உங்களைச் சற்றுக் கண்ணாரப் பார்த்துவிட்டுப் போகிறேன் பாபு. சாந்த்பாரா துரையே!" என்றாள் அவள்.

ஹீரு என்னை விளித்து, "உன்னிடம் ரூபாய் இருக்கிறதா? ஒரு ரூபாய் கொடு" என்றான்.

ரூபாயை அவன் அந்த நாடோடிப் பெண்ணிடம் சுழற்றிப் போட்டு, "போ எடுத்துக்கொண்டு" என்றான்.

அந்த க்ஷணமே அவள் அகன்றாள். ஆனால் ரூபாய் கீழே கிடந்தது. அவள் அதைத் தொடவே இல்லை. "பாவம், ஏன் துரத்திவிட்டாய்? உன் மனத்தை அது போகிற வழியில் விட்டுவிட்டாய். சற்று முன்தான் அவளுடைய அழகில் ஈடுபட்டு உணர்வை இழந்திருந்தாய். இந்த மாதிரி அவமானப்படுத்தி அவள் தரையைக் கவ்வும்படி செய்துவிட்டாயே?" என்றேன்.

"உன்னிடத்தில் மறைப்பானேன்? அவளைப் பார்த்ததும் மையலானேன். என்னையே மறக்கச் செய்தது அவளது மாயை" என்றான்.

கீழ்வானம் வெளுத்தது. புது வருஷத்திய ரவி உதயமாயிற்று. "கிளம்பு, பக்ஷி வேட்டை ஆடலாம்" என்ருன் ஹீரு, அதிகாலையிலேயே.

சங்கபதி ஏரியை நோக்கி வேட்டைக்குப் புறப்பட்டோம். அகலமான நீர்நிலை. நாலுபுறமும் நாணலும் ஈர்க்கம் புல்லின் புதல்களும் படர்ந்திருந்தன. வைகாசி மாதமானதால் அவை காய்ந்துகிடந்தன. ஏரியின் மடுக்களில் தாமரைக் கொடிகளில் இளந் தளிர் இரண்டொன்று தலை காட்டியது. மடுவின் நீர் கண்ணுடி போல் மேலே இருக்கும் ஆகாயசித்திரத்தைப் பிரதிபலித்தது. பலவகையான நீர் வாழ் பறவைகள் அங்கே கூடுவதனுல் ஒரே இரைச்சலாக இருந்தது. புள்ளினம் விசித்திரமான வர்ணபேதங்கள் உள்ளவை; விதவிதமான குரல் படைத்தவை. தலைக்கு நேரே சில, கூட்டமாக வட்டமிட்டன; பல கரையோரம் உணவைத் தேடித் திரிந்தன; நீரில் மூழ்கி மீன்களைக் கொத்தின சில; வாய்க்கால்களில் நாரைகள் மீனுக்காக வாடித் தவம் புரிந்தன.

"கொக்கினம் வடக்கே மானஸ ஸரஸை நோக்கிப் பறந்து செல்கிறது. நீர்க் கோழியைத் தவிர்த்து வேறு ஒன்றும் சிக்காது போலிருக்கிறது" என்ருன் ஹீரு.

"ஒரு வேளை வேடுவர்களான நாம் வருகிற சமாசாரம் பக்ஷிகளுக்கெல்லாம் முன்னதாகவே தெரிந்து விட்டதோ என்னவோ!" என்றேன்.

என் வார்த்தைக்குக் குறுக்காக ஹீரு, "சுத்தத் தவறு. வேடுவச்சி என்று சொல்லு. அவள் மஹாகாலனுடைய இன்னுயிர்க் காதலியான மறலி. அவள் வரும் செய்தி யாருக்குமே எட்டாது. எப்போதும் அவள் பின்னுலேயே

வந்துகொண்டிருக்கிருள். இப்பொழுதோ பின்னையோ, யாரே அறிவார் அவள் மென்னடையை?" என்ருன்.

அவன் கூறும் தத்துவார்த்தத்தைக் கேட்டுச் சிரித்தேன் நான்; "போதும் உன் தத்துவ விளக்கம்" என்றேன்.

ஹீரு நாலுபக்கமும் கூர்ந்து கவனித்தவனுய், "எதிர்க்கரைக்குப் போகலாம்" என்ருன். கோணல் மாணலாகச் செல்லும் கரையோரமே ஓசைப் படுத்தாமல் முடிந்த வரையில் நாணற்புதலின் மறைவிலேயே நடந்து சென்ருேம். கத்திபோல் நாணல் தாள்கள் காலில் பல இடங்களில் ரத்தம் வரக் கீறின. அது அவ்வளவாகப் பாதிக்கவில்லை; என் ஆவல் வேட்டைமீது சென்றது.

"வயிற்றெரிச்சலைக் காலில் அனுபவிக்கிருேம், ஹீரு" என்றேன்.

ஹீரு தாழ்ந்த குரலில், "சிருஷ்டியின் ஆரம்பத்தில் முத்திரஸத்தைக் கடைந்தபோது மேலுக்கு வந்தது அமிருதம். அதைத் தேவதைகள் பங்கிட்டுக் கொண்டனர். அப்புறம் வந்தது ஹாலாஹலம். அதைப் பரமசிவன் உட்கொண்டு கண்டத்தைக் கறையாக்கிக் கொண்டான். மனிதனுக்கு என்ன கிடைத்தது? அகாத பசிதான். இந்தப் பசியினுல் மாநிலமே திண்டாடுகிறது. வேறு வழி? வயிற்றுப் பசி, உடற்பசி, மனத்திலும் பசி......எப்போதுமே அடங்காத பசி......என்னவோ துர்க்கந்தம் குடலைக் குழப்புகிறதே! என்ன பார்" என்ருன். உண்மையில் ஏதோ நாற்றம் வீசியது; மாமிசம் பொசுங்குவது போன்ற ஒரு தீய நாற்றம் மூக்கைத் துளைத்தது.

"அது யார் பாரடா, அந்தப் புதருக்குள்?" என்றான் ஹீரு. சென்று கவனித்தேன். என் உடல் நடுங்கிற்று, அந்தக் கோரத்தைக் கண்டதும். எவனோ ஒருவன் அரை குறையாக வெந்த ஒரு ஜந்துவின் உடலைக் கடித்துக் கொஞ்சம் கொஞ்சமாகத் தின்றுகொண் டிருந்தான். எந்த ஜந்துவின் குட்டியோ? ஆள் அகப்பட்டுக்கொண் டான். அவன் ஒரு பழைய திருடன். இப்போது நொண்டி. எப்போதோ திருடப் போய்ப் பெரிய மாடியி லிருந்து விழவே இரு கால்களும் முறிந்து போயின. இப் போது தெருவில் கூவிக்கொண்டு பிச்சை எடுக்கிறான். அவன் முழுவதும் அசக்தனன்று. கையைத் தரையில் ஒருவாறாக ஊன்றி மைல் கணக்காகச் சுற்றி வயிற்றை வளர்க்கிறான். எனக்கு நடுக்கம் மட்டும் உண்டான தோடு, ஆற்றாமையைக் கோரமான உருவில் கண்ட தும் ஸ்தம்பித்துப் போனேன். இன்றளவும் அக்காட்சி யின் நினைவு வரும்போதெல்லாம் மயிர் சிலிர்க்கிறது. ஆஸாமி அகப்பட்டுக் கொண்டு திரு திரு வென்று விழித் தான்.

"அதென்னடா தின்கிறாய்?" என்று கேட்டான் ஹீரு.

அவன் பொய் சொல்லவில்லை; "ஆட்டுக்குட்டி தானுங்கோ" என்றான்.

இடிவிழுந்து போய் அவன், "ரொம்ப நாளாச்சு மாமிசம் தின்னு, மவராஜா! ஒன்றும் பண்ணாதீர்கள்; ஏழை!" என்று கெஞ்சிக் கேட்டுக் கொண்டான்.

"அது இருக்கட்டுமெடா; அந்தக் குட்டியை எப்படிப் பிடிச்சே?" என்றான் ஹீரு.

"ஒன்னும் பண்ணுதேங்கோ......சொல்லிவிடுகிறேன். அதுவா...இந்த இடத்தில் வழி தப்பிவந்து கூவிச்சு. நான் மெல்ல நகர்ந்துபோய் லபக்—" என்றான்.

"அது தெரியும்; ஆனால் எப்படி உன்கிட்டே அகப் பட்டுக்கொண்டது? நீதான் நொண்டியாச்சே" என்றான் ஹீரு.

"இருந்தாலும் இந்தக் கையின் உதவியினால் எவ் வளவு தொலைவானாலும் ஓட முடியும் பாபு; வழக்கமாகி விட்டது" என்றான்.

அவனைத் திட்டவோ அடிக்கவோ எனக்கு மனம் வர வில்லை. அவனை வெறுக்கவும் என்னால் முடியவில்லை. ஒன்றும் சொல்லாமல் அவனைக் கடந்து சென்றோம். சிறிது தொலைவு சென்றதும் திரும்பிப் பார்க்கையில் அந்த நொண்டி வெகு வேகமாகக் கையை ஊன்றிக் கொண்டே ஓடுவது தெரிந்தது. ஆட்டுக்குட்டியின் பாதி வெந்த உடலை அவன் விட்டுப் போயிருக்கமாட்டான்; நாயைப்போல அதையும் அவன் வாயில் கவ்விக்கொண்டு தான் போயிருக்க வேண்டும் என்று ஊகித்தேன்.

நான் கீழே பார்த்தபடி ஹீருவின் பின்னாலேயே நடக்க லானேன். அப்போது துப்பாக்கி வெடி கேட்கவே திடீ ரென எனக்குத் தூக்கிப்போட்டது. ஹீருவின் துப் பாக்கிக் குழாயிலிருந்து மெல்லிய புகைச்சுருள் தென் பட்டது. ஆகாயத்தில் கும்பலாகப் பறந்து செல்லும் காடைகள் சில பொல பொலவென்று உதிருஞ் சருகு போல் பூமியை நோக்கி விழுந்தன. மீண்டும் ஹீரு துப் பாக்கியில் தோட்டாவைக் கெட்டித்து என்னைப் பார்த்து, "இந்தா, நீ சுடு" என்றான்.

க்ஷண நேரத்திற்குள் அந்த நொண்டி செய்த கோரத்தை மறந்தே போய்விட்டேன். துப்பாக்கியை மேலே தூக்கிச் சிதறியோடும் பறவைகளைக் குறி பார்த்துக் குதிரையை அழுத்தினேன். ஹீரு ஸந்தோஷக் கூச்சல்போட்டு, "ஸபாஷ்!" என்று உத்ஸாகப் படுத் தினான்.

உவப்பினால் என் உடம்பில் ரத்தம் துள்ளி ஓடிற்று. கொல்வதில் இவ்வளவு தென்பு மூள்வதை இதுவரை நான் அறியேன். ஏரியிலுள்ள பக்ஷிகளை யெல்லாம் மட மடவென்று சுட்டு வீழ்த்த வேண்டுமென்று ஒருவிதமான குரூர ஆசை முளைத்தது. தலைக்கு மேலே மரண பீதி யினால் புள்ளினம் சிதறுண்டு உயரப் பறக்கலாயின. நீரில் ஸஞ்சரித்த பக்ஷியினம் எல்லாம் மூலைக்கு ஒன்றாக விகார மாகக் கூச்சலிட்டுப் பறந்து போயின.

ஹீரு என்னை என் ஸ்வாதீனத்திற்குக் கொண்டு வந்தான்.

"மேலே என்ன செய்யலாம்?" என்றான்.

"நீதான் சொல்லு" என்றேன் பதிலுக்கு.

"ஒன்றுமில்லை வா. சுட்ட பக்ஷிகள் ஜலத்தில் விழுந்து விட்டன. அவற்றைச் சுட்டும் பிரயோஜன மில்லை" என்றான்.

என் மனசு மட்டும் கேட்கவில்லை. வாழ்க்கையில் முதல் முதலாக நான் புரிந்த கோரக் கொலைத் தொழிலுக்குச் சன்மானமான அந்தப் பறவைகளின் உடல்களை விட்டுச் செல்ல எனக்கு விருப்பம் இல்லை. நானே ஜலத்தில் இறங்கி அவற்றை எடுத்தால் என்னவென்று நினைத்தேன்.

"ஆகாயத்தில் பூவா உதிர்ந்திச்சு, ஓ பாபு! பூ எல்லாம் ஜலத்திலே விழுந்திச்சு. ஐயோ!" என்று ஒரு குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தேன்; அந்தத் தொம்பரவச்சி என் பின்னால் நின்றுகொண்டு சிரித்துக்கொண்டிருந்தாள்.

பகல் வெளிச்சத்தில் ஹீரு அவளைப் பளிச்சென்று கவனிக்கலானான். "அடீ! நீ எங்கிருந்து குதிச்சே?" என்றேன் நான்.

உடலெங்கும் ஓர் அலை குலுங்க அவள், "ஏரிக்கரையிலே புத்திலிருந்து பாம்பு பிடிக்க வந்தேன். துப்பாக்கி வெடிக்கிற சத்தம் கேட்கவே இந்தப் பக்கம் வரத் தோணித்து. பாபு, கடைசியிலே எல்லாம் ஜலத்திலா விழுந்துட்டுது? எடுத்துத் தரட்டுமா?" என்றாள்.

"உன்னால் முடியுமா?" என்றேன்.

அவள் சிரித்துக்கொண்டே, "சாந்த்பாரா ராஜா இருக்கிறாரே, அவங்க சொன்னா எடுத்தாரேன்" என்றாள்.

"முடியுமாடீ உன்னாலே?" என்றான் ஹீருவும்.

"உங்களுக்காகச் சாகக்கூடத் துணிவேன். நான் செத்துப்பூட்டா நீங்க கொஞ்சமாவது அழுவீங்களா?" என்றாள்.

அவள் ஓலைப் பெட்டியைக் கீழே இறக்கி வைத்து விட்டு அரைப்பாவாடையைத் தூக்கிச் செருகிக்கொண்டு ஜலத்தில் தொபீலெனக் குதித்தாள். ஓலைப் பெட்டியுள் 'புஸ் புஸ்' என்று ஸர்ப்பம் சீறிக்கொண் டிருந்தது. பெட்டியைக் கவனிக்கையில் திடீரென ஏரியிலிருக்கும் அந்தப் பெண், "ஐயோ! என்னை எடுங்களேன்; மூழ்கிப் போகிறேனே!" என்று அலறினாள். திடுக்குற்றுத் திரும்பினேன். அவள் உண்மையில் ஏரி நடுவே மூழ்கிக்கொண்

டிருந்தாள். ஹீரு உடனே தண்ணீரில் குதித்துவிட்டான். நானும் அரைத் துணியை இழுத்துக் கட்டிக்கொண்டு நீரில் இறங்க முற்பட்டேன். ஆனால் இறங்கவில்லை. கடைசியில் அந்தச் சிறுக்கியின் மாய்மாலம் வெளியாகி விட்டது. அவள் தானாகவே நீச்சமடித்துக்கொண்டே கரைக்கு வந்து இடி இடியென்று நகைத்தாள், எங்களைப் பார்த்து.

ஹீரு திரும்பியதும் ஈர உடம்புடன் கரையில் உட்கார்ந்த வண்ணம், அந்தத் தொம்பரவச்சி ஜலத்தில் காட்டும் வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவள் மூச்சு வாங்க, வாயிலிருந்து ஜலத்தை உமிழ்ந்து கொண்டே, நீரை நாலு திசையும் காலால் வாரி இரைத்து நீச்சமடித்தாள்.

"வேடிக்கையான ஜாதியினர் இவர்கள். எப்படி இவர்கள் இங்கே வந்து குடியேறினார்கள்?" என்று ஹீருவை வினவினேன்.

ஹீரு இதற்கு விடை பகரவில்லை.

மீண்டும் வினவினேன்: "உன் பழைய காகிதக்குப்பையில் இதைப்பற்றிய ஆராய்ச்சி ஏதாவது செய்து வைத்திருக்க மாட்டாயா? சொல்லேன்."

தொம்பரவச்சி சுடப்பட்ட பக்ஷிகளை எதிரே கொண்டு வந்து போட்டு, "எடுத்துக் கொள்ளுங்கோ பாபு. இனும் தருவீங்களா? உள்ளங்கை ஜலத்தை அடித்து அடித்து எவ்வளவு செவந்து போச்சு பார், பாபு" என்றதும் அவள் சிரித்தபடி ஜலம் சொட்டும் கூந்தலை முறுக்கிப் பிழிந்தாள்.

ஹீரு எழுந்திருந்து, "என்ன இனும் கேட்கிறாய்?" என்றான்.

எப்போதும் குதூஹலமாகவே இருக்கும் அந்தப் பாவை, "செத்தெ உட்கார், பாபு, பாம்பு வேடிக்கை காட்டுறேன்; அப்புறம் உங்க இஷ்டப்படி ஏதாவது இனும் தாங்கோ" என்றாள்.

"ஆ ஆ!" என்று அலறினேன்.

"அடே! ஸர்ப்பத்தின் விஷப்பல்லைப் பிடுங்கிவிட்டாயா?" என்றேன்.

இடது கையில் ஒரு சிறு கோலைப் பிடித்துக்கொண்டு மெல்லக் கூடையைத் திறந்து,

"அயரா தேநடு வீதியி லேயோர்
ஆய்மகள் தலைமேல் கூடைவைத்துத்
தயிரோ தயிர்தயிர் வாங்கலை யோவெனச்
சாற்றிக் கூவுதல் கேட்டிலையோ?"

என்று பாட ஆரம்பித்தாள்.

"அடி ஆத்தே..போதும் உன் விளையாட்டு. பாம்பைப் பெட்டியில் போட்டு மூடு—விஷப்பாம்பு!" என்றேன்.

பாடி முடித்ததும் அலக்ஷியமாகவே படம் விரித்து ஆடும் நச்சரவைக் கையால் பிடித்து, "மந்திரம் இருக்கச்சே என்ன பயம்?" என்று சொல்லி விட்டு, அதைப் பெட்டியுள் நழுவவிட்டு மூடினாள் அவள்.

"பாபு...ஓ பாபு. எனக்குத் துப்பாக்கி சுடக் கத்துக் கொடுக்கமாட்டையா? ரொம்ப நாளா ஆசை எனக்கு" என்றாள் அவள்.

ஹீரு தக்ஷணமே அவள் கையில் துப்பாக்கியைக் கொடுத்து, "இந்தா; உன் கைபட்டு என்னுடைய மரண அஸ்திரம் கீர்த்தி அடையட்டும், உன்னைச் சித்திராங்கி என்ற பேர் வைத்து அழைப்பேன் இனிமேல்" என்றான்.

பாவையின் விசாலமான விழிகள் மலர, "என்ன பேர்? இன்னொருதரம் சொல்லு, பாபு" என்றாள்.

"சித்திராங்கி; அவள் ஒரு ராஜாவின் மகள். ஆனால் உன்னைப் போலத்தான் யாருக்கும் அடங்காமல் காடு மேடெல்லாம் எதற்கும் அஞ்சாமல் திரிந்துகொண்டிருந்தாள்" என்றான் ஹீரு.

இந்தத் தடவை அவள் பகபக வென்று சிரித்து, "நல்ல பேர் வெச்சேங்கோ பாபு. ஆனால் என் பேர் முத்த கேசியாச்சே. ஊட்லே அப்படித்தானே எல்லாரும் கூப்பிடுறாங்கோ?" என்றாள்.

"இருந்தால் என்ன? நான் சித்திராங்கி என்று உன்னை அழைக்கக் கூடாதா? வா என்கிட்டே; துப்பாக்கி சுடக் கத்துத் தருகிறேன்" என்றான் ஹீரு.

அந்தத் தொம்பரவப் பெண்ணின் கைகளைப் பிடித்துக்கொண்டு ஹீரு துப்பாக்கியைப் பிடிக்கும் விதத்தை அவளுக்குக் காட்டி, "பிடிச்சுக்கோ நீ; குதிரையை இழு. அதோ பறக்குதே நாரை; அதைக் குறிவைத்துச் சுடு. தானாக விழுகிறதா இல்லையா? பார், பெண்ணே" என்றான்.

"என் கையை விட்டுவிடுங்கோ பாபு. சுடறேனா இல்லையா? பாருங்கோ" என்றாள்.

"நான் கையை விட்டுவிட்டால் குறி தப்பிவிடுமே" என்றான் ஹீரு.

"வேண்டாம்...மனசிலே தவறினால்தானே வெளியிலும் தவறும்" என்றாள்.

"உன் மனசிலே ஏன் தவறு ஏற்படவேண்டும்?" என்று அவளைக் கேட்டேன்.

துப்பாக்கியைக் கீழே தாழ்த்திவிட்டு அவள் சொல்லத் தொடங்கினுள்: "இதோ இந்தச் சாந்த்பாரா பாபுவைப் பார்த்த பிறகு என் மனம் பிசக ஆரம்பிச்சுவிட்டது. என் மேல் கோபிச்சுக் கொள்ளாதீங்கோ, ஐயா! மனசிலே ஏதோ தவறு ஏற்பட்டுத்தான் எங்களவங்க இந்த ஊரிலே வந்து ஊடு கட்டிக்கொண்டாங்கோ."

ஆவல் மூண்டு நான், "அந்தக் கதையைத்தான் சொல்லேன் பெண்ணே!" என்றேன்.

"ரொம்ப நாளேக்கு முன்னே - எத்தனே நாளேக்கு முன்னே யென்று எனக்குத் தெரியாதுங்கோ - எங்களவங்க குந்த வீடு வாச இல்லாமே கண்ட இடத்திலும் அலேஞ்சுக்கிட்டிருந்தாங்கோ. ஒரு நாள் இந்த இடத்துக்கு வரச்சே, மனசு பிடிச்சு இருந்தது. நல்ல ராத்திரி; நரி ரெண்டாம் வாட்டிக்கூட ஊளேயிட்டாச்சு. அப்போ ஒரு கிழவனும் கிழவியும் எங்க பெரியவங்களண்டை வந்து, 'இதோ பாரப்பா, நாங்கதான் சிவனும் பாருவதியும். இந்த ஊரிலே எங்களுக்கு நீங்க பூசை போடவேணும்'னு சொன்னுங்கோ...ஸ்வாமியே வந்து சொன்ஞர். 'எங்களால் என்ன பண்ணமுடியும்? வீடு வாசல் இல்லாத ஏழைகளாச்சே நாங்க'ன்னு பெரியவங்க பதில் சொன்னுங்க. சிவனும் பாருவதியும் லேசில் விடராங்களா? எங்க பெரியவங்களும் லேசிலே ஒப்புக்கொள்ளுவாங்களோ, என்னமோ? அப்புறம் அவங்க ரெண்டு பேரும் போயிட்டாங்க; இல்லே, கிட்டவே மறைஞ்சிண்டிருந்தாங்க. மறுபடியும் நடு ராத்திரியிலே எல்லாரும் அசந்து தூங்கச்சே, எங்க மனசை யெல்லாம் திருடிக் கொண்டு இந்த இடத்திலே மண்ணுங் கீழே பொதச்சுப் பூட்டாங்கோ. அப்போதிலிருந்து சிவனுக்கும் பாருவ

திக்கும் நாங்கதான் பூசை போட்டுத் திருநாளும்போது நெருப்பு மிதிக்கிறோம்."

இதைக் கூறியதும் அவள் மௌனமாகிவிட்டாள். ஹீரு பரபரப்பு மேலிட, "போதும் உன் மனசைத் திருடுகிற கதையெல்லாம். துப்பாக்கி எடுத்துச் சுடு, வா" என்று அவளை அழைத்தான்.

மறுபடியும் ஹீருவின் இரு தோளுக்குள் பதிந்து அவ்வழகிய நாடோடி குறிவைத்துக்கொண்டாள்.

"அழுத்து குதிரையை" என்றான் ஹீரு.

அரை நிமிஷத்தில் நெருப்பைக் கக்கிக்கொண்டு துப்பாக்கியிலிருந்து வெடி கர்ஜித்து எழுந்தது. உடனேயே நாரைகள் சில சாவுக் கூச்சலிட்டு ஜலத்தில் வந்து வீழ்ந்தன. துப்பாக்கியை ஹீருவின் கையிலேயே போட்டுவிட்டு அந்த நாடோடிச் சிறுக்கி கைதட்டிக்கொண்டே, பக்ஷிகளை எடுத்துவரத் தண்ணீரில் குதித்தாள்.

## அத்தியாயம் 11

மத்தியான்னம் சிரம பரிகாரம் செய்து கொண்டு வெளியே வந்தபோது ஹீருவைக் காணவில்லை. அவனைத் தேட நான் முற்படவில்லை. என் மாமியின் கவனம் திடீரென வந்தது. அவளைக் கண்டுவரப் புறப்பட்டேன். சிவபிரானுடைய நிஷ்டையைக் கலைத்துவிட்டாள் அன்னை கௌரி; தவத்தைக் கலைத்ததோடு அவள் நிற்கவில்லை. அன்னபூரணியாக மாறி மயானவாஸியான தன் கணவனை வீட்டு வாயிலில் ஒரு பிக்ஷாண்டியாக இருக்கச் செய்தாள். மாமியைக் கண்டவுடன் அவள் செய்திருக்கும் இந்த அதிசயத்தை வெளிப்படுத்த வேண்டுமென்ற ஆவல் எனக்கு உண்டாயிற்று.

வீட்டு வாசலுக்கு எதிரே நின்றுகொண்டு, "ஜயம் வருது, ஜயம் வருது, எங்கம்மா அன்னபூரணிக்கு-தாயே!" என்று குரல் கொடுத்தேன்.

எரிந்துவிழும், கரகரப்பான த்வனியில் என் மாமியிடமிருந்து பதில் வந்தது: "யாரது சனியன் பிடித்தவன்? இந்தப் பிச்சைக்காரர்களுக்குப் போட்டே ஓட்டாண்டியாகப் போகவேண்டியதுதான்..... போடா போ! என்னைப் பார்த்து வரவர உங்களுக்குக்கூட இளக்காரமாடா? வானரங்களா!"

புருவத்தைச் சுளித்துக்கொண்டு மாமி வாயிலருகில் வந்து நின்றாள்.

நான் பக்கென்று சிரித்துவிட்டு, "மாமி, இந்த வானரத்துக்கு வால் இல்லையே. உங்காத்துக்குத்தானே நேரே வருகிறது" என்றேன்.

தூக்கி வாரிப்போட்டது மாமிக்கு. "அப்பா, நீயாடா நரு! ஆளைப் பாராமல் என்ன சொல்லி விட்டேன் போ. சீ, என் நாக்கைத் துண்டிக்கணும். வா உள்ளே" என்றாள்.

உங்களை அன்னபூரணி என்று நான் அழைத்தது கேலியல்ல. வாஸ்தவத்தில் நீங்கள் அன்னபூரணியே! பர்வதகுமாரி மஹாயோகியான ஈசனின் தபஸைக் கலைத்து, அவனைத் தன் வீட்டு வாயிலில் நிற்கும் பிச்சைக்காரனாக ஆக்கினாள். இதனால் அல்லவோ அந்தப் பெயர் அவளுக்கு வந்தது? தீர்க்கமாக யோசித்த பிறகே உங்களுக்கும் இந்தப் பெயரை வைக்க உத்தேசித்தேன். உங்களுடைய பிச்சாண்டி எங்கே?...மாமா அகத்திலே இல்லையா? மறுபடியும் ஓட்டம் பிடித்தாரா என்ன?" என்றேன்.

என் மாமியின் முகம் பொலிவை இழந்தது. விழிக் கடையில் நீர்த்துளி கீழே விழாமல் ததும்பிற்று.

சந்தேகம் மூண்டு, "என்ன நடந்தது, மாமி?" என்றேன்.

புடைவைத் தலைப்பை எடுத்துக் கண்ணீரைத் துடைத்துக்கொண்டு, வெறுப்புக் கலந்த சிரிப்புடன், "ஒன்றுமில்லை, அப்பா...அன்றைக்கு நான் சொன்னதை நீ மறந்திருக்க மாட்டாயென்று எண்ணுகிறேன்" என்றாள்.

"எப்படி மறக்க முடியும், மாமி? என்றைக்கும் என் மனத்தை விட்டு நீங்காது" என்றேன்.

பெருமூச்செறிந்து மாமி, "அதை நீ மறந்துவிடு. என் பிடிவாதமெல்லாம் அறவே ஒழிந்துவிட்டது. ஏமாற்றம் அடைந்தேன்" என்றாள்.

திடுக்குற்றேன்; "ஏன்?......ஆனால் மாமா—?" கேள்வியை முடிக்க என்னால் இயலவில்லை.

"ஆமாம். பழைய விதமே. நரு, இதைச் சொல்வது மிகவும் வெட்கக் கேடான விஷயம். தம்பியைப் போல் நடந்து கொள்ளும் உன்னிடத்தில் எனக்கு என்ன லஜ்ஜை?... நான் தொட்ட செம்பைக்கூட அவர் தொட வில்லையடா! முகம் கொடுத்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை" என்றாள்.

தரையை நோக்கியவண்ணம் நான் நின்றுவிட்டேன். என் மாமியின் முகத்தை நோக்க எனக்குக் கூச்சமா யிருந்தது.

மாமி சிரித்துக்கொண்டே, "அப்பா நரு, அவ்வளவு பெரிய பெயரை எனக்குச் சூட்டினாய். நான் என்ன தரப் போகிறேன் தின்பதற்கு? என்னால் ஆனது இந்த ஜலந் தான்" என்றாள்.

பிச்சைக்காரனைப் போல் கைகளை ஏந்தி, "எது வேண்டுமானாலும் கொடுங்கோ......நிஜமா, பசிதாகம் எனக்கு" என்றேன்.

"கையை எடுத்துக்கொள். அன்னபூரணியின் தானம் அந்த இரு கைக்குள் அடங்கக்கூடியதா? தட்டு நிறையக் காரம் பிசிரிய அவல் பொரி தருகிறேன்" என்றாள். உள்ளே சென்று பொரியை ஒரு தட்டில் எடுத்துக் கொண்டு என் எதிரே வைத்துவிட்டு, "சற்றுப் பொறுத் துக் கொள். பக்கத்தாத்துக்குப் போய் - நெய் சொட்டுக்

கூட இல்லை - எண்ணெயாவது கொண்டு வந்து குத்து கிறேன். பிசிரிக்கொண்டு தின்னு" என்றாள்.

அவள் வெளியே சென்றாள். நழுவிவிடலாமா என்று எண்ணினேன். என்னால் முடியவில்லை; இதனால் நான் அடையும் அவமானத்தைக் காட்டிலும் என் மாமிக்கு வரும் அவமானமே பெரிது. நிசாநாத பாபுவுக்குப் பிடித்த இந்தப் பித்தம் தீராதது ஏனோ? அன்பின் தண்மை அதை அணைக்காதோ? காதலின் அருவியிலும் குளிர்ந்து போகாத அது என்ன விரதத் தழலோ? கடைசியில் அவரையே எரித்துவிட்டுத்தான் தீருமா?

மாமி திரும்பி வந்தாள். அவள் பொரியில் எண்ணெயை விட்டுக் கலந்து கொள்ளும்படிச் சொல்லி விட்டு, "நல்ல பெயர் வெச்சே எனக்கு: அன்னபூரணி!" என்றாள். பொரியை வாயில் அரைத்துக்கொண்டே மாமியை, "இந்த மாதிரி யெல்லாம் நடந்து எத்தனை நாளாயிற்று, மாமி?" என்று வினவினேன்.

"அவர் வந்து சரியாக ஆறு மாசத்திற்கெல்லாம். வந்த புதுசில் சரியாகத்தான் இருந்தார். அதற்கப்புறம் எதனாலேயோ, ஸதா காலமும் யோசனையிலேயே ஆழ்ந்து விடுவார். யாரோடும் பேசுவது இல்லை. ஏதாவது கேட்டால சள்ளென்று எரிந்துவிழுவார். சைத்திர ஸங்க்ராந்தியின் போது கங்கா ஸ்நானத்திற்குப் போனார். ஸ்நானம் செய்துவிட்டு உள்ளே நுழையும்போது கைகால்களை அலம்பிக்கொள்ள ஜலம் கொடுத்தேன். அலம்பிக்கொண் டார். துடைத்துக் கொள்ளச் சவுக்கத்தை அவர் கையில் கொடுக்கும்போது சட்டென்று கையை இழுத்துக் கொண்டு, 'ஊம்...ஊம். தொடாதே என்னை' என்றார். ஏனென்றதற்கு, 'பஞ்சாக்கினியில் தபஸ் பண்ணவேண்டு

மென்று உத்தேசித்து விட்டேன். ஸ்த்ரீகளின் ஸ்பரிசம் கூடாது' என்றார். பிற்பாடு பஞ்சாக்கினி தபஸ் நடந்தது. நாள் முழுவதும் ஐந்து பக்கம் ஐந்து ஹோமாக்கினி எரிய அதன் நடுவே அமர்ந்த வண்ணம் ஜபதபங்கள் நடந்தன. பொழுது சாய்ந்தபிறகே எழுந்திருப்பார். உடல் நெருப்பில் கருகிய சுள்ளியைப் போல் ஆகிவிடும். அவரைத் தொட்டுச் சுச்ருஷை செய்யவோ எனக்கு அதிகாரமில்லை. போகட்டும், அந்தப் பஞ்சாக்கினித் தவம் முடிந்தது. ஆனால் அவரைத் தொட எனக்கு இச்சை பிறக்கவில்லை."

நீண்ட மூச்செறிந்து, "அவர் எங்கே போனார் மாமி?" என்றேன்.

"குருவைத் தரிசிக்கக் கால்நடையாகவே காசிக்குக் கிளம்பிவிட்டார். என் தலை எழுத்தைப் பார். பெண் பெரியவளாகிவிட்டாள்; சம்பளம் கட்டாததால் பையனுடைய பெயரை அடித்துவிட்டார்கள், பள்ளிக்கூடத்தில்; படிப்பு வாயில் மண்தான்! நான் எதைச் சொல்லிக் கொள்வது? ஒவ்வொரு நாள் முழுப் பட்டினி கிடக்கிறோம். என் துக்கத்தைச் சொல்லி என்ன பயன்? அது ஆறுகிற கதையா? அப்பா, உன் க்ஷேமத்தைப் பற்றிச் சொல்லு; உன் பெண்டாட்டி எப்படி இருக்கிறாள்?" என்றாள் மாமி.

"எனக்கு விவாகம் இன்னும் ஆகவில்லை, மாமி!"

"அதென்னடா, இன்னுமா பண்ணிக்கொள்ளவில்லை?"

நான் சிரிக்கத் தொடங்கினேன். மாமி மீண்டும் பேச்சை எடுத்தாள். "நல்லது பண்ணினாய் போ. ஓர்

அபலையைக் கஷ்டப்படுத்தி என்ன வாரிக்கட்டிக் கொள்ளப் போகிறேம்? நீ ஏதோ பெரிய பெரிய புஸ்த கங்கள் எழுதுவதிலேயே காலங் கழிப்பதாகக் கேள்விப் பட்டேன். அதனுல் எங்கேயும் இரண்டு ரூபா சம்பாதிக்க வேலையில் அமரவில்லை. இந்த நிலையில் கல்யாணம் பண்ணிக்கொண்டு ஒரு பெண்ணைக் கஷ்டத்திற் குள்ளாக்குவானேன்?'' என்ருள்.

"இந்தக் காரணத்திஞலேயே மாமி, நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளவில்லை,........உங்கள் பெண் எங்கே? அவளைப் பார்க்கவே இல்லையே நான்? அவளுக்கு நல்ல வரன் தேடவேண்டும்'' என்றேன்.

"என் பெண்ணை நீ கல்யாணம் பண்ணிக்கொள் வாயா, நரூ? நல்ல அழகிடா; ஸம்ஸாரத்திற்கு அடங்கி ஒடுங்கி இருப்பாள்.''

"இல்லை மாமி; நல்ல இடமாகப் பார்த்துக்கொண்டு வருகிறேன். அவளுக்கு என்ன குறை?''

என் முகத்தை நோக்கியபடியே, "நீ எவ்வளவோ புஸ்தகம் எழுதியிருக்கே. மேதாவி நீ. நான் கேட்ப தற்குச் சரியான பதில் தருவாயா? அப்பா, பெண் ஜன்ம மென்பது பாபங்களுக்கு இருப்பிடமா? பாபங்களே இந்த ஜன்மத்தைச் சூழ்ந்து இருக்கின்றனவா?'' என்று கேட்டாள்.

அவளது பாததூளியை எடுத்து ஒற்றிக்கொண்டு, "மனிதன் இந்த உடலை எவர்களிடமிருந்து பெறுகிருனே அவர்கள் எங்கேயாவது பாபத்தின் உறைவிடமாவார் களா? நீங்களெல்லாம் லோகமாதாவின் ஓர் அம்சமே! உங்களுடைய மாயையினல் மனிதன் தன்னை மறந்து நிற்கிருன்'' என்றேன்.

"பொய் சொல்லுகிறாய் நீ. அப்படியானால் என் கதி இவ்வாறு ஆவானேன்? சொல்லு. இதோ என் பெண். நிருபமா, நமஸ்காரம் பண்ணு. உனக்குச் சித்தப்பா மாதிரி இவர். எவ்வளவோ புஸ்தகங்கள் எழுதியிருக்கிறார். அன்றைக்குச் சொன்னேனே, அந்த நரேச் சந்திர முகோபாத்தியாயர் இவர்தாம்."

ஜலம் நிரம்பிய குடத்தை இடுப்பில் வைத்துக் கொண்டு அந்தப் பாவை என் முன் நின்றாள். உண்மையில் அழகியே. விசேஷ ரூபவதியாக இராதுபோனாலும், அவள் முகத்தில் உலவும் தண்ணிய சாயல், பார்ப்பவர் மனத்திற்குச் சாந்தியை அளித்தது. அந்தப் பெண்ணை விவாகம் செய்துகொள்ளும் புண்ணியவானின் வாழ்க்கை அமைதியில் குளித்து அழகு நிரம்பியே செல்லும்.

ஹீருவைப் பிடிக்கவேண்டுமென்று உறுதிக்கு வந்தேன். இந்த இளங்கொடியின் ஆசையை அவன் மனத்துள் படரச் செய்துவிட்டால் வெற்றியடைந்தவனாவேன். ஆனால் வாழ்க்கையை விளையாட்டாகக் கருதும் அவனுக்கு இந்த மாசற்ற மலர் ஒத்துப் போகுமோ? சொல்லிப் பார்க்கிறேன்.

"மாமி, நான் வரேன்...நல்ல வரனைச் சீக்கிரத்திலேயே பிடித்துக்கொண்டு வருகிறேன் உன் பெண்ணுக்கு. கவலைப்படவேண்டாம்" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டேன்.

* * *

திரும்பி வந்தும் ஹீருவைக் காண முடியவில்லை. அவனைப்பற்றி யாரைக் கேட்டாலும் புலன் இல்லை. மாலை நேரம் அவன் தென்பட்டான். மாளிகையின் வாயிற் படியில் ஹீரு அந்தத் தொம்பரவச் சிறுக்கியுடன்

உள்ளே சென்றுகொண்டிருந்தான். என்னைக் கண்ட வுடன் அவன், "கடைசியில் இவள் என்னை ஜயித்து விட்டாளடா, நரூ! இவளுடைய தந்தைக்குப் பணம் கொடுத்து என் சித்திராங்கியைப் பெற்றுக்கொண்டேன். இந்த வனக்கொடி என் மனத்தின் ஆசைக்கொடியாக மாறிவிட்டாள். இப்போது எனக்கு ஸம்சயம் மூண்டிருக் கிறது: இவளை என் அந்தப்புரத்துள் அடக்கி வைத்துக் கொள்வதா? அல்லது நானே வீட்டைத் துறந்துவிட்டு இவளுடன் வெளியுலகில் யதேச்சையாக வாழ்வதா?" என்றான்.

ஸ்தம்பித்துப் போய் அவனையே வெறித்துப் பார்த் தேன். என் மனத்துள்ளேயே ஆழ்ந்து இருக்கட்டும்; ஹீருவுடன் அதைப்பற்றிப் பேசுவது அன்பு மிக்க என் மாமியின் பெயரை நான் மாசுபடுத்துவதாகும். சாயா சித்திரம் இவ்விடத்திலேயே நின்றுவிட்டது.

மறுநாள் நான் ஹீருவை உதறிவிட்டு வந்தேன். நாடோடி மங்கையின் மோகவலையில் வீழ்ந்து கிடக்கும் ஹீருவிடம், நான் வரும்போது மரியாதைக்குப் போய் வருகிறேனென்றுகூடச் சொல்லவில்லை.

என் சிந்தனையின் ஓட்டம் தடையுற்றது.

## அத்தியாயம் 12

என் ஜீவிய சரித்திரத்தை ஒவ்வோர் ஏடாகப் புரட்டிப் பார்த்துக்கொண்டே வருகிறேன். சந்திரநாதன், மீரா, ஹீரு இவர்கள் அடிக்கடி காணுமல் போய்விடு கிருர்கள். இரண்டு வருஷங்களுக்கு அப்பால் - சந்திர நாதனை நான் கான்பூரில் சந்தித்து நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு - அவன் இருப்பிடம் தெரியவந்தது.

அகஸ்மாத்தாகத் தானுபாதிலிருந்து யாரோ ஒரு வக்கீல் எழுதிய கடிதம் எனக்குக் கிடைத்தது:

"தங்களுடைய நண்பர் பாபு சந்திரநாத் ஸிம்ஹர் மிகவும் எக்கச்சக்கமான நிலையில் இருக்கிருர். நான் அவருடைய வக்கீல்; இந்தச் சமயத்தில் அவருக்குத் தைர்யம் கொடுக்கக்கூடிய ஓர் அந்தரங்கமுள்ள ஆள் அவர் பக்கத்தில் இருக்கவேண்டும். அவருடைய மனைவி தங்கள் பெயரைக் குறிப்பிட்டாள். தாங்கள் இந்த ஸமயத்தில் வந்தால் எவ்வளவோ அனுகூலமாயிருக்கும். எப்படியாவது இங்கு வரப் பிரயத்தனப்பட்டால் நல்லது."

ஒழுங்காக, ஆங்கில மொழியில் வக்கீல் தொழில் முறைக்கு ஏற்றபடி இருந்தது லிகிதம். வெகு நேரம் யோசனை செய்தேன்: 'அப்பேர்ப்பட்ட சங்கடம் என்ன நேரிட்டிருக்கும்? என்னுடைய மத்தியஸ்தம் எதற்காக? சந்திரநாதன் எவர் பேச்சையும் கேட்பவனல்லவே?' எனக்கு ஒன்றுமே விளங்கவில்லை. இருந்தும் மீராவை நினைத்துக்கொண்டு கிளம்பினேன்.

மான்பூம் ஜில்லாவில் ஒரு ஸ்டேஷன்; பெயர் எனக்குக் கவனம் இல்லை; தானுபாதுக்கு அருகில்தான். 'அந்தக் கான்பூர் எங்கே! எனக்கு முன் பின் தெரியாத இந்த ஊர் எங்கே! இந்த இடத்தை எப்படிப் பிடித்தான் அவன்?' இவ்வாறெல்லாம் சிந்திக்கலானேன். காலபுருஷ நக்ஷத்திரம் அதன் இஷ்டப்படி வக்கிரமாக அல்லவோ செல்லும்? அதைக் குறித்து நான் யோசித்து என்ன ஆகவேண்டும்?

கடிதம் போட்ட கனவான் ஸ்டேஷனுக்கு வந்திருந்தார். நான் வருவதாக அவருக்குத் தந்தி கொடுத்திருந்தேன். அந்த வக்கீல் அடிக்கடி என் மனத்திரையில் வந்து நிற்கிருர். அவரை நினைக்காமல் இருக்க முடியவில்லை. ஒரு மெலிந்த வடிவம், துரையைப்போல் உடுப்பு அணிந்து என்னை நோக்கி வருவதைக் கண்டேன். அந்த ஆளின் உதடுகள் எதைச் சொல்லவோ அசைந்தன. "குட் ஈவினிங்...என்னைத் தெரிகிறதா? நானே என்னைத் தங்களுக்கு அறிமுகப்படுத்திக்கொள்ளுவதைப் பற்றி மன்னிக்கவேண்டும். தானுபாதில்தான் நான் 'பிராக்டிஸ்' பண்ணுகிறேன். ஸ்ரீமான் ஸின்ஹா என்னுடைய கட்சிக்காரர். உங்களிடம் நெருப்புப் பெட்டி இருக்கிறதா? தாங்க்ஸ்" என்று அவர் என்னை வரவேற்ருர். அவர் பேசுவது பாதி ஆங்கிலமும் பாதி வங்காளியும் கலந்த மணிப்பிரவாளமாயிருந்தது. ஒரு ஸிகரெட்டை எடுத்து அவரிடம் நீட்டினேன்.

அந்தக் கனவான் இந்தப் புறமும் அந்தப் புறமும் பார்த்துவிட்டு, "ஆனல் பிடிக்கிறேன். தாங்கள் கொடுக்கும்போது மறுப்பது அழகல்ல. தாங்க்ஸ்" என்றதும் ஸிகரெட்டைப் புகைக்க ஆரம்பித்தார். அதற்குமேல்

அவர், "நான் பீடிதான் பிடிப்பது வழக்கம், சென்ற தேசிய இயக்கத்திலிருந்து. ஆனால் என்ன கஷ்டம் ஏற்பட்டுவிடுகிறது தெரியுமா? இதோ தாங்கள் எனக்குக் கொடுத்தீர்கள். அதை எப்படி மறுப்பது? அதுவும் முதல் முதல் நாம் சந்திக்கும்பொழுதே? என்ன சொல்லு கிறீர்கள்?" என்றார்.

என்ன சொல்லுவதென்று தெரியவில்லை. அவரைப் பின்பற்றி, "ஆமாம், நீங்கள் சொல்வது வாஸ்தவமே!" என்றேன்.

"தாங்க் யூ" என்றார் அந்தப் பெரிய மனுஷ்யர்.

நாற்புறமும் கவனித்துவிட்டு, "அப்புறம்...... சந்திரநாத் எங்கே? அவருக்கு என்ன ஆபத்து?" என்று கேட்டேன்.

என் பேச்சின் நடுவில் குறுக்கிட்டு அவர், "சற்று நிதானியுங்கள்; அதைச் சொல்வதற்கு இது சரியான இடமன்று" என்றார்.

"பின் எந்த இடத்திற்குப் போகலாம்?" என்றேன்.

"நல்லது, யோசனை பண்ணிச் சொல்லுகிறேன். எங்கே போகலாமென்பதைப் பற்றித்தான் யோசனை செய்கிறேன்.......நல்லது. தாங்கள் அறிந்துகொண் டிருக்கலாம்; மூன்றும் மனுஷ்யனுக்கு என் கக்ஷிக்காரனைப் பற்றிய ரகசியங்களை வெளியிடுவது என் தொழிலுக்கு அகௌரவம். ஆனால்......பாருங்கள், வேறு வழி இல்லை; தங்களுக்கு நான் அதை அறிவித்தே ஆகவேண்டியிருக் கிறது. ஆம். வேறு வழி இல்லை. என் சங்கடம் தெரிகிறதா?"

அந்தக் கனவான் இவ்வாறு சட்டதிட்டமாகப் பேசுவது என் மூச்சைத் திணறச் செய்தது. "ஆமாம், இப்படியே இங்கு நாம் நின்றிருந்தால்?" என்றேன்.

"நல்லது. யாரும் இராத இடம் எங்கிருக்கிறதென்று பார்க்கிறேன். வேறு ஆசாமி இருக்கக்கூடாது."

சுற்றுமுற்றும் கவனித்தேன். தனிமைக்குக் குறைவே இல்லை. எத்திசையும் பரந்த வெளி. ஜன சந்தடியே இல்லை. உட்கார்ந்து பேசுவதற்கு அளவற்ற இடமும் இருந்தது. அந்தப் பிராந்திய மெங்கும் பாறையே; எந்தப் பக்கம் பார்த்தாலும் பாறை; குன்றுகள் அல்ல. யாரோ பரப்பிவைத்தாற்போல் சமதரையான கற்புரை. ஒவ்வொரு பக்கமும் இந்த மாதிரியான கற்கள் குன்று போல் குவிந்து இருக்கும். சிறுமியர் சிலர் இங்கே கற்களை அடுக்கிச் சிற்றிலைக் கட்டி விளையாடிவிட்டு அப்போது தான் போனாற்போல் இருந்தது, அந்தக் காட்சி. அத்தகைய இடம் ஒன்றைச் சுட்டி நான், "அங்கே வேண்டிய இடம் இருக்கிறதே. வாருங்கள்; அந்த மறைவில் உட்கார்ந்துகொண்டு பேசலாம்" என்றேன்.

கனவான் இரண்டொருதரம் புருவத்தைச் சுளித்துக் கொண்டு, "நல்லது. எனக்கு இதன் கவனமே வரவில்லை... நல்லது, கூலி! ஏய் கூலி!" என்று கூப்பிட்டார்.

சிறிய ஸ்டேஷனானதால் கூலிக்காரனே அகப்பட வில்லை. பெரிய மனுஷ்யர் வெறுப்புற்றவராய், "தரித் திரம் பிடித்த ஸ்டேஷன். ஒரு கூலிக்காரனைக் கூடக் காணோமே! தங்கள் 'லக்கேஜ்' இரண்டும்—" என்று இழுத்தார்.

அதற்குள் நான், "இந்த இரண்டு சாமான்களுக் காகக் கூலிக்காரன் எதற்கு? நடவுங்கள். இந்தக் கையில்

ஒன்றும் அந்தக் கையில் ஒன்றுமாக எடுத்துக்கொள்ளு கிறேன். ரொம்பப் பளுவுகூட இல்லை” என்றேன்.

உண்மையில் அவை லேசானவையே; ஒரு சின்ன ‘ஸூட் கேஸ்’, ஒரு படுக்கை; அவ்வளவுதான்.

வக்கீல் மனக்குறையுடன், “இப்படி ஒன்று கொடுங்கள் என்னிடம்...கூடாது...கூடாது. நாமிரு வரும் பங்கிட்டுக் கொள்ளலாம். வேண்டானு...தராது போனால் என் மனசுக்குக் கஷ்டமாயிருக்கும்” என்றார்.

அவர் கையில் ‘ஸூட் கேஸை’க் கொடுத்துவிட வேண்டியதாயிற்று. பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டே அதைப் பார்த்துவிட்டு, “ரொம்ப நன்றாக இருக்கிறது! நேர்த்தியான பெட்டி! இப்படிப் பேசு கிறானே இவன், அநுசிதம் என்று என்னை எண்ணிக் கொள்ள வேண்டாம். என்ன விலை?” என்று விசாரித்தார்.

விலை எனக்குக் கவனமில்லை. “எனக்குச் சரியாக ஞாபகமில்லை. பிரமாதமானதன்று; ஐந்து ரூபாய்க்குள் இருக்கும்” என்றேன்.

ஸூட் கேஸின்மேல் கண் வைத்தபடியே, கனவான், “நல்ல வர்ணம். வேலைப்பாடு நன்றாக இருக்கிறது. நானும் ஒன்று வாங்கவேண்டும் இந்த மாதிரி” என்றார்.

ஒரு பாறையின்மேல் போய் உட்கார்ந்தேன். “சொல் லுங்கள் சமாசாரத்தை. சந்திரநாத் எங்கிருந்து வந்தான்? அது உங்களுக்குத் தெரியுமா?” என்று கேட்டேன்.

“எனக்குத் தெரிந்தவரை, கான்பூரில் இருந்தார், இங்கே வருவதற்கு முன்” என்றார்.

மேலும் அவர் சொல்லுவாரென்று நான் எதிர்பார்த் தேன். ஆனால் அவர் ஒரு வார்த்தையும் வெளியிடவில்லை.

ஆகவே நான் மீண்டும் கிளறவேண்டியதாயிற்று; “மேலே சொல்லுங்கள் விஷயத்தை” என்றேன்.

“நல்லது; தாங்கள் எதை அறிய விரும்புகிறீர்கள்?” என்றார் அவர்.

“இப்போது என்ன செய்துகொண்டிருக்கிறான் சந்திரநாதன்?” என்றேன்.

“இங்கே இருக்கும் சந்த்ரபுரா, மண் பாண்டத் தொழிற்சாலையின் சொந்தக்காரர் அவர்.” இதைக் கூறியதும் அவர் வாயை மூடிவிட்டார்.

சரியான ஆள் அவர்; வக்கீல் ஸாமர்த்தியங்களில் உள்ளும் புறமும் ஊறினவரென்பதைக் கண்டறிந்தேன். அனுவசியமாக வார்த்தையை வெளியில் கொட்டிவிடுபவரல்ல. நிரம்பப் பிரயாசையின் பேரில், அவரிடத்திலிருந்து சமாசாரத்தை வருவித்தேன். சந்திரநாதன் இந்த இடத்தில் மண்பாண்டத் தொழிற்சாலை யொன்று நடத்தி வந்தான். சுமார் ஐந்து வருஷங்களுக்குமுன் எதுவும் பயிராகாத இந்தக் காடான நிலம் தொழிற்சாலைக்கு ஏற்ற இடமெனக் கண்டு இங்கேயே ஸ்தாபனம் செய்தான். அவன் மனிதனால் ஆகாத பாடெல்லாம் படவே இந்தத் தொழிற்சாலை அபிவிருத்தி அடைந்தது. அந்த ஸமயத்தில் சந்திரநாதனுக்கு இந்த வக்கீல் கனவானுடைய பரிசயம் உண்டாயிற்றாம். இதுவரை கூறி முடித்தவுடன் அவருக்குப் பெருமூச்சு வாங்கியது.

அவர் ஒரே மூச்சில் அநேக விஷயங்களை வெளியிட்டார்: “அவர் மகா மேதாவி. அதிசயமான மனிதர். அந்த மாதிரி ஒருவரை நான் பார்த்ததே இல்லை. நானே இந்தக் கண்ணால் பார்த்தேன்! என்னை நம்புங்கள். அசுத்தமான

கூலியாட்களுடன் அவரும் கலந்துகொண்டு உழைக்கிறார். அவருடைய மனைவியோ, அழகே உருவெடுத்தவள். தேவ லோகத்து ரம்பைதான். அவளும் வேலை செய்கிறாள். இந்தமாதிரி முன்னுக்குக் கொண்டுவந்த ஒரு தொழிற் சாலையைத் தற்சமயம் அவர் இழந்துவிட உத்தேசித்து விட்டார். அந்த விஷயத்தில் அவர் தீர்மானமாய் இருக் கிறார்.'' அவர் இங்கிலீஷ்காரர் மாதிரி இரு தோள் களையும் குலுக்கிக்கொண்டார். அதற்குமேல் பேசவில்லை.

“இழந்துவிட உத்தேசமென்றால் எனக்கு அர்த்த மாக வில்லையே?'' என்றேன்.

மீண்டும் இருமுறை தோள்களைக் குலுக்கியதும், “நல்லது. அதைத்தான் நான் சொல்லப் போகிறேன். இப்போது விஷயத்துக்கு வந்துவிட்டீர்கள்'' என்றார்.

இதை மொழிந்ததும் அவர் சும்மா இருந்தார். அவர் பிகு பண்ணுவதைப் பார்த்து எனக்கு எரிச்சல் வந்தது; “அதைத்தான் நானும் கேட்கிறேன். ஐயா!'' என்றேன்.

“அதைத்தான் நான் சொல்ல வருகிறேன்'' என்றார்.

பலவிதமாகக் கேள்விகளைப் போட்டு இன்னும் சில விஷயங்களைத் தெரிந்துகொண்டேன். சந்திரநாதன் தொழிற்சாலையை இன்னும் விஸ்தாரமாக்கும் வேலையில் பித்துக் கொண்டான். அதற்காக வட்டிக்கு வட்டி போட்டுத் தருவதாகத் தன் தொழிற்சாலையை அடை மானம் வைக்க உத்தேசித்துவிட்டான். கடன் கொடுப் பவன் ஒரு மார்வாடி. ‘இந்த அடைமானத்தினால் கஷ்டமே விளையும்; முடிவில் தொழிற்சாலை மார்வாடியின் வசமாகி விடும்' என்பதே வக்கீலின் அபிப்பிராயம்.

"பாருங்கள், சந்திரநாதன் ஓட்டாண்டியாய்ப் போக வேண்டியதுதான் இதனால்; நிர்மூலமாகிவிடுவான். மார்வாடிக்குத் தயை தாக்ஷிண்யமே இல்லை" என்றார்.

வக்கீல் சொல்வது உண்மையென்றே பட்டது. நான் வெய்துயிர்த்து, "என்னை எதற்காக வருவித்தீர்கள், வக்கீல்வாள்? அவன் யார் புத்தியையும் கேட்பவனல்லவே! உங்களுக்கே தெரியும் அது" என்றேன்.

வழக்கப்படித் தோளை அசைத்துவிட்டு அவர், "நல்லது, இப்போது நாம்—" என்று ஆரம்பித்து, உடனேயே மௌனமாகி விட்டார்.

இவ்வாறு சில கணம் இருந்துவிட்டு, திடீரென்று என் இரு கரங்களையும் பிடித்துக்கொண்டு, "இது உங்களால்தான் ஆகவேண்டும். எத்தனை பேருடைய ஜீவனத்தின் வாயில் மண் விழுந்துவிடும் தெரியுமா இதனால்?" என்றார்.

அவருடைய உடல் சிலிர்த்தது. அந்தச் சமயம் ஒரு மாட்டுவண்டி வந்து நின்றது. "சரி, நாம் போகலாம்" என்று வக்கீல் என் கையை ஓர் உலுக்கு உலுக்கினார். "நல்லது. நாளைக்கே உங்களை வந்து பார்க்கிறேன்" என்று கூறி விடைபெற்றுக்கொண்டார்.

வண்டியில் என் சாமான்களை மட்டும் ஏற்றினேன். நான் நடந்தே சென்றேன். நேர்த்தியான ரஸ்தா. சுற்றுப்புறமெங்கும் கண்ணுக்கு ரம்மியமாக இருந்தது. ஏற்றமும் இறக்கமுமாக அலை எழுவது போல் பாட்டை நீண்டது. இருமருங்கிலும் திக்கு முடிவுவரை பரவிய சால விருக்ஷம் நிரம்பிய வனரேகை. நடுநடுவே ஸந்தாளிகள் வசிக்கும் சிறு கிராமங்கள். மாலை நேரம். தாழும் கதிரவன் விடும் மஞ்சள் வெயிலில் நாற்புறமும் சூழ்ந்

திருக்கும் பரேச்நாத் குன்றுகளின் வரிசை பளிச்செனப் புலப்பட்டது. பாட்டை மேடான ஓர் இடத்தில் திரும்பும்போது, இடதுபுறம் தொலைவில் பரந்த வெளியில், விண்நிவந்த புகைபோக்கிகள், வரிசையாக வீடுகள், பலாசங்காட்டின் ஊடே தென்பட்டு ஒரு சித்திரம் போல் என் மனத்துள் பதிந்தன. வண்டி இடது பக்கமாகத் திரும்பிய இடத்திலிருந்து வேறொரு சிறிய ரஸ்தா பிரிந்து சென்றது. அதன் அருகிலேயே, 'சந்திரபுரா தொழிற்சாலைக்குப் போகும் வழி' என்ற குறிப்பை ஒரு மரப்பலகையில் கண்டேன். இருள் மெல்லத் திக்குத் திகந்தத்தைக் கவிந்து வந்தது. வழி கண்ணுக்கு மங்கிக் கொண்டே வந்தது. "இன்னும் எவ்வளவு தூரம்?" என்று வண்டிக்காரனைக் கேட்டேன்.

"அதோ யசமான்: விளக்குத் தெரியுதே" என்றான்.

நேரே நோக்கினேன். என் முன் சற்றுத் தொலைவில் தீப வரிசைகள் அசையாமல் ஒளிர்ந்தன. உயரமான புகைக்கூண்டுகளில் எழும் அக்கினி ஜ்வாலைகள் இருண்ட ஆகாயத்தை நக்கிக் கொடுத்தன, ஆயிரம் பாம்புகளின் நாக்குகளைப் போல்.

சிறிது நாழிகைக்கெல்லாம் தொழிற்சாலை ஸமீபம் வந்துவிட்டேன். ரோட்டில் இரு பாரிசமும் பிரகாசமான மின் விளக்குகள். வலது பாரிசத்தில் மேற்கு மூலையாகத் தொழிற்சாலையின் பெரிய கூடங்களில், செங்கல் வேகுமிடங்களில் நெருப்புத் திகுதிகுவென்று ஜ்வலித்தது. கரகரவென்று யந்திரங்கள் இரைவது கர்ணகடூரமாயிருந்தது. முதலாளி உள்ளே இருக்கிறாரென்று தெரிந்தது. அன்று 'எஞ்சினி'ல் ஏதோ கோளாறு.

அதனால் அந்த அவவேளையில் கூட மராமத்துச் செய்து கொண்டிருந்தார்கள் தொழிலாளிகள்.

மீரா என்னைக் கண்டதுமே, முகத்தில் ஸந்தோஷம் ஒளிர, சுத்தமான வங்காள மொழியில், "நீங்களா! நீங்கள்தானா? கனவா?" என்றாள்.

நான் சிரித்துக்கொண்டே, "தரையில் என் நிழல் விழுகிறதே, தெரியவில்லையா? நான் பிசாசல்ல; உயிருள்ள மனிதனே" என்றேன்.

மீரா வெட்கங்கொண்டு, "நான் அப்படிச் சொன்னேனா? ரொம்பவும் இளைத்துப் போய் விட்டீர்களே?" என்றாள்.

மயங்கிப் போய் அவளையே பார்த்தேன்.

"நான் முன்பு பார்த்ததைவிட நீங்கள் வசீகரம் நிரம்பி இருக்கிறீர்கள். உங்கள் பெயரைத் 'தீப்தி' (சுடரொளி) என்று மாற்றிவிட வேண்டும்" என்றேன். நாலைந்து வயசுள்ள கொழுத்த சிறுபிள்ளை ஒருவன் கூச்சலிட்டு விளையாடுவதனால் அந்த இடம் கலகலவென்றிருந்தது. பூந்தோட்டத்தின் திற்றி வாசல் வழியாகச் சூறுவளிபோல் வந்து எங்கள் எதிரே நின்றான். அவன் சந்திரநாதனுடைய பிள்ளை யென்று ஊகித்துக்கொண்டேன். பையன் கையில் பெரிய சுட்டமண் பந்தை வைத்துக்கொண்டிருந்தான். "டே ஜிஞ்ஜிர், யார் வந்திருக்கிறார் பார். மாமாடா, நமஸ்காரம் பண்ணு" என்றாள் மீரா.

அவனைத் தூக்கி என் மடிமீது வைத்துக் கொண்டேன்.

"குமார் கிஷோர் என்றுதானே பெயர் வைத்தீர்கள்? ஜிஞ்ஜிரென்று ஏன் மாற்ற வேண்டும்?" என்றேன்.

"உங்கள் சிநேகிதர் குமார் கிஷோரென்றுதான் அழைக்கிறார்; நான் மட்டும் ஜிஞ்ஜிரென்ற பெயரால் கூப்பிடுகிறேன்" என்றாள்.

சிறுவனுக்குச் சற்று நேரத்திற்குமேல் என் மடியில் இருப்புக் கொள்ளவில்லை. நழுவி நழுவிக் கீழே இறங்கித் தன் அன்னையிடம் ஓடினான்.

"போய்ப் படி. என் மடியில் ஏறிக்கொள்ளக் கூடாது, போ" என்றாள் மீரா.

தாதி ஒருத்தி அவ்விடத்திலிருந்து அவனை மெல்ல அழைத்துக்கொண்டு போய்விட்டாள். நான் அவர்கள் வீட்டைச் சுற்றிப் பார்த்தேன். மாளிகை நிருமிக்கும் ஆசை சந்திரநாதனை விடவில்லை. கற்களைக் கொண்டு சமைத்த அழகிய வாஸஸ்தலம்.

திரும்பிப் பார்த்தபோது மீரா அந்த இடத்தில் இல்லை. என் உபசரணைக்கு வேண்டியவற்றைத் தயாரிக்க உள்ளே போயிருப்பாள். வேலையாள் என்னை ஓர் அழகிய அறைக்குள் கொண்டுவிட்டான். ஒவ்வோர் இடத்திலும் ஐசுவரியத்தின் அறிகுறி எதிர்ப்பட்டது.

ஒரு நாற்காலியில் அமர்ந்து நான், "மீரா தேவி" என்று அழைத்தேன்.

நிச்சப்தமாக மீரா என் எதிரே வந்து நின்றாள். அவள் எழிலார் வதனத்தையே உற்று நோக்கினேன்; தெய்விகப் பதுமை யெனத் தோற்றினாள் அவள். என்னைப் பார்த்ததும் அவளிடத்தில் ஒளிர்ந்த ஒரு சுடர், மெல்லத் தணிந்துகொண்டே வந்தது. இரவின் கடை யாமத்தில் நக்ஷத்திர ஒளியே இராத நிச்சலமான ஆகாயத்தை அவள் நினைப்பூட்டினாள்.

பொழுதை வீணுக்க இஷ்டமில்லை எனக்கு. வந்த வேலையைப்பற்றிப் பேச ஆரம்பித்தேன். மீராவிடம் எல்லாவற்றையும் அறிவித்துவிட்டு, "நீ தடுக்கவில்லையா?" என்றேன்.

சற்றும் சலனமில்லாமல், "இல்லை" என்றுள்.

"நான் சொல்லுகிறேன் அவனுக்கு. நீயும் என்னுடன் சேர்ந்துகொள்ளவேண்டும்" என்றேன்.

"முடியாது" என்றுள் மீரா.

"இதனுல் யாருக்கு நன்மை என்பது உன் மனசுக்குப் படவில்லையா?" என்றேன்.

வெகு நேரம் சிந்தித்துவிட்டு, "எனக்கும் ஒன்றும் படவில்லை" என்றுள்.

அதற்குமேல் பேச்சை வளர்த்துவதில் பிரயோஜனமில்லை. சந்திரநாதனும் வந்துவிட்டான். அவன் உடம்பாத்தியந்தம் மை, எண்ணெய்க் கறை. அரையில் 'ஹாப் பாண்ட்'; திறந்த உடம்பு. காலில் 'பூட்ஸ்'. அவன் இரண்டு கைகளாலும் என்னைத் தழுவிக்கொண்டு, "நரு......நீயா? எப்படித் தெரிந்தது என் இருப்பிடம்?" என்றுன்.

"என்னை அதிக அன்பினுல் கசக்கிக் கொன்றுவிடாதே" என்றேன்.

அவன் சிரித்துவிட்டு விலகினுன். என் சொக்காயிலும் வேஷ்டியிலும் மையும் கரியும் ஒட்டவைத்துவிட்டான். அன்றிரவே தொழிற்சாலையைக் காட்ட என்னை இழுத்துக் கொண்டு போனுன். நெருப்புடன் விளையாட்டு. அடுக்கிய பச்சைக் கற்களின் கீழ் எந்திரங்களிள் மூலமாக அக்கினியின் பிரவாகம் 'ஓ' என்று சென்றது. மேலே புகை

போக்கியிலிருந்து அதன் சிகை ஆடிற்று. கறுப்புக் களிமண் கனலில் பதமாகிப் பால் வெண்மையாக வெளியே உருவுடன் வந்தது. எல்லாவற்றையும் எனக்குக் காண்பித்தான். ஆலையில் மண்கட்டி சன்னத் துகளாகியது. மற்றொரு யந்திரம் அதைப் பிசைந்தது. வேறொரு யந்திரத்தில் செங்கல்லின் உருவம் கொண்டது. ஒவ்வொரு நுணுக்கமும் எனக்குப் புரியும்படி அவன் காட்டினான். இன்று அவையெல்லாம் என் கவனத்துள் இல்லை. யந்திர லோகத்தை ஊனக் கண்களால் சுற்றிப் பார்த்தேன். ஆனால் என் மனக் கண் அந்த யந்திர லோகத்தின் மன்னனைப் பார்த்து வியப்புற்றது.

சந்திரநாதன் தன் இடத்திற்குத் திரும்பியதும் என்னிடம் கூறினான்: "இந்தத் தொழிற்சாலையை நானும் மீராவுமே ஆரம்பித்தோம், நரூ! இருவருமாக உழைத்தோம், ஆதிகாலத்து மானிட தம்பதிகளைப் போலவே. என் பக்க பலம் மீரா. ஞாபகமிருக்கிறதா உனக்கு? ஒரு சமயம் களிமண் எடுத்துவரப் போய் மீரா சறுக்கி விழுந்து, உன் மூஞ்சி துணியெல்லாம் சேறுக்கிவிட்டாளே!" என்றதும் பெரிய சிரிப்புச் சிரித்தான்.

சிரிப்பு ஓய்ந்ததும், "நரூ, எப்படி இருக்கிறது இந்தத் தொழிற்சாலை?" என்றான்.

"பேஷ்! நன்றாக அமைந்திருக்கிறது. ஒவ்வொரு சிறு விஷயத்தையுங்கூடக் கவனித்துச் செய்திருக்கிறாய். நம் தேசத்திலேயே ஆக்கக்கூடிய பொருள்கள் இவ்வளவு இருக்கின்றனவே என்று ஆச்சரியப்படுகிறேன், சந்த்ரூ" என்றேன்.

"சின்னதாகத்தான் ஆரம்பித்தேன். வரவர அதை விருத்தி செய்யலானேன். பொம்மை, ஜாடி இவை

யெல்லாங்கூடப் பண்ண எனக்கு உத்தேசம். 'ஸிலிகா-பிரிக்ஸ்' உற்பத்தி செய்யத் தனிப் பகுதி அமைக்க வேண்டும். அப்புறம் பக்கத்திலேயே இரும்பு ஆலை ஒன்று நிருமிக்க வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. இடம் எல்லாம் பார்த்து வைத்திருக்கிறேன். 'ப்ளானு'ம் போட்டு விட்டேன். நாளைக்கு அதை யெல்லாம் உனக்குக் காட்டு கிறேன். மைல் கணக்காகப் பரவிய பிரம்மாண்டமான ஒரு தொழிற்சாலை என் கனவில் உருவாகிக்கொண்டிருக் கிறது."

தன் வீட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கையும் எனக்குக் காண்பிக்காமல் இல்லை அவன். ஒவ்வொரு வஸ்துவின்பேரிலும் என் கண்களை ஆகர்ஷணை செய்தான். ஓர் அறையில் கண்ணாடி அலமாரிகளில் கணக்கற்ற புஸ்தகங்கள்; எல்லாம் விஞ்ஞான சம்பந்தமானவை. ஒரு பீரோவில் பல வங்காளிப் புஸ்தகங்கள். அவற்றின் மத்தியில் நான் எழுதிய நூல்கள் ஒன்று பாக்கியில்லாமல் இருப்பதைக் கண்டேன்.

"உன் புஸ்தகமென்றால் படிக்காது இருக்கமாட் டேன், நரூ! மீரா படிப்பாள்; நான் கேட்பேன். எனக்கு மிகவும் பிடித்தவை. பழைய மனிதர்களின் கவனத்தை மூட்டுகின்றன அவை" என்றான்.

சற்றுநேரம் சும்மா இருந்துவிட்டு, "எனக்கு ரொம்பவும் இஷ்டமான புஸ்தகம் எது தெரியுமா? நட் ஹாம்ஸூனின் (Knut Hamsun) 'க்ரோத் ஆப் தி ஸாயில்' (மண் வளம்). ஐந்தாவது தரமாக அந்தப் புஸ்தகத்தை வாங்கியிருக்கிறேன். பழசெல்லாம் படித்துக் கிழிந்து போய்விட்டன" என்றான்.

மீரா அங்கே வந்து சாந்தமாகவே, "சாப்பாடு ஆறிப் போகிறதே" என்ருள்.

சந்திரநாதன் சிடுசிடுத்து, "போ, வருகிறோம். தோட்டத்திலேயே மேஜையைப் போட்டு அதன்மேல் பரிமாறச் சொல்" என்ருன்.

மூன்றுபேருமாய்த் தோட்டத்தில் போய் உட்கார்ந் தோம். சமையற்காரன் போஜனத்தைப் பரிமாறிக் கொண்டிருந்தான். திடுமென எங்கேயோ 'க்ரிங்' என்று மணியோசை துடித்தது. சந்திரநாத் விரைவாக எழுந்து 'டெலிபோன்' இருக்குமிடத்திற்குச் சென்று பேச உட்கார்ந்துவிட்டான். தொழிற்சாலைக்கும் வீட்டிற்கும் 'டெலிபோன்' தொடர்பு இருந்தது. "இப்போதே அவனைத் தள்ளிவிடுங்கள். உடனே 'சார்ஜை' அவன் கையிலிருந்து பிடுங்கிவிடுங்கள். நாளைக்கு வந்து நான் மிகுதியைப் பார்த்துக்கொள்ளுகிறேன். வேறு ஆளை அந்த இடத்தில் வையுங்கள். ஜாக்கிரதை இல்லாத மனுஷ்யன்; வேலைக்கு 'டிம்கி' கொடுப்பவன். 'க்ரிமினல்' (குற்றவாளி), சைத்தான்!" என்று யாரையோ சாடித்துக் கொண்டிருந்தான்.

நான் வேறு மனத்தவனுய் ஆகாயத்தை அண்ணாந்து நோக்கியபடி இருந்தேன். அங்கே, சாயா பதத்தின் பக்கத்திலேயே கால புருஷன் தன் வரம்பிற்குள் சஞ்ச ரித்துக்கொண்டிருந்தான்; அதே தேஜஸுடன், அதே விதமாக, அதே ஆக்ருதியுடன்.

நான் எதன் நிமித்தம் வந்தேனே அந்தக் காரியம் கைகூடவில்லை. என் அனுமானம் பொய்யாகவில்லை. மறுநாள் அதிகாலையிலேயே, வக்கீல் ஆஜராகிவிட்டார், கச்சிதமாய்த் துரைமார் உடுப்பிலேயே. எதிலும் பற்றில்

லாததுபோன்ற காம்பீர்யத்துடன், 'குட் மார்னிங்' என்று வரவு கூறினான் சந்திரநாதன். தம் கையைக் கொடுத்து அந்தக் கனவான், 'குட் மார்னிங்' என்று வணங்கினார். என் பக்கமாகத் திரும்பி, என்னை அறிந்துகொள்ளா தவர்போல், "மிஸ்டர் ஸின்ஹா, இவர்...........யார்? தெரியவில்லையே!" என்றார்.

"நல்லது, அறிமுகப்படுத்துகிறேன். இவர் என் ஆத்மார்த்த சிநேகிதர்; பெரிய எழுத்தாளர். வங்காளி மொழியில் எவ்வளவோ அரிய நூல்களை எழுதியுள்ளார். உங்களுக்கு வங்காளி பாஷை தெரியுமென்று எண்ணு கிறேன்—" என்றான் சந்திரநாதன்.

அவரும் ஆழமாகவே, "ஏதோ சிலவற்றைப் படித் திருக்கிறேன். ஓகோ! இவர் சிறந்த எழுத்தாளரென்று தெரிகிறது. என்னைப்பற்றி இவருக்குச் சொல்லுங்கள், மிஸ்டர் ஸின்ஹா" என்றார்.

சந்திரநாதன் மெல்லச் சிரித்துக்கொண்டே, "தானு பாதிலிருக்கும் ஒரு நியாயவாதி இவர்—" என்றான்.

"மிஸ்டர் ஸின்ஹாவின் சட்ட ஆலோசனையாளர்" என்று உறுத்திச் சொன்னார்.

அதற்குமேல் வந்த விஷயத்தைப்பற்றிப் பேச்சை எடுத்தார். ஆனால் சந்திரநாதனோ தன் பிடியை விட வில்லை. "அவர் எதை வேண்டுமானாலும் சொல்லட்டும். அவர் போடும் வட்டிக் கணக்கு எவ்வளவு கருக்கோ, அவ்வளவு உறுதியாகிவிட்டது என் முயற்சியின் கணக் கும்" என்றான் சந்திரநாதன்.

"நல்லது, வட்டி எவ்வளவு ஆகுமென்பதை நீங்களே கண்ணால் பாருங்கள்.....இப்படிக் கொடுங்கள் அந்தப்

பேனவைச் சற்று" என்று என்னிடமிருந்து பேனவை வாங்கிக்கொண்டார். மடமடவென்று என்னவோ கணக்கைப் போட்டு, சந்திரநாதன் எதிரே நீட்டி, "பார்த்தீர்களா?" என்று எடுத்தார் அவர்.

காகிதத்தை மேஜைமேல் வைத்துவிட்டுச் சந்திரநாதன், "நீங்கள் ஏன் என்னைத் தடுக்கிறீர்கள்? தொழிற்சாலையைப் பெரிதாக்க என்னவோ நான் முனைந்துவிட்டேன். இதனால் என் உரிமையை இழந்தாலும் இழக்கிறேன். தொழிற்சாலையாவது நிலைத்துப்போகுமோ இல்லையோ?" என்றான் ஒரே மூர்க்கமாய்.

அதே ஸமயம் மீரா அங்கே தோன்றினாள். அவள் பின்னாலேயே ஆள்காரன் டீ ஸெட்டை ஏந்திக்கொண்டிருந்தான். முன்னெல்லாம் மீரா தன் கையாலேயே டீயைத் தயார் செய்து வழங்குவாள். வக்கீல் அளவுக்கு மீறி மரியாதை செலுத்தினார். மீரா டீக் கோப்பையை நீட்டும்போது அவர் துடுக்கென எழுந்து நிற்கவே, கைபட்டுக் கோப்பை கவிழ்ந்து டீ யெல்லாம் அந்தப் பெரிய மனுஷ்யனின் 'கோட்' மீது வழிந்தது. மீரா இவ்வாறு நேரிடுமென்று எதிர்பார்க்கவில்லை; வக்கீலின் முகம் வாடிவிட்டது. "கோட்டைக் கழற்றி எறியுங்கள். ஸோப் போட்டுச் சுத்தமாக்கிக் கொடுக்கச் சொல்லுகிறேன் ஆள்காரனை; இதோ இப்பொழுதே, அகத்திலேயே; இஸ்திரிப் பெட்டிகூட இருக்கிறது" என்றான் சந்திரநாதன்.

பாவம்! அந்தக் கனவான், "வேண்டாம்; இதற்கு என்ன பிரமாதம்?" என்றார்.

ஆனால் சந்திரநாதன் சும்மா இருப்பவனா? அவனே எழுந்து வக்கீலின் உடம்பிலிருந்து அங்கியைக் கழற்றி

விட்டான். அப்புறம் மிகவும் பரிதாபகரமான காட்சி யொன்றைக் கண்டேன். சாகும்வரை என் மனத்தை விட்டு அது அகலாது. வக்கீலின் உள் சட்டை நூறு இடங்களில் கிழிந்த சீட்டித் துணி. அது எல்லாவற் றையும் வெட்டவெளிச்ச மாக்கிவிட்டது. பாவம்! அவர் தேநீர் தோய்ந்த மேலங்கியை மாட்டிக்கொண்டே, டாம்பி கத்தை விடாமல், "சீட்டித் துணிமேல் எனக்குத் தனி ஆசை. அதை எனக்கு விட மனசாவதில்லை" என்றார்.

எங்களுக்கெல்லாம் வாயடைத்துவிட்டது.

"நல்லது, மிஸஸ் ஸின்ஹா, நீங்களாவது சொல்லிப் பாருங்கள். இது மலையைக் கல்லி எலியைப் பிடிக்கிற கதையாக முடியும்" என்றார்.

இதில் என் பங்கைச் செய்ய, "மீரா தேவி, நீ சொன்னால் சந்திரநாதன் கேட்பான். இதனால் கஷ்டமே விளையுமென்று என் புத்திக்கும் படுகிறது" என்றேன்.

"அவருக்குத் தைரியம் இருக்கும்போது நான் என்ன சொல்வது?" என்றாள் மீரா.

வக்கீல் திக்பிரமித்துவிட்டார். சப்பிட்டவராய் விடைபெற்றுக்கொண்டார்.

மீரா அவ்விடத்தைவிட்டு அகன்றதும், "விசித்திரம்! மீரா இதுவரை மனச் சஞ்சலம் கொண்டதே இல்லை. அவள் வரவர ஒரு மாதிரியாக ஆகிக்கொண்டு வருகிறாள்" என்றான் சந்திரநாதன்.

என்னையும் அறியாமல் ஒரு பெருமூச்செழுந்தது. சட்டென என் பேனாவின் கவனம் வரவே, "வக்கீல் மறதியாக என் பேனாவைத் தம்முடனேயே எடுத்துக் கொண்டு போய்விட்டாரா, என்ன?" என்றேன்.

சந்திரநாதன் இடி இடி யென்று நகைத்தான். "ஏதாவது நேர்த்தியான ஸாமான் அவருடைய கண்ணில் பட்டால் அது மறைந்து போய்விடுவது வழக்கந்தான். அது திரும்பி வருமென்ற ஆசையை விட்டுவிடு" என்ருன்.

எனக்கு இது பெரிய அதிர்ச்சியைத் தந்தது. இப்படிக்கூட ஒரு பிராணி இருக்குமா!

"ரொம்ப ஏழை அவர். பெரிய இடங்களில் ஸகவாசம் பண்ணுவதற்காகவே அந்த மாதிரி தம்மைப் பழக்கி வைத்துக்கொண்டிருக்கிருர். அவருக்கு நான் மாசம் நாற்பது ரூபாய் சம்பளம் தருகிறேன். அதை வைத்துக்கொண்டு கோப்பியமாகப் பிழைக்கிருர்; மனுஷர் மட்டும் ஸத்யஸந்தர்...லக்ஷ ரூபாய் அவர்வசம் விட்டுச் செல்; சல்லிக்காசுகூடத் தொடமாட்டார். அற்பமான வஸ்துக்கள் மீதுதான் அவருக்கு லோபம். பாவம்!" என்ருன் சந்திரநாதன்.

எதுவும் பேசாமல் சில கணம் வீற்றிருந்தேன். சந்திரநாதனும் மௌனம் சாதித்தான்.

சற்று நாழிகை பொறுத்துச் சந்திரநாதன் என்னை நோக்கி, "நரூ! நீ இங்கே இரு. நான் சற்று வெளியே போகவேண்டிய காரியம் இருக்கிறது" என்ருன்.

அவனைத் தடுத்து நான், "சற்று இரு, போகலாம். உன் அண்ணு, மன்னி இவர்களைப் பற்றிச் சொல்ல வேண்டாமா?" என்றேன்.

"அது இருக்கட்டும் ஒரு பக்கம். என் மனைவியும் குழந்தையுமே என் வேலைகளுக்கு முட்டுக்கட்டையாக நிற்கிருர்களே; அண்ணுவையும், மன்னியையும் பற்றி என்

மூளையை நான் நோவ அடித்துக் கொள்வானேன். அப்படி அவர்கள் ரொம்பக் கஷ்ட தசையில் இருந்தால், கொஞ்சம் பண உதவி வேண்டுமானுல் செய்கிறேன். அவ்வளவுதான் என்னுல் ஆகும்" என்ருன்.

என் மனத்தை மிகவும் புண்படுத்தின இந்தச் சொற்கள். "ஏனோ அந்தப் பேச்சை எடுத்தேன். சரி, அதோடு விட்டுவிடு" என்றேன்.

"என் மேலேயே குற்றத்தைச் சுமத்துகிருயே, நரூ?" என்ருன் அவன்.

"யார்மேல் தப்பு என்பதை விசாரிக்க என்னுல் ஆகாது. எனக்கு அதிகாரமும் இல்லை. தவருக அவர்கள் மீது துவேஷம் கொண்டிருக்கிருய். அது மட்டும் சொல்லுவேன்" என்றேன்.

"கோபித்துக் கொள்ளாதே. நான் திரும்பி வந்த பிறகு பேசலாம்" என்றதும் வெளியே சென்ருன். அதற்கு மேல் அந்த விஷயத்தை அவன் எதிரே நான் எழுப்ப வில்லை. விந்தை! அவனும் அதைப்பற்றி ஸ்மரிக்கவே இல்லை.

நான் விடைபெற்றுக் கொள்ளும்போது சந்திர நாதனைச் சந்திக்க முடியாமல் போய்விட்டது. கடன் வாங்கும் காரியத்தில் அவன் ஈடுபட்டிருந்தான். ஸ்நான ஆகாரத்தைக் கூட மறந்துவிடுவான் இதனுல். மீராவிடம் செலவு வாங்கிக்கொள்ள, "நான் வருகிறேன், மீரா தேவி" என்றேன்.

எதிலும் பற்று இராமல் அவள் அமைதி குடி கொண்ட மனத்துடன், "ஆனுல் போய் வாருங்கள்" என்ருள்.

"உன் பிள்ளை எங்கே?" என்று அவளை வினவி னேன்.

"இங்கேதானே விளையாடிக்கொண் டிருந்தான்?" என்றாள் மீரா.

வியப்புற்று, "அவன் இருக்கும் இடம் உனக்குத் தெரியாதா?" என்றேன்.

பக்கத்திலிருக்கும் ஒரு சிறிய பங்களாவைச் சுட்டி அவள், "அங்கேதான் இருப்பான். தாதிதானே அவனை வளர்த்து வருகிறாள்? பாடம் சொல்லிக்கொடுக்க ஒரு வாத்தியாரையும் வைத்திருக்கிறார்" என்றாள்.

"சேசே! நன்றாயில்லை, உன்னையே நீ வஞ்சித்துக் கொள்ளுகிறாய். குழந்தையை உன் பக்கத்திலேயே வைத்துக்கொள்" என்றேன்.

"அதன் ஸ்வபாவமே எனக்குப் பிடிக்கவில்லை. இப்பொழுதே முரட்டுத் தனத்தைக் காண்பித்துவிட்டது, அப்பனைப் போல். எனக்கு எப்படிப் பிடிக்கும்?" என்றாள்.

மீராவின் சிந்தனையே என் மனத்தில் சுழல, வண்டியில் ஏறிக்கொண்டேன்.

அமாவாசை இரவு. என் கண்ணெதிரே விசும்பிடை வடதிசையில் சுழலும் ஸப்தரிஷி மண்டலம் ஏதோ பெரிய ரகசியத்தை ஆராயும் வினாக்குறிபோல், கடுவேகமாக ஓடும் ரெயில் வண்டியுடன் போட்டியிட்டது. அந்த உடுக்கணங்களின் இறுதியில் ஒரு மீன் பொறி ஜ்வலித்துக்கொண் டிருந்தது. கண்களுக்குச் சில சமயம் தென்படும்; சில சமயம் தென்படாது.

வானவிளக்கான அச்சிறு சாலிமீனை - அருந்ததியை - அடிக்கடி மீராவுடன் ஒப்பிட்டுப் பார்த்துக்கொண்டேன். பெருமூச்செறிந்து இந்த நினைவாகவே படுக்கையை விரித்துக்கொண்டு படுத்ததும் கண்ணயர்ந்தேன். ஸ்வப்னத்தில் எங்கள் ஹெட்மாஸ்டர் தரிசனம் தந்தார். சந்திரநாதன் அவர் எதிரே முறைத்துக்கொண்டு நிற்கிறான். அவனைத் தண்டிக்க அவர் கொடூரமான குரலில், 'கிஷ்டா கிஷ்டா, பெரம்பை எடடா' என்று கட்டளையிடுகிறார். சந்திரநாதன், அலக்ஷியமாக அவரைப் பார்த்து நகைத்து விட்டுப் போய்விடுகிறான். ஹெட்மாஸ்டர் தீனமான பார்வையுடன் என்னை நோக்கி, "பாரடா, சந்திரநாதன் என்னை அசட்டை செய்கிறான்" என்றார்.

நித்திரை கலைந்து எழுந்திருக்கும் போது என் விழிக் கடையில் நீர் வழிந்திருந்தது. புழுதியைக் கிளப்பிக் கொண்டே ரெயில் வண்டி சூறுவளிபோல் சென்றது. கரித் துகள் அடிக்கடி என் கண்களில் விழுந்து அரித்தது. வேறு புறமாக உட்கார்ந்துகொண்டு வெளியே பார்த்தேன். சுக்கிரனின் சுடர்மேனி கிழக்கே வான்முகட்டில் ஏகாந்தமாக ஆட்சி செலுத்தியது.

# அத்தியாயம் 13

அடுத்த வருஷமே மீண்டும் ஒரு முறை சந்திரநாதனைக் காணச் சென்றிருந்தேன். குறிப்பிடத் தகுந்தது ஒன்றும் நிகழவில்லை. சந்திரநாதன் தன் வழியிலேயே சென்றுகொண்டிருந்தான். அணைந்து அணைந்து ஒளிரும் அருந்ததித் தாரகையைப் போல் தன்னிலையிலேயே இருந்தான். மீராவிடம் தோன்றிய ஒருவித அழகு என்னை வியப்புறச் செய்தது. அது மீராவின் வெளி உருவமே. உள்ளத்துள் திகழும் ஒளி எவ்வளவு மங்கினாலும், வெளி வடிவின் பிரகாசம் மேலும் மேலும் ஜ்வலிக்கத் தொடங்கியது. இருபத்தைந்து அல்லது இருபத்தாறு வயதுடைய மீரா, பதினெட்டு வயது இளநங்கையாகவே தோற்றினாள்.

ஹீருவின் செய்தியைக் குறித்து நான் அக்கறை கொள்ளவில்லை. அவனுடைய ஜமீனைச் சேர்ந்த எங்கேயோ ஒரு காட்டகத்தில் அந்த நாடோடிச் சிறுக்கியுடன் சுகமாய் இல்லறம் நடத்துவதாகக் கேள்வி. அவனைப் பார்க்க வேண்டுமென்று இடையிடையே ஆசை கிளம்பும். ஆனால் அவன் இருக்குமிடம் ஸந்தாளிகள் வாழும் காட்டுப் பிரதேசம். அங்கே துஷ்டஜந்துக்களுக்குக் குறைவில்லை. போய் வருவதற்குத் தகுந்த சாதனமும் இல்லை. பல அசௌகரியங்கள் வழி முழுவதும் இருந்தன. என் மனத்துள்ளேயே அந்தத் தொம்பரவ மடந்தையை ஆசீர்வாதம் செய்துவிடுகிறேன்; தொலைவில் இருந்தபடியே அவளுடைய லாவண்யத்தைக் கண்டு சிதறிய

என் கண்களை ஆரத்தியாக அவளுக்குச் சமர்ப்பிக்கிறேன். அந்த மாயக்காரி கொடுத்து வைத்தவள். அவளுக்கு அடித்த சுக்கிரதசைதான் என்னே! அந்த வனக்கொடியினுடைய சக்திதான் என்னே! ஹீருவின் மனவிருக்ஷத்தை இலையாலும் பூவாலும் கவிந்துகொண்டாள்.

நிசாநாத பாபுவைப் பற்றிய ஸமாசாரமே தெரியவில்லை. மாமிக்குக் கடிதம் எழுதலாமென்றால் லஜ்ஜை என்னைத் தடுத்துவிடுகிறது. நிருவுக்கு ஒரு வரனைத் தேடிப்பிடிக்க என்னால் ஆகவில்லை. என்னால் இயலாதென்பதல்ல; எனக்குச் சிரத்தை உண்டாகவில்லை. சுயநலமே மனிதனுக்குரிய இயல்பு. சந்திரநாதனையும், நிசாநாத பாபுவையும் நான் ஏன் குறை கூறவேண்டும்? என்னிடத்தில் மட்டும் சுயநலம் குவிந்து இருக்கவில்லையா? நூல்கள் பல இயற்றியுள்ளேன். காகிதத்தின் மேல் மசியால் கிறுக்கும்போது இவை யாவும் மறந்துபோய்விடுகின்றன. துயரில் முடிவுறும் ஒரு கதையை எழுதி என் மனம் சற்று அலுத்து இருந்தது. வெளியே சென்று சில நாட்கள் சுத்தமான காற்றை உட்கொள்ளவேண்டுமென்ற ஆவல் பிறந்தது. ஹீருவையும், அவன் மணமகளையும் பார்த்துவிட்டு வரலாமா என்று யோசித்தேன். ஆனால் இவ்வளவு தொல்லை எதற்கென்று என் மனம் அஞ்சி நின்றுவிட்டது. கடைசியில் சந்திரநாதனும் மீராவும் இருக்கும் இடத்தை நோக்கிக் கிளம்பினேன்.

இந்தத் தடவை மீரா என்னைச் சந்தித்ததும், "ஏது இவ்வளவு சீக்கிரமாக வந்துவிட்டீர்கள்?" என்றாள்.

சிரித்துவிட்டு நான், "மீராதேவி, எங்கள் தேசத்தில் ஒரு வசனம் உண்டு. அருந்ததி நக்ஷத்திரம் எவனுடைய கண்ணுக்குத் தெரியாது போகிறதோ, ஆறு மாதத்திற்

கெல்லாம் அவனுக்கு மரணம் நிச்சயமென்று சொல்வார்கள். அருந்ததியைப் பார்க்கத்தான் நான் இங்கே வந்தது" என்றேன்.

மீரா என்னையே அசையாமல் நோக்கினுள். அதில் வியப்பின் குறி தென்பட்டதே தவிர முன்பெல்லாம் திகழ்ந்த உவகை கலந்திருக்கவில்லை. வினவுவது போன்ற ஒரு கண்ணேட்டத்தை மறந்துபோனதென்னே! மேலே பேச முடியாமல் நானும் சும்மா இருந்தேன். மீராவின் வாயிலிருந்து ஒரு கேள்வியும் பிறக்கவில்லை. சில நாழிகைக்கெல்லாம் நானே பேச்சை எடுத்தேன்.

"நான் உங்களுக்கு அருந்ததியென்று ஒரு பெயர் வைத்திருக்கிறேனே, தெரியுமா?"

மீரா மௌனத்தைக் கலைத்து, "எதற்காக வைத்தீர்கள்?" என்ருள்.

"ஆகாயத்தில் சஞ்சரிக்கும் ஸப்தரிஷி மண்டலத்தை என்றைக்காவது நீங்கள் கவனித்திருக்கிறீர்களா?" என்றேன்.

"கவனித்திருக்கிறேன்."

"நம்முடைய புராணங்கள் இந்தத் தாரா கணங்களைக் குறிப்பிடுகின்றன. இந்த ஏழு முனிவருள் வசிஷ்டர் ஒருவர். வசிஷ்டருடைய மனைவியான அருந்ததி சிறந்த பதிவ்ரதை. இந்த நக்ஷத்திர மண்டலத்துடன் அவளும் வலம் வருகிருள், சிறு ஒளிப்புள்ளிபோல். தன் கணவருடைய ஜோதி ரூபம் தன்னுடைய அபாரமான புண்ணிய வசத்தால் மழுங்கிவிடுமோ என்ற சங்கை மேலிட்டு, அவள் தன் மாசற்ற ஒளியை அடக்கிக்கொண்டு விட்டாள்" என்றேன்.

மீரா வெகு நேரம் மௌனமாயிருந்துவிட்டு அப்பால் என்னை நோக்கி, "ஆனால் என்னைப் பார்க்கவா வந்தீர்கள்?" என்றாள்.

"ஆம், மீரா; பதறாமல் அமைதியுடன் நீங்கள் வாழ்க்கை நடத்துவது எனக்குப் பிடித்திருக்கிறது. ரகசியம் நிரம்பியது உங்கள் வாழ்க்கை."

ஸ்வப்னம் காண்பவளைப் போல் மீரா எதிரே விரிந்திருந்த வனப்பிரதேசத்தை நோக்கினாள். நான் சொன்னதைத் தன் வாழ்வோடு ஒத்திட்டுப் பார்க்கிறா ளென்றே எனக்குப் பட்டது. சிறிது நேரம் சென்றதும் அவள், "நண்பரே, அதோ தெரிகிறதா நதி? அதன் கரையில் அடர்த்தியான காடு. இவ்விடத்திலிருந்து பார்ப்பதற்கு, அங்கே என்ன என்னவோ ரகசியங்கள் இருக்கும் போல் தோன்றவில்லையா? ஆனால் நான் அங்கே போயிருக்கிறேன். வனங்களுக்குரிய ரகசியமோ விசித்திரமோ ஒன்றையும் காணவில்லை. இங்குமங்கும் சிதறினாற் போல், வளர்ந்திருக்கும் சாலமரம், பலாச விருக்ஷம் இவற்றின் கூட்டந்தான் இருக்கிறது. பிரமாத மான காடன்று" என்றாள்.

நான் பதிலுக்கு, "ரகசியம் ஏதாவது இராமல் போகாதே, மீரா; அந்த எல்லையிலிருக்கும் ஒரு தெய்வம் உங்களையே கவனித்து வருகிறது. அது உங்களைக் கை தட்டி அழைக்கிறதே. அருகில் சென்றால் நமக்கு அது அகப்படாது. கண்ணுக்குத் தென்படாது. இதுவே அதன் ரகசியம். வேடிக்கை காட்டுவதுதான் அதன் ஸ்வபாவம். தீக் கொழுந்தெனச் சுடர்விடும் உங்கள் அழகான தேகத்துள், பனியில் உறைந்து போன இரவைப் போல்

சில்லிட்ட மனமொன்று இருப்பதை நான் அறிவேன். அதன் ஆழம் அளவிடற்கரிது" என்றேன்.

பலவாறான சிந்தனையில் மனத்தைச் சுழலவிட்டு, மீரா நிச்சப்தமாய் வீற்றிருந்தாள்.

மாசி மாதம் முதல் நாள். அன்று பிற்பகல் பெரும் தாரையாக ஒரு மழை பெய்தது. மழைமேகங்கள் இரண்டொன்று ஆகாயத்தில் தலை காட்டின. எதிரே, மேற்குத் திக்கில், பரேச்நாத் குன்றுகளின் தொடர் அந்திவானின் செக்கர் ஒளியில் பளிச்சென விளங்கியது. மாரி நீராடிய அதன் நீல மேனியைச் சுற்றிய அந்தக் கனகவர்ண அம்பரம் ஒரு புது விதக் காட்சியே. பெரிய வேடனொருவன் நீண்ட நாள் கழித்துச் சீதப் புனலில் குளித்துவிட்டு வெம்மை நீங்கி, செந்நிற ஆடையில் உல்லாஸமாக நிற்பது போல் இருந்தது, நெடுங்குன்றின் தோற்றம். தென் திசையில் காட்டகத்தே உள்ள மரங்கள் அனைத்தும் இலை உதிர்ந்து கவையாகிக் கொம்பாகி நின்றன. சூன்யமான அந்த வனபூமி வெளுப்பு வானை நோக்கியது. இதே வனத்தில் மறுபடியும் தருக்களில் இளந் தளிர் கொஞ்சும்; ராசியாக மலர்கள் முறுவல் செய்யும்; அதன் வறண்ட உடலில் மீண்டும் பிராண ஸாரம் பரவும்; கவைகள் தோறும் மலர்கள் மறைவில் இதழ் விரிக்கும். ஆனால் மீராவின் ரஸமற்ற வாழ்வில் இதே போல் மறுமலர்ச்சி தோன்றுமோ? ஒரு வேளை தோன்றாமல் போய்விடுமோ?

சட்டென மீரா என்னைப் பார்த்து, "என்ன சிந்தனையில் ஆழ்ந்துவிட்டீர்கள்?" என்று கேட்டாள்.

எதிர்ப் புறமாக விரலினால் சுட்டி, "மனோரம்மியமான காட்சி அதோ தெரிகிறது பார். அந்த மாயையில் என் மனம் கட்டுண்டது மீரா!" என்றேன்.

"முடியுமானல் ஒரு வஸந்த காலம் இந்தப் பக்கம் வாருங்கள். சால பலாச மதூக விருக்ஷங்கள் கண் கொள்ளாச் சிறப்புடன் இருக்கும். அந்தக் காட்சியை வர்ணிக்க முடியாது. அருமையான தோற்றம். எந்தப் பக்கம் திரும்பினுலும் செந்நிறம் அள்ளித் தெளித் திருக்கும். அந்த ஸமயத்தில் வீட்டிலிருக்க எனக்குப் பிடிக்காது. காட்டினுட் சென்று நான் யதேச்சையாய்த் திரிவேன்."

"இன்றே போனல் என்ன? சற்று உலாவிவிட்டு வரலாமே; எழுந்திருங்கள்" என்று நான் அவளைத் தூண்டினேன்.

"வேண்டாம். இன்றைக்கு என்னவோ என் மனம் சரியாக இல்லை. உலாவப் போவதில் எனக்கு வெறுப்புத் தட்டுகிறது" என்ருள்.

சந்திரநாதன் களைத்துப் போய் அங்கே தோன்றி ஞன். ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக்கொண்டு, "நரூ, நீ வந்திருக்கிருயென்று எனக்குச் சமாசாரம் எட்டி யது. உடனே வந்து பார்க்கலாமென்ருல், வேலை நெருக்கி யது என்னை. இரும்பு ஆலை யொன்றை ஆரம்பித்து விட்டேன். வா, உனக்கு அதையெல்லாம் காட்டுகிறேன். மீரா, சீக்கிரமாய் எங்கள் இரண்டு பேருக்கும் டீ போட்டுக் கொடு" என்ருன்.

வட திசையில் இருக்கும் வயல்வெளிகளில் என் னுடைய பார்வை திரிந்துகொண்டிருந்தது. மேட்டி லிருந்து படிப்படியாகத் தாழ்ந்த பயிர்நிலங்கள். யவதானி யம் நன்ருக முதிர்ந்திருந்தது. கதிர்கள் யாவும் பொறை தாங்காமல் தரையில் சாய்ந்துகிடந்தன.

அவற்றின் ஜீவ வேகம் ஒடுங்கிவிட்டது. வித்தி லிருந்துதான் மறு பிறப்பு. மீராவின் ஜீவியதசையும், இந்தத் தானியக் கதிரைப் போல் முடிவுறுமோ?—இவ் வாறு அஸம்பாவிதமான எண்ணங்கள் மூண்டு என் மனம் ஏதோ வேதனையினால் துடித்தது. தானியங்களைக் குவிக் கும் குடியானவனைப் போல் சந்திரநாதனும் அலப்பி, கசக்கி, மீராவின் வாழ்வை அறுவடை செய்து தன்னை நிரப்பிக்கொண்டான். மறு ஜன்மத்திலாவது அவள் சுகமாக இருக்கவேண்டுமென்று நான் உள்ளூறப் பிரார்த் தித்தேன்.

சந்திரநாதன் தனக்குள்ளேயே சில திட்டங்களை வகுத்துக்கொண்டிருந்தான்: "மூன்று சதுர மைல் என் னுடைய தொழிற் சாலையின் விஸ்தீர்ணம். இந்த இரும்பு ஆலை பூர்த்தியாகிவிட்டால், சுமாராக—"

திடீரென அவனுக்கென்னவோ குஷி கிளம்பி விட்டது. நான் வேறு எங்கேயோ என் கவனத்தைச் செலுத்தியதனால், அவன் பேசியது என் செவியில் விழவே இல்லை. "எதைப் பற்றி எண்ணமிடுகிறாய்?" என்று என்னைக் கேட்டான்.

சிரிப்பை வருவித்துக்கொண்டு நான், "எதைப் பற்றியும் இல்லை" என்றேன்.

"இந்தத் தடவை உனக்கு அடையாளமே தெரியாது. என்னுடைய தொழிற்சாலை எவ்வளவோ மாறிவிட்டதே. நான் கற்பனையில் கண்டவை யாவும் நீ பிரத்தியட்சமாகக் காணலாம்" என்றான்.

* * *

இதற்கப்புறம் மூன்று வருஷம் சந்திரநாதனைப் பற்றித் தகவலே கிடைக்கவில்லை. எனக்கு வேலையின் நிர்ப்பந்தம் அதிகமாக இருக்கவே அந்தப் பக்கம் என் கவனம் செல்லவில்லை. தினசரிப் பத்திரிகையொன்றில் உதவி ஆசிரியராக அமர்ந்தேன். ஒரு சமயம் அதன் வாயிலாகச் சந்திரநாதனுடைய தொழிற்சாலையைப் பற்றி எனக்குச் சில விஷயங்கள் தெரியவந்தன. இரண்டாவது வருஷம் எங்கள் பத்திரிகையில் அவனுடைய தொழிற்சாலையான 'சந்திரபுரா தொழிற் சாலை'யின் வர்ணனை போட்டோ படங்களுடன் பிரசுரிக்கப்பட்டது. அவனுடைய தொழிற்சாலை உன்னத நிலைக்கு வந்துவிட்டதை உணர்ந்தேன். இதை உத்தேசித்து, சந்திரநாதனைப் பாராட்ட நான் அவனுக்கு ஒரு கடிதம் எழுதினேன். அதோடு நிற்காமல் சந்திரபுரா தொழிற்சாலையைச் சிருஷ்டித்தவனுடைய வாழ்க்கை வரலாற்றை என்னுடைய பத்திரிகையில் வெளியிட அனுமதியும் கேட்டிருந்தேன்.

இதற்குப் பதிலாக அவன் இரண்டொரு வரிகளே வரைந்திருந்தான். "மிகவும் வந்தனம். வேலையின் நெருக்கத்தால் எனக்கு ஓய்வு கிடைப்பதில்லை. உன் பத்திரிகையில் சந்திரபுரா தொழிற்சாலையின் விவரங்கள் வந்திருப்பதைப் பார்த்தேன். ஸந்தோஷம். ஆனால் நீ எழுதியிருக்கும் விஷயங்களில் சில தவறுகள் இருக்கின்றன. என் சரிதையை வெளியிடுவதற்கு இன்னும் காலம் வரவில்லை. இப்போதுதானே அது ஆரம்பமாகி இருக்கிறது? சமீபத்தில் நீ எழுதிய புஸ்தகத்தை வாங்கினேன். அதை இன்னும் படித்து முடிக்கவில்லை. ஒழிவு இல்லை."

இவ்வளவே இருந்தது. மீராவைப் பற்றி ஒரு குறிப்பும் இல்லை. அவளுடைய நிலைமையை நான் பல விதமாகக் கற்பனை செய்துகொண்டேன். என்னால் இருக்க முடியவில்லை. மீரா, அவள் மகன் ஆகியவர்களுடைய க்ஷேம ஸமாசாரத்தையும் தெரிவிக்கும்படி சந்திரநாதனுக்கு எழுதினேன். பதில் கிடைத்தது: இருக்கிறபடிதான் இருக்கிறாள். குமார கிஷோர் அந்த இடத்தில் இல்லை. அவனை ஒரு 'போர்டிங் ஸ்கூலி'ல் சேர்த்துவிட்டார்கள். அவனும் க்ஷேமம்.

## அத்தியாயம் 14

ஒரு வருஷத்திற்குப் பின்பு பத்திரிகை விஷயமாக அலாஹாபாத் சென்றிருந்தேன். 'தூபான் மெயிலி'ல் திரும்பி வந்துகொண் டிருந்தேன். புயற் காற்றைப் போல் ரெயில் வண்டி சென்றது. இதற்கு இந்த விசித்திரமான பெயரைச் சூட்டிய ஆஸாமியின் புத்தியைப் புகழ வேண்டியதுதான். ஹாவ்ராவிலிருந்து பஞ்சாப் வரை இந்தப் பெயர் வழங்கி வருகிறது. இது ஸாதாரண மான கூலி வைத்த பெயராய் இருக்கலாம்.

வண்டியில் அமர்ந்ததும் நான் என் பத்திரிகைக் காரியங்களைப் பரப்பிக்கொண்டேன். மறுநாள் வெளியாவ தற்குச் சில ஜரூரான அறிக்கைகளைக் கவனிக்க வேண்டி யிருந்தது. தொழில் மேல் சென்ற என் மனம், இருமருங் கிலும் வேகமாக ஓடும் வெளிக் காட்சிகளைக் கண்டு களிப்புறவில்லை. ஏதோ புரியாத பாஷையில் உள்ள ஒரு புஸ்தகத்தின் ஏடுகள் ஒவ்வொன்றாக அலை காற்றில் பிரிந்து உடனே மூடிக்கொள்வது போல் இருந்தது. மேகம், மலை, நதி, வயல்வெளி, மரம், நகரம், நாடு, பாதை ஓரமாகச் செல்லும் வழிப்போக்கன், பிறந்த மேனியாக நின்று ரெயில் வண்டியை அதிசயமாகப் பார்க்கும் ஆயச் சிறுவன், முட்டாக்கு விலகியதால் வெட்கம் கொள்ளும் நாட்டுப்புற மடந்தை, மிரண்டு ஓடும் ஆட்டுமந்தை, குட்டைகளில் ஊறும் எருமை, தந்திக்கம்பியில் வரிசையாக உட்கார்ந்து சீழ்க்கையடிக்கும் வாலாட்டிக் குருவிகள்—

இவை யாவும் பொருளற்ற சித்திரங்களாகவே மட மடவென்று தோன்றி மறைந்தன. வெறி பிடித்தாற் போல் வண்டி புதுப் புதுத் தேசங்களைக் கடந்து உருண்டு சென்றது. நதி மேலுள்ள பாலங்களில் ஓடும்போது வண்டி யின் பேரிரைச்சலால் என் சிந்தனை நிலைகுலையும். பாலத் தைக் கடந்ததும் மண்மேல் செல்வதால் ஓசை மட்டுப் பட்டதும் என் சிந்தனையும் அதன் ஆழத்தில் இறங்கி விடும்.

திடீரெனக் குப்பென்று ஒரு வாசனை வீசவே என் மனம் சலனப்பட்டது. தொழிலில் ஈடுபட்ட என் சித்தம் சிதைவுற்றது. எழுந்து பார்க்கையில் வண்டி ஒரு வனத்தினூடே சென்றுகொண்டிருந்தது. ரெயில் பாதை யின் இருபுறமும் ரத்தம் போல் சிவந்திருந்தது அரண்யம். 'பங்குனி மாசம், வஸந்த காலம் அல்லவா?' எனக்கு உடனே கவனம் வந்தது. சால விருக்ஷங்களின் கவை களில் செந்தளிர் தோன்றியது. சில கிளைகளில் புஷ்பங் களும் தலைகாட்டின. அந்த அற்புதங்களை மயல்கொண்டு கவனிக்கலானேன். வண்டி ஹஜாரீபாக் ரோட் என்ற இடத்தில் வந்து நின்றது. பிறகு புறப்பட்டது. அரண் யத்தின் செறிவு வரவரக் குறைய ஆரம்பித்தது. ஆனால் அதன் எழில் மட்டும் போகப் போகக் கண்களைப் பின்னும் கவர்ந்தது. காட்டின் செந்நிறம் அதிகச் சிவப்பாகியது. இலையில்லாத மரக்கிளைகளில் கொத்துக் கொத்தாக மலர்கள் கனலெனத் தோன்றின.

தானுபாத் நிலக்கரி வயல் ஓரமாகவே இருப்புப்பாதை வேகமாகப் பின்னால் மறைந்தது. பெரிய தொழிற்சாலை ஒன்று தென்பட்டது. வண்டியிலிருந்தே அதன் 'டின் ஷெட்டி'ல் 'சந்திரபுரா தொழிற்சாலை' என்று பெரிய

அக்ஷர வரிசையை நான் படித்தேன். சாளரத்திற்கு வெளியே தலையை நீட்டி நன்றாக இடங்களைப் பார்த்துக் கொண்டேன். நிமிஷ நேரத்திற்கெல்லாம், அந்த இடம் பின்னடைந்தது. எதிரே சால விருக்ஷங்களிலும், பலாச விருக்ஷங்களிலும் செவேலென்று வஸந்த சோபை குலாவியது. மீரா இந்த மாதிரி ஓர் இனிய தினத்தில் என்னை வரும்படிக் கூறியிருந்தாள். அது என் நினைவுக்கு வந்தது. வஸந்த காலத்தின் அழகைப் பருக அவள் என்னை அழைத்தாள். வண்டி அஸென்ஸாலை அடைந்தது. அங்கே இறங்கி வந்த வழியே திரும்பினேன். என்னுள் அநுராகத்தைக் கிளப்பும் இந்த வஸந்த ருதுவையும், மீராவைப் போன்ற ரூபவதியின் அழைப்பையும் நிராகரிக்க என்னால் இயலவில்லை.

சந்திரபுராவுக்கு வந்ததும் சந்திரநாதனே என் கண்முன் எங்கும் எழும்பிவந்தான். புகையைக் கக்கும் குழாய்கள் மேகத்தை முட்டின. நிலக்கரியின் கல்மஷம் நிரம்பிய காற்று; கறுப்பேறிய ஆகாயம். சந்திரநாதனுடைய வன்மையும் அவனுக்குள்ள மகத்தான ஆசையும் கரம்பு நிலத்தில் யந்திரங்களாகவும் கட்டிடங்களாகவும் உருவெடுத்தன. முடிவற்றது அதன் சித்திரம். ஒரு மூலையிலிருந்து மற்றொரு மூலைக்கு அதன் சாயம் தீண்டியிருந்தது. இரண்டு மைல், நாலு மைல், பத்து மைல். பத்து வருஷத்திற் கெல்லாம் இவ்வளவு தூரம் தான் ஆசைப்பட்டது நிறைவேறு மென்று அவன் நினைத்திருப்பானா? அவனுடைய அவா இந்த உலகத்தையே அணைத்து ஒரு பெரிய யந்திர லோகமாகவே மாற்றி விடுகிறதென்று வைத்துக் கொள்வோம். அதற்கு மேல்? மேற்கொண்டு இந்த ஆசைக் கனல் எவ்வளவு தூரம்

எரியுமோ? இந்தச் சிக்கலான கேள்வியைச் சந்திரநாத னுக்கே போட்டு என்ன பதில் தருகிறான் என்பதை அறிய எனக்கு ஆவல் மூண்டது. நான் இப்படிக் கேட்பதைப் பார்த்து இடியிடியென்று தான் நகைப்பான்.

அதற்கு மேல், என் கேள்விக்கு உகந்த உத்தரம் என்றைக்குமே கிடைக்காது. ஏனென்றால், ஆசைக்கோர் அளவில்லை.

சந்திரபுராவுக்குச் செல்லும் ரஸ்தா, முன் தடவை நான் பார்த்தபோது இருந்ததை விட, அகலமாகவும், நேர்த்தியாகவும் பாவப்பட்டிருந்தது. வழிநெடுகப் பங்களாக்களின் வரிசை. ஓரிடத்தில் 'மானேஜர்' என்று விலாசம் பொறிக்கப்பெற்றிருந்தது. மற்றொரு வாச ஸ்தலத்தில் 'எஞ்ஜினியர்' குடியிருந்தார். இந்த மாதிரி ஆலை உத்தியோகஸ்தர்களுக்குத் தனித் தனியான விடுதிகள். இன்னும் சற்றுத் தொலைவில் நடுத்தர உத்தி யோகஸ்தர்கள் வசிக்கும் பகுதி. அப்பால் கடைத்தெரு; பலவிதமான சரக்குகள் விற்பனை செய்யும் கடைகள். அவற்றைக் கடந்தால் ஆலைக்குச் செல்லும் ரெயில் பாதை. ஒரு தகட்டில் அதன் எச்சரிக்கைக் குறிப்பு. அதையும் தாண்டினால் தொழிலாளிகளின் சிரேணி. கற்களைக் குடைந்தெடுத்த பெரிய குளம்; அதில் கழுத்தளவு ஜலம் ததும்பிக்கொண்டிருந்தது. ஆலையைச் சுற்றி வசிப்பவர் கள் அவ்வளவு பேருக்கும் அதுவே குடி தண்ணீர். ஆலையின் உபயோகத்திற்கு அந்த நீர்நிலை ஒன்றே இருந்தது. எந்தத் திசை நோக்கினாலும் இலையடர்ந்த பசுமையான மரங்கள். ஒரு மரத்தின் நிழலில் தங்கி நான் சுற்றுப்புறம் இலங்கும் காட்சிகளைக் கண்டு அதிசயித் தேன். என் தலைக்கு மேல் வண்டினம் மூரல்வதைக்

கேட்டு நான் அண்ணாந்து நோக்கினேன். மரத்தில் படர்ந்திருந்த குலஞ்சக் கொடியில் ஒரே பூவாகப் பூத்திருந்தது. தொழில் நடக்கும் இடத்திற்குச் செல்ல எனக்கு இஷ்டமில்லை. மேலே நடக்கலானேன். அறிமுகமான அந்த மாளிகை வாயிலுள் முன்போல் நுழைய முடியவில்லை. ஒரு கூர்க்கா பாராக்காரன் எனக்குத் தடையாக நின்றான். என் விலாசச் சீட்டைக் கேட்டான். சிரித்துக் கொண்டே அதை அவனிடம் கொடுத்தேன்.

சிறிது நேரத்திற்கெல்லாம், மீராவே வாயிலருகே வந்தாள். அவளைக் கண்டதும், "மீராதேவி, வஸந்த காலம் வந்துவிட்டதே. அதன் சோலையை ஒருதரம் பார்த்துவிட்டுப் போகும்படி என்னை அழைத்திருந்தீர்கள். அதற்காகவே வந்திருக்கிறேன்" என்றேன்.

மிகுதியான வார்த்தையை முடிக்கவிடாமல், உவப்பின் புளகம் தோன்றக் குதூகலச் சிரிப்புடன், "நண்பரே" என்றாள்.

அஸாதாரணமான ஒளி அவள் கண்களில் விளையாடிற்று. தேக காந்தி மாசற்ற மணிபோல் சுடர்விட்டது. மெல்லிய சிறடிகள் வைத்து என்னை எதிர்நோக்கி வந்தாள். என் இரு கைகளையும் பற்றிக்கொண்டு அவளுடைய தாய்மொழியில், "ஏழையின் குடிலில் தங்கள் பாததூளி பட்டால் நான் பாக்கியம் செய்தவளாவேன்" என்றாள்.

"இதென்ன, வங்காள பாஷையை விட்டொழித்து எத்தனை நாளாகிறது?" என்றேன்.

மீரா விம்மிதம் கொண்டு என்னையே ஊன்றிக் கவனித்தாள்.

"மீராதேவி!" என்று நான் ஒரு தரம் கூப்பிட்டேன். மங்கிய சிரிப்புடன் அவள், இந்தத் தடவை ஸ்பஷ்ட

மான வங்காளி மொழியில், "என்னவோ கவனமாய் இருந்துவிட்டேன். எங்கள் ஊரைப் பற்றிய நினைவு திடீரென வந்தது. எங்கள் ஊரைச் சேர்ந்த பால்ய சிநேகிதரென்றே உங்களை எண்ணிக்கொண்டேன்" என்றாள்.

மேலே அவள் தனக்கு இயல்பான சாந்தமான குரலிலேயே, "வாருங்கள், உள்ளே போகலாம். நீங்கள் ஆகாரம் பண்ணி எத்தனை நாழிகை ஆகிறதோ?" என்றாள்.

"கவனமிருக்கிறதா, மீரா? ஐந்து வருஷங்களுக்கு முன்னே நீ என்னை அழைத்தாயே, ஒருதரம் வந்து இந்த வஸந்த காலத்தின் அழகைப் பார்த்து அனுபவிக்கும்படி. அந்தச் சந்தர்ப்பம் எங்கே நழுவிவிடுமோ என்று பயந்து வேகமாக வந்தேன். ரொம்ப நாழிகை ஆகிவிட்டது" என்றேன்.

ஆந்தரிகமான அன்பினால் நான் அவளை 'நீ' என்றே சொல்லிவிட்டேன்.

"அதற்கென்ன? இருட்டியபிறகே இங்கே ஸந்த்யாமணி அளவற்றுப் பூக்கும். அது ஒரு கண்கொள்ளாக் காட்சி. நீ அவசியம் பார்க்கவேண்டியதே" என்றாள்.

அவளும் என்னை, 'நீ' என்றே அழைத்துவிட்டாள். என் முன்னால் பஞ்சு போன்ற அவள் மெல்லிய பாதம் வழி காட்டிச் சென்றது.

நான் ஸ்நானம் செய்துவிட்டு யாத்திரையின் களைப்புத் தீர்ந்து அறையினுள் நுழைந்தேன். எனக்காக மீரா சாப்பாடு தயாராக வைத்துக்கொண்டிருந்தாள். அவளை மீண்டும் கவனித்தபோது, அவள் கண்களில் ஏதோ கனவு காண்பது போன்ற ஒரு பாவனை தோற்றியது. அவள் தனக்குள் மெதுவாகச் சிரித்துக்கொண்டாள்.

"திடீரென்று சிரிப்பானேன்? என்ன அதிசயம் கண்டாய்?" என்றேன்.

"ஒன்றுமில்லை. பதேபூர் ஸிக்ரியில் நடந்த ஒரு ஸம்பவத்தை நினைத்துக்கொண்டேன். வெளியூர் ஆண்டி ஒருவன் தவறு செய்தவனைப் போல் வந்து நின்றான். வாயிலிருந்து வார்த்தையே வரவில்லை—" என்றதும் அவள் பகபகவென்று சிரித்தாள். இந்த மாதிரி ஒரு குதூகலச் சிரிப்பை அவள் சிரித்து நான் பார்த்ததே இல்லை. அவள் தன் பேச்சைத் தொடர்ந்து, "அந்த ஆண்டியின் விடாப்பிடிதான் என்ன! அற்பமான ஒரு கழி; அதற்கு, ஆ...." என்றாள்.

உவகையின் பிரகாசம் மாறி அவள் வதனத்தில் வியப்பும் சிரத்தையும் கலந்த ஒரு பாவம் வெளிப்பட்டது. தியானத்தில் லயித்தவர்களின் தூய அழகு நிலவியது. மீராவைச் சிறிது நேரம் இமைக்காமல் பார்த்தேன். 'இதென்ன! மீரா தன் நினைவில் இருக்கிறாளா?' என்று சந்தேகம் கொண்டேன். "பையன் எப்படி இருக்கிறான்? குமார் கிஷோர் ஸௌக்கியந்தானே?" என்று விசாரித்தேன்.

மீரா என் முகத்தையே கூர்ந்து கவனித்து, "ஜிஞ்ஜிரைப் பற்றித்தானே கேட்கிறீர்கள்? அவனா... ஸௌக்கியமாகவே இருக்கிறான். பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிட்டேன்" என்றாள்.

நான் திடுக்கிட்டு, "ஆனால் புது ஆஸாமி வந்திருக்கிறான்போல் இருக்கிறது! நிஜந்தானே?" என்றேன்.

மீரா என் கருத்தைப் புரிந்துகொண்டு சிரித்து விட்டாள். "அவனைப் பார்க்கிறீர்களா? இந்தப் பாப்பாவின் மேல்தான் எனக்கு உயிர். இவன்தான் என்னுடைய

குமார கிஷோர். என்றைக்குமே வாடாது தளிர் போன்ற இவனது அழகு...வந்து பார்க்கிறீர்களா?" என்றாள்.

குதித்தெழுந்தாள். முகத்தில் ஒரு தெளிவு தோன்றுவதைக் கொண்டு, பழைய வேதனை யாவும் அவள் உள்ளத்திலிருந்து மறைந்துவிட்டன என்றே எண்ணினேன். வெகு நாட்களுக்கு முன்பு நான் பார்த்த காட்சி என் கண்முன் வந்தது: வயலிடை அறுவடையான தானியக் கதிர். அதன் ஆயுள் முடிந்துவிட்டது. வித்திநின்று அது மறு பிறப்பு எடுக்குமென்ற நிச்சயம் எனக்குள் இருந்தது.

படுதாவை விலக்கிக்கொண்டு மீரா உள்ளே நுழைந்தாள். ரோஜா நிறமான ஒரு சிசுவை மடியில் எடுத்து வைத்துக் கொண்டாள். மாம்பழ வாயும், நீலமணிக் கண்களும் உடைய அபூர்வமான குழந்தை; குனிந்து பார்த்தேன். நான் கண்டதென்ன! தசையும் ரத்தமும் உள்ள குழந்தை யன்று. ஸெல்லுலாயிட் பொம்மை! "இது பெரிசே ஆகாது. இதே அளவில் இருக்கும். நான் எந்தக் காலமும் எடுத்துச் சீராட்டுவதற்குத் தகுதியான குழந்தை யன்றோ இது?" என்றாள் மீரா. மள மளவென்று என் கண்களிலிருந்து நீர் வடிந்தது. உரக்க அழ என்னால் முடியவில்லை.

மீரா நாற்காலியில் அமர்ந்தபடியே சிரித்தாள். "உங்கள் கண்ணில் கூடவா ஜலம்? இளம் வயதின் கவனம் வந்துவிட்டது. பொம்மையை வைத்துக்கொண்டு விளையாட எனக்கு ஆசையாய் இருக்கிறது" என்றாள்.

நான் வாயடைத்து நின்றேன். 'அந்த மீராவா இவள்?' என்று எண்ணி வருந்தினேன்.

"சீக்கிரம் சாப்பிடுங்கள். இன்று நாம் உலாவப் போகலாம். நான் சிங்காரித்துக்கொண்டு வருகிறேன்" என்று முல்லைமுறுவல் செய்து கூறினாள். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் மீரா வெளியே வந்தாள். அரையில் செந்நிற ஆடை, விலையுயர்ந்த காசிப்பட்டு, புருவ மத்தியில் ஸிந்தூரப் பொட்டு. மெய்ம்மறந்து அவளையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"காடெங்கும் வஸந்தத்தின் அழகு பூத்து விளங்குகிறது. அதற்கு இணையாக நானும் இந்த நெருப்பு வர்ணமான சேலையை அணிந்தேன். ஆனால் அந்த ஆண்டி மட்டும் காணப்படவில்லையே!" என்றாள்.

சிந்தையில் மூழ்கியவளாய் நின்றாள் மீரா.

"புறப்படுங்கள்" என்றேன்.

உடம்பு சிலிர்த்து, "ஆம், புறப்படுங்கள்" என்றாள்.

# அத்தியாயம் 15

**ப**ரந்த வெளியில் மனிதர் நடந்து தேய்ந்த கொடி வழி. அதன் இருபுறமும் நெருக்கமில்லாத சால பலாச மதூக (இருப்பை) மரங்கள். சாலமரமெல்லாம் செந்தளிர் தளிர்த்திருந்தது. பலாசங்கிளைகளில் நெருப்பென மலர்கள் தோன்றின. இலையின்றி இருக்கும் மதூக விருக்ஷங்களின் நுனிக் கவைகளில் தோறும் பூங்கொத்துகள். இரண்டொரு சாலமரங்கள் மலர் ஈன்றன. மதூக புஷ்பத்தின் நெடியான வாஸனை கமழும்போது இடையிடையே சாலமலரின் இனிய மணமும் மெல்லென வீசியது. எதிரே தெரியும் வனத்தில், தொலைவில் இருப்பதனால் மரங்களெல்லாம் நெருக்கியிருப்பது போன்ற தோற்றம். பற்றி எரிவது போல் மரங்களெல்லாம் பூவினாற் கவின் பெற்றிருந்தன. கிளைகள் காற்றில் அசையும்போது அக்கினியின் ஜ்வாலைதானோ என்ற பிரமை உண்டாயிற்று. வழியில் ஸந்தாளிகள் வசிக்கும் ஒரு சிறு கிராமம். சின்னஞ்சிறு குடில்கள் தனிச் சித்திரங்கள் போல் மனத்தைக் கவர்ந்தன. கொஞ்சநேரம் அவற்றை விட்டு என் கண் பிரிய மறுத்தது. நாலு புறமும் களிமண் பூசிய வாசல் சிமட்டியால் ஆன தரைபோல இருந்தது. சாணக்குழம்பால் செதும்ப மெழுகப்பட்டிருந்தது.

ஸந்தாளிகளின் சிற்றூரைக் கடந்து சென்றோம். காடு வர வர அடர்த்தியாகிக்கொண்டே வந்தது. எங்கே பார்த்தாலும் சால பலாசங்களின் கன்றுகள். செல்லச்

செல்லப் பாறை நிலம் ஆரம்பித்தது. யாரோ வேணு மென்றே படிகள் வெட்டி வைத்ததுபோல் உயர்ந்து கொண்டே வந்தது.

"ஓ, அதோ பாருங்கள்! ரத்தம் வடிகிறது" என்றாள்.

உண்மையில் ஒரு பலாச மரத்தின் அடித்தண்டு ரத்த மயமாக இருந்தது. மரத்தின் உடலிலிருந்து இப்படி ரத்தம் வழியுமா என்ன?

"ரத்தமல்ல; மரப் பிசின்" என்றேன்.

"இல்லே, இல்லே. மரத்தின் ரத்தம்" என்றாள்.

பிசின் பெருகிவந்த இடத்தைத் தொட்டுப் பார்த் தேன். அந்த இடத்தில் மரம் வெட்டுப்பட்டிருந்தது. பிசினும் கட்டிப் போயிருந்தது. மீராவும் தடவிப் பார்த் தாள். திடீரென அவளுக்கு என்ன தோன்றியதோ, கை நகத்தால் பிசினைக் கிள்ளி எடுக்க ஆரம்பித்தாள்.

"அது எதற்கு?" என்று கேட்டேன்.

அவள் பிசினைச் சுறண்டிக் கொண்டே, "நெற்றியில் பொட்டு இட்டுக் கொள்ளக் குங்குமம் இதைப்போல் சிவப்பாக இல்லேயே" என்றாள்.

கிடைத்த பிசினை, விலேயுயர்ந்த தன் சேலேத் தலேப்பின் நுனியில் முடி போட்டுக்கொண்டாள்.

"பெண்களின் போக்கே விநோதமானது" என்று சொல்லிச் சிரித்தேன்.

"எப்படி?" என்றாள்.

"உன் புடைவையின் ஓரக் கறைக்கு ஈடாகுமா இந்தப் பலாசம் பிசினுக்குள்ள விலே?" என்றேன்.

"பகட்டான தோற்றத்தைப் பார்த்துப் பார்த்துத் தான் நான் ஏமாந்து வருகிறேன் வெகு நாளாக. மதிப்பிடு

வதற்கான அவகாசம் எனக்கு என்றுமே கிடைக்கவில்லை" என்றாள். அவளுடைய பதிலைக் கேட்டதும் சற்று ஆறுதலுற்றேன். மீராவின் பேச்சில் இயற்கைக்கு முரணாக எதுவும் தொனிக்கவில்லை.

ஆற்றங்கரையை அடைந்தோம். என் உள்ளத்தில் இன்பத் திரை எழுந்தது. அபூர்வமாயிருந்தது நதியின் வனப்பு! அக்கரையில் ஒரு குன்று தன் மார்போடு நதியைக் கட்டி அணைக்கும் விசித்திரம். குன்றத்திலிருந்து உருண்டுவரும் ஒரு சிற்றாறு பெரிய ஆற்றின் இடையில் எக்கரை உண்டுபண்ணியது. ஆனால் எந்த இடைஞ்சலுக்கும் பயப்படாமல், தன்னை இறுகத் தழுவும் குன்றையும் ஊடறுத்துச் சென்றது. இரு பக்கமும் கரை ஒரே செங்குத்து; அதோடு பாறை. இடுக்குகளிலிருந்து கணக்கற்ற குத்துச் செடிகள் முளைத்திருந்தன. நீரின் விசையினால் அவை வளைந்து போய், காம்புகள் புஷ்ப பாரம் தாங்காமல் தொங்குவதைப் பார்த்தால், குன்றாகிய கேள்வன் ஆறாகிய தன் காதலியின் கூந்தலில் பூவைச் செருக வருவதுபோலிருந்தது. இளவேனிலில் நீர் வற்றிய நதிக்கரையிலிருக்கும் குன்றும் வறண்டு சுருங்கியே இருந்தது. பாறை அடுக்கிய பெரிய முற்றம் போலவே இருந்தது ஆற்றிடைக்குறை. சலசலவென்று மட்டும் எங்கோ ஒருவித ஓசை நிர்மானுஷ்யமான அந்த நதிப் பிராந்தியத்தையும் வனபூமியையும் துயிலிலிருந்து எழுப்பியது.

மீராவின் பக்கமாகத் திரும்பி, "அது என்ன சப்தம்?" என்றேன். தாழ்ந்திருக்கும் ஒரு சாலமரக் கிளையிலிருந்து தளிரைக் கொய்து தன் குழலில் அணிந்து

கொண்டே அவள், "போய்ப் பார்க்கலாம்; அது நீர் வீழ்ச்சியின் ஓசைதான்" என்றாள்.

மான் துள்ளுவது போலப் பாறையிலிருந்து மற்றொரு பாறைக்குத் தாவி அவள் ஆற்றின் நடுவே இறங்கினாள். நானும் கூடவே இறங்கினேன். நதியின் மத்தியிலிருந்து பார்த்தபோது அது வேறு தோற்றம் கொண்டது. எதிரே ஒரே பாறை. சுற்றிலும் எங்கும் பாறையே. பாறைகள், பல வெடிப்புக்கள்; கோணல் மாணலானவை; சில ஒழுங்கானவை. ஆறும் மலையும் துவந்துவ யுத்தம் செய்ததன் அடையாளங்கள். சற்றுச் சமீபமாக வந்து பார்த்தோம். ஓரிடத்தில் பாறை ஆழமாக விட்டிருந்தது. நீரோட்டம் சலசலவென்று அந்தப் பாதாளத்திலிருந்து வெளியே பெருகிவந்து குன்றின் ஒரு புறம் உள்ள சிறிய சுனையில் போய் விழுந்தது. அந்த இடத்திலிருந்து மற்றொரு பாறையின் உள்ளத்தைப் பிளந்து கொண்டு கீழே ஒரு மடுவில் கலந்தது. அங்கே ஒரு நதி உற்பத்தியாயிற்று. இவ்வாறு ஒவ்வொரு பாறையின் சடலத்துள்ளும் பாய்ந்து பாய்ந்து வெளிப் பட்டு அது தன் வழியே சென்றது.

"இப்படி வாருங்கள்" என்று மீரா கூப்பிட்டாள்.

சுனையின் ஓரத்தில் மீரா காலைத் தொங்கவிட்டுக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் கவனித்தேன். அந்த விசித்திரமான நிலைக்களனின் மத்தியில் மீரா அழகுத் தெய்வமாகவே தோற்றினாள். அந்தக் காட்சியை நான் ஒருபோதும் மறவேன். சுனையிலிருந்து துள்ளிக் கீழே சரியும் ஜலராசி நாலு பக்கமும் பனித்திரைபோல் திவலை யைச் சிதறியது. சூரியனின் தாழ்ந்த கிரணங்கள் பட்டு அவை வானவில்லின் வர்ணங்களை மீராவின் மீது தூவின.

அவள் பின்னல் இளவேனிலின் பரிசத்தால் சிலிர்க்கும் வனப் பிரதேசம். ரகஸ்யம் நிரம்பிய மீராவின் ஸ்வய ரூபம் அன்று வெளிப்பட்டது. நான் சில்பியாகவோ ஓவியனாகவோ இல்லையே என்று என்ன காரணத்தாலோ குறைபட்டுக் கொண்டேன். மீராவின் பக்கத்தில் போய் அமர்ந்தேன். நீர்வீழ்ச்சியின் மேல் மீராவின் கவனம் பதிந்திருந்தது. அதன் இன்னிசையில் அவள் மனம் ஆழ்ந்திருந்தது. நானும் இயற்கையின் எழிலை அநுப விக்கும் இன்பத்தில் மூழ்கி இருந்தேன்.

"அருவி குதித்து ஓடுகிறது, பாருங்கள்! அதன் சிலம்பொலி கேட்கிறதா? அந்தச் சந்தத்தில் என்ன தாளக் கட்டு! தாளம் போடுகிறேன். சேருகிறதா, பார்ப் போம்!" என்றதும் கைகளைத் தட்டி விசிறினாள். தாளத் தின் மறு ஆவர்த்தத்திற்காக எதிர் நோக்கினேன்.

"சரியாக அமையாது. இப்படியே ஒரே லயத்தில் தான் இந்தப் பிரவாகத்தின் ஸங்கீதம் இரவு பகல் நம் செவியில் ஒலித்துக்கொண்டிருக்கும்; ஏகாக்கிர சிந்தை யுடன் பார்த்தால்தான் அழகு புரியும்" என்றாள்.

நான் என்னவோ சொல்லப் போனேன். மீரா என் கையைப் பற்றி என்னைத் தடுத்து, "பேசாமல் அதைச் செவி கொடுத்துக் கேளுங்கள். புரிகிறதா, இப்போது தாளம் சேர்ந்து வரவில்லை?" என்றாள்.

மீரா தன் நினைவில் இருக்கிறாளா என்ற ஸம்சயம் மீண்டும் என் மனத்தில் உதித்தது. அவளையே நோக்கி னேன். எதிரேயுள்ள பாறைச் சுவரில் எங்கள் இருவரது நிழல் வடிவமும் விழுந்தன. வனபூமியின் தலைக்கு மேலே சந்திரன் எழும்பிக்கொண்டிருந்தது. "மீரா, போக

லாம். ராத்திரியாகிவிட்டது. அதோ பார், சந்திரன் உதயமாகி விட்டது'' என்றேன்.

மீரா ஆகாயத்தை நோக்கிச் சந்திரன் எழும் திசையே நின்ருள். கீழே கொந்தளிக்கும் நீர்ச்சுழலை ஒரு தரம் கவனித்தாள். சந்திரனுடைய பிரதிபிம்பம் அந்த ஜலராசியில் கண்டதுண்டமாகச் சிதறிக் கிடந்தது.

“மீரா, வா போகலாம்'' என்று கூப்பிட்டேன்.

“போகலாமே'' என்ருள் அவள்.

எழுந்து வர இஷ்டமே இல்லை அவளுக்கு. மெல்ல அசைந்து நிதானமாகவே எழுந்திருந்தாள். நான் முன்ஞல் சென்றேன். மீரா ஒன்றும் பேசாமல் என்னைப் பின்தொடர்ந்தாள். தொலைவில் ஸந்தாளிகளின் கிராமத்திலிருந்து மத்தள ஓசை, குழலிசை இவற்றுடன் சேர்ந்து பல பெண்கள் சேர்ந்து பாடும் குரல் மெதுவாகக் காற்றுவாடையில் கேட்டது. அவர்கள் கிராமத்தின் ஓரமாகச் செல்லும்போது, “அவர்களுடைய கொண்டாட்டத்தைப் பார்த்துவிட்டுப் போகலாமா, மீரா?'' என்றேன்.

ஆனல் இதென்ன! மீரா எங்கே? நாலு பக்கமும் நன்ருகக் கண்கள் விரியக் கவனித்தேன். பரந்த வெளியான அந்த இடத்தில் அவள் இருக்கும் சுவடே தென்படவில்லை. மீரா எங்கே போயிருப்பாள்? கூப்பிட்டேன்: “மீரா, மீரா!'' பதிலே வரவில்லை. கலக்கங்கொண்டு திரும்பினேன். வழியில் எங்கும் இல்லை. நதியின் சமீபம் வரும்போது என் சரீரம் சிலிர்த்தது. நீர்வீழ்ச்சியின் சலசலப்புடன் யாரோ ‘ஹஹஹ' என்று சிரிக்கும் த்வனியும் கேட்டது. பாறைக்குப் பாறை அந்த த்வனி ஆயிரம் துண்டாகச் சிதறி எதிரொலித்தது. மீண்டும் சிரிப்பு; மீராவின் சிரிப்பே. அன்றுதானே

அவள் உள்ளூறச் சிரித்ததைக் கேட்டு அநுபவித்தேன்? அதன் அடுக்கொலி என் செவியில் ஒலித்துக்கொண்டிருந்தது. முடிந்தவரை விரைவாகவே ஆற்றங்கரையின் விளிம்பில் வந்து நின்று கீழே நோக்கினேன். நிலா வெளிச்சத்தில் பாறைக்கும் ஜலத்திற்கும் எனக்கு வித்தியாசம் தெரியவில்லை. கடைசியில் கண்டுபிடித்தேன். அந்த இடத்தில்தான் மீரா தன் கால்களை நீரில் தோய்த்து மனம் விட்டுச் சிரித்துக்கொண்டிருந்தாள்.

"மீரா!" என்று உரக்கக் கத்தலாமாவென்று எண்ணினேன். விசையாகச் செல்லும் நீரின் ஓலத்தில் எனக்கு ஒரு சப்தமும் கேட்கவில்லை.

ஒருவேளை நான் இவ்வாறு அசப்பில் கூப்பிட்டால் அவள் திடுக்கிட்டு நதியில் விழுந்துவிடுவாளோ என்ற சந்தேகம் எனக்கு. மேலே கால் எடுத்து வைக்க எனக்கோ பயம். திடீரென ஓர் ஆள் வருவதைப் பார்த்து அவள் மருண்டு போனால், என்ன செய்வதென்று எனக்கு ஒன்றும் புரியவில்லை.

என் நல்ல காலம் மீரா தானாகவே அந்த இடத்தை விட்டு எழுந்தாள். அவள் கூந்தலில் கற்றையாகப் பூவைச் செருகியிருந்தாள். காதிலும் மலரணி. சதுரமான பாறையொன்றின்மேல் நின்றிருந்தாள் அவள். ஆம்பற் கொடி போன்ற தன் இரு கைகளையும் அழகிய பாணியில் விரித்து அவள் ஆட ஆரம்பித்தாள். இதென்ன! மீரா நடனமாடுகிறாளே!

அவள் ஆடிய நடனத்தின் சிறப்பைத்தான் என்னவென்று சொல்வேன்! பாறைச் சதுக்கத்தை ஒரு வண்ணாத்திப் பூச்சியைப் போல் சுற்றிச் சுற்றி நர்த்தனம் புரிந்தாள். நடு நடுவே நின்று மறுபடியும் சுழன்று

சுழன்று குதித்தாள். அந்தச் சுழலாட்டத்தின் வேகத்தில் அவளுடைய அவயவங்கள் கண்ணுக்கு மறைந்தன. அரையிலுள்ள சேலை பொங்கிப் பறந்தது. நிலவொளியில் சேலையின் ஜரிகைப் பூக்கள் பளபளத்தன; வர்ணம் தீட்டிய ஓர் அருவியாகவே தோற்றியது அது. அன்று மட்டும் மீராவின் கால்களில் சதங்கை இருந்திருக்கும் பக்ஷத்தில் கட்டாயம் அந்த இன்னொலியைக் கேட்டு, நீர்வீழ்ச்சியின் கல்லோலம் வெட்கத்தினால் அடங்கியே போயிருக்கும். அந்த இரவில் கூடக் காட்டினுள் எவனோ கட்டை வெட்டிக்கொண்டிருந்தான். அந்தச் சப்தம் அவளுடைய நாட்டியத்திற்கு இசைந்த தாளம் போலவே இருந்தது.

"இதென்ன, நீண்ட நாள் மீராவின் உள்ளத்தில் சுடர்விடும் ஓர் அபூர்வ உணர்ச்சி இன்று மெதுவாக வெளியே கிளம்பிவிட்டதா?" என்று எண்ணும் போது எனக்குக் கண்களில் நீர் திரையிட்டது.

இரவு வளர்ந்துகொண்டிருந்தது. மீரா ஓய்ந்து போய்ப் பாறை மீது உட்கார்ந்துவிட்டாள். சந்திரனை நோக்கி அவளுடைய விழிகள் நிலைத்து நின்றன. நான் மெதுவாகவே அவளை அணுகி, "மீரா! மீராதேவி!" என்று கூப்பிட்டேன்.

நிலவின் ஒளியில் அவளுடைய கண்கள் பளபளத்தன. இடி இடியென்று சிரித்தாள்.

கையைத் தொட்டு அவளை என் பக்கமாக இழுத்துக் கொண்டு, "எழுந்திரு. வீட்டுக்குப் போகவேண்டாமா? சந்திரநாதன் தேடுவானே" என்றேன்.

"நான் பாடுகிறேன். நண்பா, கேளேன்?" என்றாள் மீரா.

"வீட்டுக்குப் போன பிற்பாடு பாடு; கேட்கிறேன்" என்றேன். கெட்டியாக அவள் கையைப் பிடித்துக் கொண்டு இழுத்தேன்.

* * *

சந்திரநாதன் அப்போது கூட வரவில்லை. வேலையாளைக் கூப்பிட்டு, "அம்மாளுக்கு உடம்பு சரியாக இல்லை; அவர்களைப் படுக்கவைத்துத் தலைப்பக்கமாக நன்றாக விசிறு" என்றேன்.

நடு நிசியில் ஏதோ சப்தம் கேட்டு நான் விழித்துக் கொண்டேன். என்னவோ சங்கை மூண்டது எனக்குள். சந்திரன் அஸ்தமிக்கும் தறுவாய்; மறைந்து வரும் அந்நிலவொளியில் உடம்பில் துணியே இராமல் மீரா தோட்டத்தில் பனி தோய்ந்த புல்லின்மேல் குப்புறப் படுத்துக்கொண்டு தேம்பித் தேம்பி அழுவது தெரிந்தது.

மறுநாள் காலையில்தான் சந்திரநாதனைக் காண முடிந்தது. மீரா தூங்கிக்கொண்டிருந்தாள். "காலை வண்டிக்கே நான் திரும்பவேண்டும். மீராவை என்னவோ நோய் வாட்டுகிறது. அவளைக் கவனித்துக்கொள்" என்றேன் சந்திரநாதனிடம்.

"நானும் அதைக் கவனித்தேன், நரு; மூளைக் கோளாறுதான். நான் என்ன பண்ணுவேன்! எல்லாவற்றையும் விற்று ஒழிக்கவேண்டியதுதான். அரை க்ஷணங் கூடத் தாமதிப்பதற்கில்லை இனி" என்றான்.

"ஏன் அப்படி?" என்றேன்.

"மார்வாடி பணத்திற்காக மென்னியைப் பிடிக்கிறான். அவனுக்குச் சேரவேண்டிய தொகை மூன்று லக்ஷத்திற்கு மேல் இருக்கும். வேறு வழிதான் தேடவேண்டும்" என்றான்.

"வேறு வழி இல்லையா?" என்றேன்.

"வக்கீல் சொல்லுகிறார், எவ்வளவோ வழியிருக்கிறதென்று. ஏதாவது ஒருவிதமாக ராஜி செய்து கொண்டால் தக்கலாம். ஆனால் மார்வாடிக்கு இணங்கிப் போக எனக்கு இஷ்டமில்லை. இதெல்லாம் என் தப்பிதமே. அவ்வப்பொழுது வட்டியை அடைத்துவிட்டிருந்தால் இவ்வளவு தொல்லை இருந்திருக்காது. அது கிடக்கட்டும். வண்டிக்கு நேரமாகிறது. போய் வா" என்றான். என் துயருக்கு ஓர் எல்லையே இல்லை.

"சந்திரநாத், எனக்கு ஒன்று தோன்றுகிறதடா!" என்றேன்.

சந்திரநாதன் கைக்கடிகாரத்தைக் கவனித்துவிட்டு வேலைக்காரனைப் பார்த்து, "சீக்கிரம் மோட்டாரை ஓட்டி வரச் சொல்லு" என்று கட்டளையிட்டான்.

"மீராவுக்குச் சித்தப்பிரமைபோல் இருக்கிறதடா. அவளைச் சரியாகப் பார்த்துக்கொள்" என்றேன்.

என்னைக் குறுக்கிட்டு, "நான் என்ன செய்வேண்டா? என் வாழ்க்கை பரிபூர்ணமாகியும், பூர்த்தி யடையாமலும் இருக்கிறதே. மறுபடியும் அடியே பிடித்து நான் புதுசாக ஆரம்பிக்க வேண்டியதுதான்" என்றான்.

சட்டென அவனுடைய விசாலமான விழி இரண்டிலும் நீர் நிறைந்தது. "நீங்கள் யாருமே என்னைப் புரிந்து கொள்ளவில்லை. என்னையே எல்லாரும் தவறு செய்தவனாக நினைக்கிறார்கள்" என்றான் அடைத்த குரலில். வாசலில் மோட்டார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது.

கல்கத்தாவுக்குத் திரும்பியதுமே சந்திரநாதனுக்குக் கடிதம் எழுதினேன். பதில் கிடைக்கவில்லை அதற்கு.

வண்டியில் ஏறிக்கொண்டதும் என்னையும் மீறி அழுகை வந்தது. சந்திரநாதனுக்காக அல்ல. மீராவின் கதியை நினைத்துத்தான். பழையபடியே சந்திரநாதன் நல்ல நிலைக்கு வருவான். காலபுருஷன் அஸ்தமித்தால், மறுபடியும் உதயமாகிறது. ஆனால் அருந்ததி? நான் தவறாக எண்ணிக்கொண்டேன்; மனத்துள் மீராவை விளித்து, "அருந்ததி நீ அல்ல; நீ அல்ல. ரத்த மாமிசமான ஸாதாரண நாரி நீ. உள்ளூற நான் வணங்கியது உன்பொருட்டன்று. அதனாலேயே உனக்காகக் கண்ணீர் விடுகிறேன்" என்றேன்.

வேறு உபாயம் இல்லையா இதற்கு? அன்று அந்திவானை நோக்கியபோது ஹீருவின் கவனம் வந்தது. போய் ஹீருவை அண்டிப் பார்க்கிறேன். அவனால் ஏதாவது செய்யக் கூடுமோ?

# அத்தியாயம் 16

ஹீருவின் பணம் இந்த ஸமயத்தில் சந்திரநாதனுக்கு மிகவும் உதவியாக இருக்குமேயென்று எண்ணினேன். போன தடவை அவனைச் சந்தித்தபோதுகூட இதைப்பற்றி அவனிடம் குறிப்பிட்டிருந்தேன். அவன் சொன்ன பதிலும் என் கவனத்தில் இருந்தது. கடைசியில், 'கூடாது, அவனைக் கேட்கக்கூடாது' என்று தோன்றியது. பணக்கார வீட்டு ஊதாரிப் பிள்ளையிடம், சந்திரநாதன் யாசிப்பது மரியாதைக் குறைவே. மதிப்பே போய்விடும். அவனெதிரே சந்திரநாதனைச் சிறுமைப் படுத்த நான் விரும்பவில்லை.

புத்தி ஸ்வாதீனமற்ற மீராவும் அவள் மகனும் என் மனத்திரையில் தோன்றினர். வற்றிச் சுண்டிய அந்த வக்கீலின் கவனம் வந்தது. ரெயில் வண்டி வேகமாகச் செல்லும் களேபரமான ஓசைக்கு இடையே, "நீங்கள் இந்த மாதிரி செய்வதுதான் உசிதம்; இல்லாது போனால் இதனால் பிழைக்கும் எத்தனையோ பேருக்கு நாசமே ஏற்படும்" என்று அவர் சொன்ன வார்த்தைகள் என் செவியில் ஒலித்துக்கொண்டிருந்தன. இதைத் தொடர்ந்தாற்போல் மற்றோர் ஆளின் நினைவு எனக்கு வந்தது; அவள்தான் அந்த நாடோடிப் பெண்.

என் மன ஆகாயத்தின் திசைமுடிவில் ரகஸ்யம் குடிகொண்ட அந்தப் பாவை கையை ஆட்டி என்னை அழைத்தாள்.

ஹீருவை ஒரு தரம் பார்க்கவேண்டுமென்றிருந்தது. அப்படி அவன் பெரிய மனசுடன் பணம் தருவதாயிருந்

தால், நான் கையை ஏந்தி அதை வாங்கிக்கொள்வதால் சிறுமைப்பட்டாலும் படுகிறேன். அந்த நாடோடிப் பெண்ணைக் காணவேண்டுமென்று எனக்கு ஓர் ஆவல். கல்கத்தா வந்தவுடன் மறுநாளே ஹீருவின் இருப்பிடம் தெரிந்துகொள்வதற்காக ஊருக்குப் பிரயாணமானேன். அங்கே போய் விசாரித்ததில், ஸந்தால் பர்கணுவில் தன்னுடைய ஜமீனில் அவன் இருப்பதாகத் தெரியவந்தது. அவனுடைய 'எஸ்டேட்டு'க்களைக் கவனித்துக்கொள்ளும் மானேஜர் என்னிடம், "அவன் செய்கிற காரியங்களா? அவனுக்குத்தான் தெரியவேண்டும். அந்த இடத்திலிருந்து வரும் செலவுக் கணக்குகளைப் பார்த்தாலோ வயிறு எரியும். தோட்டா, விஸ்கி, வேட்டையாடும் சிப்பந்திகளுக்குப் படிச்செலவு; இவையே அதிகமாகத் தென்படும்" என்ருர்.

மானேஜர் பாபு பழைய பேர்வழி. ஹீருவின் வீட்டிலேயே வெகு நாளாக வேலை பார்த்துப் பழக்கப்பட்டவர்.

விஸ்கி இத்யாதி விஷயங்களுக்கு அவன் பணத்தை விரயம் செய்வதைப்பற்றி அவர் வருந்துவது எனக்கு ஒன்றும் அதிசயமாகத் தோற்றவில்லை. "அவனை இழுத்துக் கொண்டு வந்து ஒரு கல்யாணத்தைப் பண்ணி வையுமே" என்று சிரித்துக்கொண்டே சொன்னேன்.

அதற்கு அந்தக் கிழ மானேஜர் பாபு, "கையில் எடுத்து அவனை வளர்த்தேன். காணக் காணச் சலிக்காத பேரழகு வாய்ந்த பையன். பூவை விட மெல்லிய எழிலமைந்த மேனி. இப்பெயருக்கு வந்த பிள்ளை, இந்த மாதிரி கெட்டுக் குட்டிச்சுவராவானென்று நான் நினைக்கவே இல்லை. என்னல் என்ன ஆகும்? தலைமுறை தலைமுறையாக வரும் என் யஜமானரின் பெருஞ் செல்வம்

அழிந்து ஒன்றுமிராமல் போவதை என் கண்ணுல் கடைசி வரை பார்த்துக்கொண்டு இருக்கவேண்டுமோ என்னவோ?" என்ருர்.

மனுஷ்யனிடத்தில், ஆவலைவிட வேறு எந்த இச்சையும் அவ்வளவு பலமாக வேரூன்றி இருக்கவில்லை. மனித வாழ்க்கையில் தோன்றும் எந்த விகாரங்களும் இந்தத் தீரா வேட்கைக்குப் பிற்பாடுதான். தனக்குத் தெரியாத ஒரு விஷயத்தை அறியவேண்டுமென்ற அவாவினுல் பல சமயங்களில் மனிதன் வரம்பு மீறி இழிவாகவும் நடந்துகொள்ளுகிருன். ஆனுல் இது இயற்கையே. "ஹீரு ரொம்பப் பணம் கரைத்துவிட்டானு என்ன?" என்றேன்.

வறண்ட சிரிப்புடன் அவர், "ஒழிந்து போகிறது, அப்படி இருந்தாலும் பரவா இல்லையே! அவனுவது அநுபவித்தாற்போல் இருக்கும். நரூ பாபு, நம் ஹீருவின் அதிருஷ்டமே அதிருஷ்டம். சிற்றப்பா, அண்ணன், மாமா இவர்கள் சொத்து மட்டும் அல்ல—" என்ருர்.

நான் அவரைக் குறுக்கிட்டு, "அதெல்லாம் தெரியும்" என்றேன்.

"உங்களுக்கு மீதி விஷயம் தெரியாதோ? மூன்று பேர் ஆஸ்தியெல்லாம் போதாது; சமீபத்தில் அவனுடைய தகப்பனுருக்கு மாமியாம், அவளும் இறந்துவிட்டாள். அந்தச் சொத்தும் ஹீருவையே அடைந்துவிட்டது" என்ருர்.

மரண தேவதையின் அருளினுல் அதிருஷ்டசாலியாகும் பாவி மகன் அந்த ஹீருவை நினைத்துக்கொள்ளும் போது நான் வருந்தாமல் வேறு என்ன செய்வது?

வெகு நேரம் மௌனமாகவே இருந்தேன். எந்த விதமான சிந்தனையும் நான் செய்யவில்லை. என்னவோ

ஒரு தயக்கத்தினால் சும்மா யிருந்தேன். ஒவ்வொரு க்ஷண மும், அந்த நாடோடிப் பெண்ணின் ஞாபகமே எனக்கு வந்தது. கிழ மானேஜரிடம், அவளைப் பற்றி விசாரிக்க எனக்குக் கூச்சமா யிருந்தது. விசாரிக்கவே இல்லை.

ஹீருவின் வீட்டை விட்டு வெளியேறியபோது என் மாமியை நினைத்துக்கொண்டேன். அன்பின் களஞ் சியமான அவளைக் கண்டு என் வணக்கத்தைச் செலுத் தாமல் செல்வது பெரிய பாபமாகும். நிசாநாத பாபுவையும் பார்க்கவேண்டுமென்ற எண்ணம் பிறந்தது. அவரே சந்திர நாதனிடம் சென்று ஏதாவது சொன்னால், அவர் வார்த் தையை அவன் கேட்டாலும் கேட்கலாம். மார்வாடி வியாஜ்யம் தொடுத்துவிட்டால் என்ன? ஒருவித ஸமரஸத் திற்கு வராமல் போக மாட்டான்.

எதுவாயிருந்தாலும், நிசாநாத பாபு பணப் பித்துப் பிடித்துத் திரியவில்லை. அவர் கொண்டுள்ள பித்தம் வேறு விதமானது. அதற்கு வணக்கம். அவர்கள் வீட்டுக்கு எதிரே வந்ததும் என்னுடைய கால்கள் மேலே செல்ல மறுத்தன.

இதென்ன, வீடு இப்படிக் கிலமாகிவிட்டதே! கூரை பல இடங்களில் சரிந்து இருந்தது. நாலு பக்கமும் சுவர் மழையில் கரைந்து தரைமட்டம் ஆகும் நிலை. ஆயிரங் கந்தலான புடைவை யொன்று சாயம் போய் வெயிலில் காய்ந்துகொண் டிருந்தது. அதைக்கொண்டு, என் மாமி உயிருடன்தான் இருக்கிறாளென்று அறிந்தேன். உள்ளே புகவும் எனக்குத் துணிவு ஏற்பட்டது.

குற்றம் செய்தவனைப்போல் நுழைந்து, "மாமி" என்று கூப்பிட்டேன்.

பதினுன்கு அல்லது பதினைந்து வயதான மிகவும் இளைத்த ஒரு பையன் முற்றத்தில் நின்றுகொண்டிருந்தான். "யாரைத் தேடுகிறீர்கள்?" என்று அவன் பதில் கொடுத்தான்.

முக ஜாடையிலிருந்து அவன் நிசாநாத பாபுவின் மகனென்று ஊகித்துக்கொண்டேன். "நீதானே நிசாநாத பாபுவின் பிள்ளை?" என்றேன்.

இதற்கு முன் அவனைக் கண்டு பேச எனக்கு ஸந்தர்ப்பம் கிட்டவில்லை. தலை அசைத்து அவன், "ஆமாம்" என்றுன்.

"அப்பா எங்கே? அம்மா உள்ளே இருக்கிருளா?" என்றேன்.

"அப்பா அகத்தில் தங்குவதில்லை. அம்மா, இங்கே தான் எங்கேயோ போயிருக்கிருள். வருவாள். அழைத்துக்கொண்டு வரட்டுமா?" என்றுன்.

"போய் அழைத்துக்கொண்டு வா. நரு வந்திருக்கிருனென்று சொல்லு. நான் யாரென்று தெரியவில்லை? நரேச்" என்றேன்.

அவன் சர சரவென்று எனக்கு நமஸ்காரம் பண்ணி விட்டு என்னையே அதிசயத்தினுல் விரிந்த கண்களுடன் நோக்கினுன். "நீங்கள்தானு புஸ்தகம் எழுதும் நரேச் சந்திர முகோபாத்யாயர்? அம்மா உங்களைப்பற்றி அடிக்கடி சொல்லுவாள்" என்றுன்.

மனிதர்களின் மனம் வெகு விசித்திரமானது! இப்படி ஒரு வாலிபன் என்னையே ஏற இறங்க வியந்து பார்ப்பதனுல் எனக்குப் புளகம் மூண்டது. சற்று முன் இருந்த சிந்தாகுலம் எங்கோ மறைந்துவிட்டது.

"யாரு, நருவா? வாடாப்பா, வா எப்போ வந்தே?" என்று மாமியின் குரல் கேட்டது. மாமியைப் பார்த் ததுமே எனக்கு உடல் சிலிர்த்தது. அந்த மாமியா இவள்? அன்று பார்த்த அந்த அன்னபூரணியா, வீடு நிறைந்த ஒரு மனுஷியா, இப்படி ஆகிவிட்டாள்?

மாரிவளம் குன்றியதால் வறண்டு நிற்கும் பூமியைப் போல் உடல் இளைத்து மேனி மழுங்கி யிருந்தாள்! அவ ளைப் பார்த்தவுடன் மீராவின் நினைவு வந்தது எனக்கு. சரீரம் குன்றாது போனாலும், மனம் வரைக்கும் இதே வறுமையின் சாயலைக் கொண்டிருந்தாள் மீரா.

என் சிந்தனையுள் செல்வதை மாமி அனுமானத்தால் அறிந்தவளாய், பொலிவற்ற சிரிப்புடன், "அடையாளம் தெரியவில்லையா என்னை?" என்றாள்.

அவளை நமஸ்கரித்துவிட்டு நான், "ஆமாம் மாமி, உங்களை இப்படிப் பார்க்கும் போது கண்ணில் ஜலம் வரு கிறது" என்றேன்.

தாழ்வாரத்தில் என்னை உட்காரச் செய்து, "நான் பண்ணின அதிருஷ்டமப்பா; நீ கண்ணீர் விடுவா னேன்?" என்றாள்.

பேசாமல், தலை குனிந்தபடியே இருந்தேன். எதைப் பற்றி விசாரிக்கவும் எனக்கு லஜ்ஜையாக இருந்தது. தவறி அவள் மனத்தைப் புண்ணாக்கும் ஏதாவது பழைய சங்கதி என் வாயில் வந்துவிடப்போகிறதே என்று பயந் தேன்.

"அப்பா, உன் மாமா ஸந்யாஸியாகப் போய்விட் டாரே, தெரியுமோ?" என்றாள்.

தூக்கி வாரிப்போட்டது எனக்கு; "என்ன? ஸந்யாஸமா?" என்றேன்.

வெறுப்புச் சிரிப்போடு அவள், "ஆமாம், மூன்று வருஷ காலமாயிற்றே. சுடுகாட்டில் குடிசை கட்டிக் கொண்டு அங்கேயே இருக்கிறார். ஸந்யாஸம் வாங்கிக் கொண்ட புதிதில் எப்போதாவது வந்து போவார். இந்த ஒரு வருஷமாக அதையும் நிறுத்திவிட்டார். அன்னத்தையும் வர்ஜியம் செய்துவிட்டார்" என்றாள். சற்று நின்று விட்டு மீண்டும் பேசினாள்: "ஸம்ஸார வாழ்க்கை வாஸ்தவமாகவே சத்துருதான். பகவான் ஒருவனே நமக்குத் துணை. அவனை அடையாவிட்டால் இந்த மானிட ஜன்மம் எடுத்தும் பயனில்லை. இதைச் சொல்லிக்கொண்டு தான் நாளைக் கழிக்கிறேனப்பா!" என்றாள்.

நான் பேசமுடியாமல் யோசிக்கலானேன்.

மாமி மறுபடியும் விசாரித்தாள்: "சந்திரநாதனைப் பற்றி உனக்கு ஏதாவது தெரியுமா? அவன் நல்ல ஸ்திதியில் இருப்பதாகக் கேள்விப்பட்டேன். வாஸ்தவந்தானா?"

"ஆமாம்; இப்போது கொஞ்சம் கஷ்டதசை அவனுக்கு. லக்ஷக்கணக்கில் கடன் இருக்கிறது. அவனுடைய சொத்தை யெல்லாம் விற்றால்தான் மீள முடியும்" என்றேன்.

மாமி மோவாயில் விரல் வைத்து, "லக்ஷக்கணக்கிலா?" என்றாள் திக்பிரமித்து. அப்போது அவள் கண்களில் தோன்றிய ஒரு பாவம், அவளுடைய குரல் - இரண்டையும் என்னால் மறக்கவே முடியாது. அப்புறம் பெருமூச் செறிந்து அவள், "அவனைக் குறை கூறுவானேன்? எனக்கு மைத்துனன்தானே? மணந்த புருஷனே திரும்பிப் பார்க்காமல் இருக்கும்போது, சந்திரநாதன் மீது குற்றம் சுமத்துவானேன் நான்?" என்றாள்.

எனக்கு என்னவோ மனம் அந்த இடத்தில் லயிக்க வில்லை. எழுந்து போனால் போதும் போல் இருந்தது. நிசாநாத பாபுவைக் கடுமையான சொற்களால் வையும் அளவிற்கு வந்துவிட்டாள் மாமி. "சுடுகாட்டிற்குப் போய் அவரை இரண்டு வார்த்தை கேட்க வேண்டுமென் றிருக்கிறேன், மாமி" என்றேன்.

அவள் சிரித்தாள். பரிதாபமான சிரிப்பு. "அவரைக் கேட்டு உபத்திரவப்படுத்துவானேன், நரு? வாஸ் தவத்தைச் சொல்லப் போனால், அவர் பேரிலும் தப்பு இல்லை. என் குழந்தைகள் செய்த பூஜா பலன் அவர் தம் வழியே செல்கிறார். அக்கிரமமானது ஒன்றும் செய்ய வில்லையே" என்றாள்.

ஆத்திரம் பொங்க நான், "அக்கிரமம் இல்லையா? மாமி, லக்ஷம் தடவை வேண்டுமானாலும் சொல்லுவேன். இது அநியாயம். பெருத்த அநியாயம்" என்றேன்.

"அந்த இழவை விட்டுத் தொலை. அதைவிட வேறு எந்தப் பேச்சாவது பேசலாம். உன் க்ஷேம ஸமாசாரத் தைச் சொல்லு எனக்கு. அப்பாடா, உன்னைப் பார்த்து எத்தனை நாளாச்சு! போன தடவை வந்தபோது நம் நிருவுக்கு வரன் தேடிக்கொண்டு வருவதாகச் சொல்லி விட்டுப் போனாய். நிருவுக்கு அப்போது வயசு பதினொன்று. இப்போது பத்தொன்பது. ஏழு வருஷ காலமாகிறது; இல்லை?" என்றாள்.

அவமானத்தால் என்னால் அவளை நிமிர்ந்து பார்க்க முடியவில்லை. வாக்களித்ததை மறந்து சுய நலத்தையே கருதிய என்னையே சபித்துக்கொண்டேன்.

மாமி என் ஸங்கடத்தைக் கவனித்து, "அவமான மென்ன இதனால் நரு? உன் மனம் இதனால் கஷ்டப்படு

மென்று தெரிந்திருந்தால் நான் இந்தப் பேச்சை எடுத்திருக்கவே மாட்டேன். குடிக்கத் தீர்த்தம் கொண்டுவருகிறேன். ஏழை நான், என்ஞல் என்ன கொடுக்க முடியும்? வெல்லம் இருக்கிறது. டம்ளர் ஜலந்தான். அன்னபூரணி யென்று நீ அழைக்கும் மாமியின் வாசலை மிதித்துவிட்டு ஒன்றும் தின்ஞமல் போகக்கூடாது" என்றதும் அவள் சிரித்தாள். அந்தக் காட்சி என் கண்களில் தாரைதாரையாக நீரை வருவித்தது. மாமி என் அருகில் வந்து தன் புடைவைத் தலைப்பை நீட்டி, "நரூ...அழாதே, அப்பா, அழுதால் ஆறுகிற கதையா என்னுடையது?" என்ருள்.

மனத்துள் ஒரு ஸங்கல்பம் கொண்டு நான், "நிருவுக்கு இன்னும் கல்யாணமாகவில்லையே, மாமி?" என்றேன்.

"கல்யாணமா? தூக்குப் போடும் கயிறுக்கே வழியில்லை" என்ருள் மாமி. உடனே தயக்கமின்றி, திடத்துடன் நான், "'நிருவை நீ கல்யாணம் செய்துகொள்வதற்கென்ன?' என்று போன தடவை வந்தபோது சொன்ஞயே மாமி. இப்போது நானே உன்னிடத்தில் வலிய வந்து நிருவைக் கேட்கிறேன்; கொடுப்பாயா?" என்றேன்.

க்ஷணநேரத்திற்கெல்லாம் மாமியின் முகத்தில் பெரிய மாறுதலைக் கண்டேன். அவளுடைய கண் இமைக்கவே இல்லை. அந்தப் பார்வையில் என்ன தென்பட்டதென்பதை என்ஞல் ஊகித்துச் சொல்லத் தரமன்று. விசித்திரமாயிருந்தது. எனக்கு வியப்பை உண்டுபண்ணியது. அவ்வளவே சொல்வேன். பார்த்துக்கொண்டிருக்கையிலேயே பலபலவென்று கண்ணீர் உகுத்தாள். கண்களைத் துடைத்துக்கொண்டு என் சிரத்தின்மீது கையை வைத்து அன்னையைப் போல் ஆசிர்வதித்து, "நீ சிரஞ்ஜீவியாக

இருக்க வேண்டுமப்பா! என் துக்கத்தைத் தொலைத்தாய். வயிற்றில் பிறந்த பிள்ளையால் ஸ்வர்க்கம் கிட்டுமென்பார்கள். இன்று உன்னால் அந்த ஸ்வர்க்கம் எனக்குக் கிடைத்துவிட்டது. நரு, என் கஷ்டமெல்லாம் இதோடு ஒழிந்ததடா!'' என்றாள்.

அவளுடைய பாததூளியைத் தலைமேல் கொண்டு நான், ''என் மனத்துள் மூண்ட ஒரு நெருப்பின் அனல் நிருவைத் தீண்டாது இருக்குமாறு ஆசீர்வாதம் செய்யுங்கள்'' என்றேன்.

''எங்கே அவள், நிரூ. அந்த எரி மூஞ்சி. அடீ நிரூ...நிரூ'' என்று மாமி கூப்பிட்டாள்.

புறக்கடை வழியாகப் பதில் வந்தது: ''இதோ வந்துவிட்டேன், அம்மா.''

மாமி, சரசரவென்று *சங்கத்தை எடுத்து வந்து முற்றத்தில் நின்றுகொண்டே, பாழடைந்திருக்கும் தன் குடும்பத்தில் நல்ல காலம் வரப்போவதன் சின்னமாக ஊதினாள்.

''சங்கு எதற்கு ஊதினே அம்மா? இன்றைக்கு என்ன?'' என்றது ஒரு மதுரமான குரல்.

இளமையும், வடிவும், வனப்பும் நிறைந்து கண்ணைக் குளிர்விக்கும் ஒரு சித்திரம் போல் நிருபமா என் எதிரே வந்து நின்றாள். நாணத்தால் அவள் வளைந்து போனாள்.

''மூடமே, உன்னை எத்தனை தரம் கூப்பிடுவது? உன்னை வீட்டைவிட்டுத் துரத்தும் நாள் கிட்டிவிட்டது நருவுக்கு நமஸ்காரம் பண்ணு. அவன் காலடியில்தான் நீ

---

* சங்கை ஊதிக் கோஷிப்பது வங்காளிகளிடையே சுபத்தைக் காட்டும் ஒரு வழக்கம்.

விழுந்து கிடக்கவேண்டும். ஏதோ, மலையத்தனை பாவத்தில் கடுகத்தனை புண்ணியம் பண்ணியிருக்கே. நரேச் உனக்குக் கிடைத்ததே பெரும் பாக்கியம்” என்றாள் அவள் தாய்.

நிரு நமஸ்காரம் செய்யவில்லை; வெட்கம் மேலிட்டு ஓடி ஒளிந்துகொண்டாள்.

“மாமி, நல்ல முஹூர்த்தம் ஒன்று நீயே பார்த்து வை.”

“நான் உனக்கு மாமிதானேடா இப்போ, நரு?”

பதினைந்து நாட்கள் கழித்து ஒரு சுப வேளையில் இந்தக் காரியத்தை நிறைவேற்றக் குறித்தாகிவிட்டது. நிசாநாத பாபுவைப் பார்க்கச் சென்றிருந்தேன். நான் செய்வது சரியா இல்லையா என்பதைப்பற்றிச் சிந்திக்கவே இல்லை. எதற்கும் நான் பின்னடையவில்லை. உண்மையைச் சொல்லுங்கால் அன்று என் மனத்துள் எந்த எண்ணமும் ஸஞ்சரிக்கவில்லை. வருங்கால வாழ்க்கையின் இனிய கூடு கட்டுவதில் என் கற்பனை வேலை செய்யத் தொடங்கியது. அடிக்கடி நிருவின் பிம்பம் என் மனத்துள் உதிக்கும்; உள்ளத்துள் இன்பத்திவலையை விசிறும்.

இவ்வாறான சிந்தைவழியே என் மனத்தைப் பறக்க விட்டதால், மயானத்துள் வந்ததைக்கூடக் கவனிக்கவில்லை. திடுமென்று விழித்துக்கொண்டபோது நின்ற இடம் மயானமெனத் தெரிந்தது.

மனிதரே இராத மணல் பரவிய ஆறு. அதன் மேடான கரையில் உயரமான ஒரு புற்று. அதைச் சுற்றிலும் வேலமரமும் கள்ளிப் புதலும். அதன் கீழ்ப்புறம் குத்துக்குத்தாக முட் செடிகள். அதுவே ஊர்ச் சுடுகாடு. மங்கலாகத் தேய்ந்த ஒரு கால்பாதை அதனூடே சென்று மறைந்துவிடுகிறது. அதிலிருந்து மனிதர் அந்தப் பக்கம்

அதிகமாக வருவதில்லையெனத் தெரிந்தது. அந்தக் கொடிவழியே சென்று நிசாநாத பாபுவின் குடிலைக் கண்டு பிடித்தேன். சிறுத்து மிகவும் குறுகியதான குடில். அதனுள் படுத்துக்கொண்டால் தலை கூரையில்தான் முட்டும். அதன் வெளியே நாலுபக்கமும் எலும்பும் நர கபாலமும் சிதறிக் கிடந்தன. இரண்டொரு சூம்பிய நாய்கள் ஒரு புதலின் நிழலில் சுருட்டிக்கொண்டிருந்தன. வளைகளிலிருந்து குள்ளநரி போன்று என்னைக் கண்டதும் ஓட்டம் எடுத்தன.

குடிசை வாசலில் நின்றுகொண்டு நிசாநாத பாபுவை விளித்து, "தனியாக வாசம் செய்கிருற் போலிருக்கிறது" என்றேன். அந்த மாதிரி தவறிச் சொல்லிவிட்டேன். நிசாநாத பாபு என்னைப் பார்த்ததும், "அந்த மூலையில் மற்ருேர் ஆஸாமி இருக்கிருன். வா அப்பா" என்ருர்.

குனிந்து உள்ளே நுழைந்து மற்ருேர் ஆஸாமி யாரென்று திரும்பிப் பார்த்த போது என் வயிற்றைப் பிசைந்தது. "இதென்ன, இங்கே பெரிய மலைப்பாம்பு" என்றேன். ஒரு பாம்பு சுருட்டிக்கொண் டிருந்தது, அந்த மூலையில்.

நிசாநாதர் கையைத் தட்டி, "பயப்படுகிருயா என்ன?...உச் போ, போ" என்று பாம்பை அதட்டி எழுப் பிஞர். வேடிக்கை யென்னவென்ருல், அந்தப் பெரிய பாம்பு மெல்ல மெல்ல நகர்ந்து வெளியே போய்விட்டது. ஆச்சர்யம் ஒரு பக்கம்; பீதி ஒரு பக்கம் எனக்கு. 'நிசா நாத பாபு எந்தமாதிரி மனுஷ்யரப்பா!' என்று எண்ணிக் கொண்டேன். அவர் என் மனதில் ஓடும் கருத்தை அறிந்து, "நான் அதை உபத்திரவப்படுத்துவதில்லை. அது வும் என் ஜோலிக்கு வருவதில்லை, நரு!" என்ருர்.

"ஸர்ப்பமாயிற்றே. அதை எப்படி நம்புவது?" என்றேன்.

"யுகம் யுகமாக ஸர்ப்பத்திற்கும் மனுஷ்யனுக்கும் இடையே ஒரு விதமான பகை நீடித்துவருகிறது. மனிதன் ஸர்ப்பத்தைக் கண்டால் கொல்லுகிறான்; ஸர்ப்பம் மனிதனைக் கடித்து நாசமாக்குகிறது. நாம் அதை ஹிம்ஸை செய்யாமல் இருந்தால், அதுவும் நம்மை ஒன்றும் செய்யாது. உன் கண்ணாலேயே இதோ பார்க்கிறாயே. வரும், போகும். மழைநாளில் இங்கேயே சுருண்டு கிடக்கும்" என்றார்.

கொஞ்ச நேரம் கழித்து நான், "திடீரென இந்த ஆச்ரமம்—" என்றேன். என் கேள்வியை முடிக்கவில்லை.

அவர், "ரத்தினங்களுக்குப் பிறப்பிடம் இந்தப் பூமி. பகவான், ரத்தினங்களுக்குள் சிறந்த மாணிக்கம். அதைப் பெறாவிட்டால் வேறு எந்த ஐச்வர்யம் இருந்தும் என்ன பயன்?" என்றார்.

"உங்களுக்கு அத்தகைய அரிய மாணிக்கம் ஏதாவது கிடைத்ததோ?" என்றேன்.

"ஏதாவது கிடைத்ததோ என்றால், என்ன நரூ? ஸர்வ வியாபகமானதும் எல்லையில்லாததுமான அந்த ஸமுத்திரம் நம் கைக்குள் அடங்கும் வஸ்துவா? நீ அதன் பிடிக்குள் அணுவாக அடங்கிப் போவாய்" என்றார்.

"ஆனால் ஸம்ஸாரத்தில், நீங்கள் செய்யவேண்டிய சில கடமைகள் இல்லையா?" என்று கேட்டேன்.

"இந்த இடத்தில் நான் சுயநலத்தையே நாடுபவன் தான். ஆக்ஷேபம் இல்லை. இந்த வழியிலிருந்து திரும்ப என்னால் முடியவில்லையே. என்னவோ சக்தி இழுத்துச் செல்கிறதே என்னை" என்றார்.

நான் மௌனமாக இருந்தேன்.

"இந்த ஸம்ஸாரத்தில் யார் யாருக்கு உறவு?" என்றார்.

"இருந்தாலும், உங்களுடைய பெண்ணுக்கு வயசாகி விட்டதே. கல்யாணம் செய்து கொடுத்து அவளுக்கு ஒரு வழி செய்யவேண்டாமா? இப்போது அவளுக்கு என்ன வயசு தெரியுமோ? பத்தொன்பது."

"என்னால் ஆகக்கூடியது ஒன்றுமில்லை, அப்பா. அவன் இருக்கிறான், அதைப் பார்த்துக்கொள்ள" என்றார்.

"உண்மையாக நீங்கள் அதை நம்புகிறீர்களா?" என்றேன்.

"என் உள்ளத்தினுள்ளே.....நல்ல இடமே அவளுக்குக் கிடைக்குமென்பதை அவருடைய கிருபையினாலே நான் அறிவேன்."

"அதன் அர்த்தம்?"

"என் பெண்ணுக்குச் சீக்கிரத்திலேயே விவாகம் ஆகப்போகிறது. நல்ல வரன் கிடைக்கும்."

ஸ்தம்பித்துப் போய், அவரது முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தேன். "என்னை மன்னிக்க வேண்டும். இந்த விஷயத்தைச் சொல்லவே நான் இங்கே வந்தேன். நிருவை நான் மணந்துகொள்ளப் போகிறேன். இன்றைக்குப் பதினைந்தாவது நாள் முஹூர்த்தம் பார்த்திருக்கிறது" என்றேன்.

விந்தையிலும் விந்தை! ஸர்வத் தியாகியான அந்த ஸந்யாஸியின் விழிகளில் நீர் ததும்பியது. வாஞ்சையின் மிகுதியால் என் உச்சியைத் தொட்டு, "உனக்கு நித்திய மங்களம் உண்டாகட்டும். தீர்க்கஜீவியாய் ஸுகமாக இரு, அப்பனே!" என்றார்.

"கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்யவேண்டாமா? நீங்கள் வந்து கிட்ட இருந்து நடத்தி வைத்தால் நன்றாக இருக்கும்" என்றேன்.

"அதுதான் முடியாது. இவ்விடத்தை விட்டு நான் நகருவதற்கு வழி இல்லையே. நாலு வருஷம் நகரக்கூடா தென்று ஸங்கற்பம் செய்துகொண்டுவிட்டேன். ஒரு வருஷம் ஹவிஸ் அன்னத்தையே தின்று ஜீவித்தாயிற்று. இந்த வருஷம் வெறும் பழமும் ஜலமும். அடுத்த வருஷம் வெறும் ஜலமே உட்கொள்ள வேண்டும். அதற்கப்புறம் நிர்ஜலம். காற்றைப் புசித்து இருக்கவேண்டியது. அது முடிந்தவுடன்தான் இந்த இடத்தை விட்டுப் பெயர முடியும்" என்றார்.

அதற்கு மேல் நான் அவரை வற்புறுத்தவில்லை. வந்து விட்டேன். 'ஆகா! தண்ணீர்கூட இல்லை; வெறும் காற்று ஆகாரம்!' என்று எண்ணும் போது என் ரோமம் சிலிர்த்தது.

சந்திரநாதனைப்பற்றி அவரிடம் எதையும் நான் கூற வில்லை. சொல்ல மறந்துபோய் விட்டேன். அவர் பின்னாலிருந்து என்னைக் கூப்பிட்டு, "கல்யாணமானதும் நிருவுடன் இந்தப் பக்கம் ஒரு தடவை வந்துவிட்டுப் போ; என்ன?" என்றார்.

"அதற்கு என்ன, கட்டாயம் அழைத்து வருகிறேன். உங்கள் ஆசீர்வாதமிராமல் நிரு தன் புது வாழ்வை எப்படி ஆரம்பிப்பாள்?" என்றேன்.

அவருடைய கண்களில் மீண்டும் நீர் சுரந்தது.

## அத்தியாயம் 17

அன்றே ஹீருவைத் தேடிப் புறப்பட்டேன். 'லூப் லைனி'ல் உள்ள ராம்புரஹாட் ஸ்டேஷனில் இறங்கி, மோட்டார் பஸ்ஸில் தும்காவை நோக்கிச் சென்றேன். சுக்லபக்ஷ ராத்திரி. மாலை மங்கலோடு கலந்து நிலவும் பூத்தது. அடிவானம்வரையில் பரந்த செம்புலன், அந்நிலா வெளிச்சத்தில் ரகஸ்ய லோகமாகவே தோன்றிற்று. அந்த காரத்தைக் கிறிக்கொண்டு கரடுமுரடான பாதையில் பஸ் 'உச்' என்று சென்றது. வழியெல்லாம் சால விருக்ஷங்கள் நெருங்கிய பெரிய காடுகளைக் கடந்து செல்ல வேண்டியிருந்தது. இருள் செறிந்த அவற்றின் உச்சியின் மேல் நிலவு முத்தமிட்டது. பஸ் மைல் கணக்காக அம்பெனப் பாய்ந்து சென்றது. ஒரு கிராமத்தண்டை பஸ் நின்றது. நான் இறங்கவேண்டிய இடமும் அதுவே. இறங்கினேன். வழியில் இரண்டொரு கிராமவாஸிகளைக் கேட்டுக்கொண்டு ஹீருவின் விடுதிக்குச் சென்றேன்.

அங்கே எனக்கு நடந்த உபசரணைகளுக்கோ குறை வில்லை. ஆனால் ஹீரு மட்டும் அகப்படவில்லை. அந்த இடத்திலிருந்து இன்னும் பத்து மைலுக்கு அப்பால் உள்ள சாலவனத்துள் பரண் அமைத்துக்கொண்டு, அவன் புலி வேட்டைக்காகச் சென்றிருக்கிறானென்று கேள்விப்பட்டேன்.

அன்று இரவே அங்கே போய்ச் சேருவதென்பது முடியாத காரியம். மறுநாள் விடியற்காலையில் ஹீருவை

அழைத்துவர மோட்டார் போவதால் அப்போது நானும் போகலாமென்று இருந்தேன்.

மாளிகையின் ஒவ்வொரு கதவும் திறந்தபடியே இருந்தது. ஒவ்வோர் அறையாகச் சுற்றிப் பார்த்துக் கொண்டே மனம் எங்கோ லயித்து நிற்க, திரிந்துகொண் டிருந்தேன். வேலையாள் வந்து, "படுக்கை போட்டிருக் கிறது, பாபு. நாழிகை ஆகிறது" என்றான்.

ஒவ்வோர் அறையாகச் சுற்றுவதனால் என்ன லாபம்? படுக்கச் சென்றேன். அந்த நாடோடிப் பெண் ணின் உருவமே அன்று இரவெல்லாம் என் நினைவில் பதிந்திருந்தது. வேறு எங்கோ என் மனம் இருந்தும் அந்த வன அரம்பையைச் சுற்றியே என் சித்தம் சுழன்றது.

அதிகாலையிலேயே மோட்டாரில் ஏறிக்கொண்டு கிளம்பினேன். பொழுது புலர்ந்தும், பின்னிருட்டு அந்தக் காட்டுவழியில் இன்னும் தயங்கிக்கொண்டிருந்தது. மரங்கள் ஒளியைக் காணத் தலையைத் தூக்கின. அவை இந்த ஒளியைத் தேடித் திரியும் வாழ்க்கை முடிவற்றது. கீழே இன்னும் அந்தகாரத்திலேயே அவை மங்கிக் கிடந்தன. என்ன வேட்கையோ, இது? தீராத இந்த ஏக்கத்தோடு சமமாகவே வஞ்சனையும் வளர்ந்து வருகிறது உலகத்தில். கரைந்துபோகும் கடையாமத்தின் மெல்லிய இருளில் ஒளிரும் சுக்கிரன் எங்கே - அந்த ஹீரு?

படிப்படியாக, கதிரவன் கிரணக் கற்றைகள் கூரிய வேல்போல் உள்ளே பாய்ந்து இருளை மாய்த்தன. வனத் திடையே ஒரு சிற்றருவி. இது எந்த உயரமான இடத்தி லிருந்தும் இழியவில்லை. ஊற்றுப்பெருக்கால் நிறையும் ஒரு கயத்திலிருந்து பெருகி ஓடியது. சதுசதுப்பான

அதன் மருங்கில் பெரிய விருக்ஷம் ஒன்றுமே இல்லை. பரந்த வெளியாக இருந்தது அந்த இடம். மேலே வெட்ட வெளிச்சமான ஆகாயம். நாற்புறமும் இலையடர்ந்த மரங்கள் குடைநிழல் விரித்தன. பெரிய சாலமரத்தை ஒட்டினாற்போல உயரமான பரண் ஒன்று இருப்பதைக் கவனித்தேன். அதன் பக்கலில் மற்றொன்று. ஆனால் அந்த இடத்தில் ஹீருவைக் காணவில்லையே?

என்கூடவந்த ஷிகாரி, "பாபு தூங்குகிறாரோ என்னவோ?" என்றான்.

மேலே அண்ணாந்து பார்க்கையில் ஜோட்டின் ஒரு பாகம் என் கண்ணுக்குப் புலப்பட்டது. ஏணி வழியாக மேலே ஏறிக் கவனித்தேன். துப்பாக்கியைத் தலைமாட்டண்டை வைத்த வண்ணம் ஓர் இளைஞன் சுகமாய்த் தூங்கிக்கொண்டிருந்தான்; அடுத்திருக்கும் பரணில் ஹீருவும் நித்திரையில் ஆழ்ந்திருந்தான். இந்த இளைஞன் யார்? கையைத் தொட்டுப் பார்த்தவுடன் என் பிரமை விலகியது. இதென்ன, வளையல் அணிந்த கை அல்லவோ அது? 'ஷிகாரி' உடுப்பில் இருக்கும் ஒரு பெண்மணி! வெள்ளைக்கார யுவதி என்று முதலில் தோற்றியது. சட்டென்று கையை விட்டுவிட்டேன். அந்தப் பக்கம் 'ஷிகாரி' களின் கூச்சலைக் கேட்டு ஹீருவின் தூக்கமும் கலைந்தது. பரணில் இருந்தபடியே அவன், "நரூ" என்று அழைத்தான். அந்தப் பெண்ணும் விழித்துக்கொண்டாள். என்னைக் கண்டதும் அவளுடைய முகம் லஜ்ஜையினால் ரத்தம்போல் சிவந்தது. "நம் சிநேகிதர். எப்போது வந்தீர்கள் பாபு?" என்றாள்.

தூக்கிவாரிப் போட்டது எனக்கு, அந்த நாடோடியின் குரல்! உண்மையில் அவளே. அதே பேச்சுத் தோரணை.

இப்போது சற்றுத் திருந்தியிருக்கிறது. நானும் ரகஸ்யத்தை விடாமல், "நமஸ்காரம்" என்றேன்.

உடனே அவள் என் காலடியில் விழுந்து, "சே, சே; அப்படி நீங்கள் சொல்லத் தகாது. என்னைச் சாருமே அந்தப் பாவம்! ஆசீர்வாதமல்லவோ செய்யவேண்டும்?" என்ருள்.

"என்ன ஆசீர்வாதம் பண்ணச் சொல்லுகிருய்?" என்றேன்.

அடுத்த பரணில் ஹீரு 'பிளாஸ்கை'த் திறந்து திரவ ரூபமான அக்கினியைப் பானம் செய்துகொண்டிருந்தான். அது முடிந்ததும் சிகரெட் பிடித்துக்கொண்டே என்னைப் பார்த்து, "அகஸ்மாத்தாக நீ இங்கே முளைத்த காரணத்தை நான் கேட்கமாட்டேன். க்ஷேமந்தானே நரூ?" என்ருன்.

"என் க்ஷேமம் இருக்கட்டும் ஒரு பக்கம். ஏ ஷிகாரி, நீ வேட்டையாடிய பிராணி எங்கே?" என்றேன்.

"சிருஷ்டியின் ஆரம்பத்திலிருந்து பெருமுயற்சியான யக்ஞங்களுக்குப் பங்கம் விளைப்பவள் நாரியே. அத்தகைய நாரிதான் நேற்று இரவு பாழாக்கினுள், நான் செய்ய இருந்த மரணயக்ஞத்தை. நடுநிசியில் பெண்புலி ஒன்று மெல்ல வந்தது. கூடவே அதன் மூன்று குட்டிகளும் வந்தன. துப்பாக்கியை எடுத்துச் சுடுவதற்குக் குறி வைத்தேன். அந்த ஸமயம் என் சித்திராங்கி, 'கொல்ல வேண்டாம். ஐயோ பாவம்!' என்று கூவினுள். மனிதர் அரவத்தைக் கேட்டதும், குட்டிகளுடன் புலி ஸவாரி விட்டது. என் சிறக்கி என்ன சொன்னுள் தெரியுமோ? 'பெரிய புலி செத்துப்போனல், பாவம்! அந்தக் குட்டிகளின் கதி என்னவாகும்?' என்ருள்."

சித்திராங்கி: ஆமாம், அந்த நாடோடியைச் சித்தி ராங்கியென்று சொல்லவேண்டும். சித்திராங்கி தன் முகத்தை மறைத்துக்கொண்டாள்.

மோட்டாரில் ஏறிக்கொண்டோம் மூவரும். ஹீருவை நோக்கி, "நான் கல்யாணம் பண்ணிக்கொள்ளப் போகி றேனே; உங்களை அழைக்கவே இவ்வளவு தூரம் வந்தேன்" என்றேன். ஹீரு உல்லாஸக் கூச்சலுடன் குதித்து எழுந்து, "ஜய மங்களம், சுபமங்களம்! வண்டியை நிறுத்தடா கொஞ்சம்" என்றான்.

"ஏண்டா, குதிக்கப் போகிறாயா என்ன?" என்றேன். அப்போது சித்திராங்கி, "நான் ஆடிக்காட்டுறேன், இன்று ராத்திரியே" என்றாள்.

"சுபஸமாசாரம் கேட்டதால் சந்தோஷமாயிருக்கா தாடா? ஜில்லென்று ஏதாவது உள்ளே விடவேண்டாமா?" என்றான் ஹீரு.

நடுவழியிலேயே அவன் 'விஸ்கி'யை எடுத்து விட்டான். "இது நல்லதா, கெட்டதா, நீயே சிந்தித்துப் பார்" என்று அவனைத் தடுத்தேன்.

"சிந்தைக்கும் இந்தச் சிந்தாமணிக்கும் என்ன ஸம் பந்தமென்றால் இருட்டுக்கும் வெளிச்சத்துக்கும் உள்ள ஸம்பந்தந்தான். சிந்தை செய்யும் பக்ஷத்தில் சிந்தாமணி நமக்குக் கிடைக்காது. இந்த மணி எப்போது கிடைத்து விட்டதோ சிந்திப்பதில் பயனில்லை. நான் வருகிறேன் உன் கல்யாணத்திற்கு" என்றான் ஹீரு.

மாளிகையை அடைந்ததும் ஹீரு, "இரு. இதோ இரண்டு நிமிஷத்தில் உடையை மாற்றிக்கொண்டு வருகிறேன். அப்புறம் ஒவ்வொன்றாகச் சொல்லு; நான்

நிதானமாகக் கேட்கிறேன். இந்தப் பாழும் பந்தங்களி லிருந்து விடுபட்டுச் சற்று யதேச்சையாக இருக்க வேண்டும். இல்லாதுபோனல் இந்த உத்ஸவம் நிறை வேருது" என்ருன்.

ஹீரு போய்விட்டான்.

சித்திராங்கி மெல்லிய குரலில், "எங்கே பாபு! எனக்கு ஆசீர்வாதம் பண்ணவில்லேயே நீங்கள்?" என்ருள்.

"என்னவென்று பண்ணச் சொல்லுகிருய்?" என் றேன் மீண்டும்.

தலேயைக் குனிந்துகொண்டு மிருதுவான த்வனியில் பரபரப்புடன், "சிவப்பா ஒரு குழந்தையை நான் பெற்று எடுக்கும்படித்தான்!" என்றதும் அவள் ஓட்டம் பிடித்தாள். பிரமித்துப் போய் அவள் போகும் எழிலேக் கவனித்துக்கொண்டே நின்றேன். அன்னநடை என் பார்களே, அதுதான். நாடோடிகளுக்கு இயற்கையான துரிதமும் வேகமும் அந்த நடையின் நிறையழகில் எங்கோ மறைந்துபோயின.

எனக்குள்ளேயே நான், 'சித்திராங்கி, இது உண் மையானல் நீ பப்ருவாஹனேப்போன்ற ஓர் இளவரசனேப் பெற்றெடுக்க வேண்டும். என் ஆசீர்வாதம் இதுவே' என்று சொல்லிக்கொண்டேன்.

கையில் சாராயப்புட்டியுடன் ஹீரு வந்தான்.

"காட்டு ஜாதியாரோடு பழகி நானும் காட்டுமிராண்டி யாகிவிட்டேன், நரூ! அவர்கள் ரீதியை அநுசரித்து நண்பா, இந்த விருந்துக்கு உன்னே அழைக்கிறேன். இதைக் கண்டு நீ கலங்கிப் போகாதே. தாளமான இந்த மதுவினல் நமக்குள்ள நட்பு தோய்ந்து கட்டியாகிவிடும்,

அதிகக் குளிர்ச்சியால் ஜலம் உறைந்து பனியாவது போல். நீருவும் நீயும் சேர்ந்து கரையாத பனிக்கட்டிபோல் இருக்க வேண்டும். இது என் கோரிக்கை" என்றான்.

ஹீருவின் மூளையில் சீமைச்சரக்கு தன் வேலையை ஆரம்பித்து, அவனை அளவுக்கு மீறிப் பிதற்ற வைத்தது.

"சீக்கிரம் உன் ஸம்ஸாரமும் பெருகும்போலிருக் கிறதே?" என்றேன்.

மதுவின் வேகத்தினால் அவன் தழுதழுத்த குரலில், "சாபமிடாதே என்னை" என்றான்.

மது நிரம்பிய பாத்திரம் அவன் உதட்டருகில் இருந்தும் அவன் உட்கொள்ளும் நினைவை மெல்ல இழந்துகொண்டிருந்தான். அவனையே பார்த்துக்கொண் டிருந்தேன். வெகு நாழிகைக்குப் பிறகே நான், "நாடோடி யிடம் நீ கொண்ட காதல் உனக்குத் திருப்தியை அளிக்க வில்லையா? உனக்கு என்ன அது மானக்கேடாக இருக் கிறதா?" என்றேன்.

"நீ தவறாக எண்ணிக்கொண்டாய். உடைகளைக் கண்டுபிடித்த பிறகுதான் வெட்கம், நாணம் என்பது உண்டாயிற்று. என் வாழ்க்கை பகிரங்கமாக இருக்கிறது. மானம் ஹீனம் எதுவும் அங்கே நுழைவதற்கு இட மில்லையே. மறலியின் உபாஸகன் அல்லவா நான்? என்னில் சிறு அம்சங்கூடப் பிற்காலத்துக்கு வைத்துவிட்டுப் போகேன். முதலற அழிந்து போகவேண்டும்" என்றான்.

"அது இருக்கட்டும். நான் கேட்ட கேள்விக்கு நீ பதில் சொல்லவில்லையேடா?" என்றேன்.

"எதிரே ஓடும் அம்ருத தாரையில் குளித்து நான் மெய்ம்மறந்துவிடுகிறேன். இதற்காக என்னைக் கடிந்து

கொள்ளாதே. மீண்டும் என் நினைவுக்குக் கொண்டுவா, நண்பா" என்றான் ஹீரு.

"சித்திராங்கியின் காதல் உனக்குத் திருப்தி அளிக்கவில்லையா?" என்றேன்.

"இல்லை, அவள் சலித்துப்போய் விட்டாள்" என்றான்.

"இதற்குள்ளா வெறுப்பு?" என்றேன்.

"வேட்கை அடங்கவில்லை. வெறுப்பு மட்டும் வந்து விட்டது. சிவனுடைய கோபாக்கினியால் மன்மதன் துகளாகி, அசரீரியாகிவிட்டான். இதனால் தோல்வி யாருக்கு? சிவனுக்குத்தான்! மலர்க்கணையானுக்கு உடல் போயும் இருமடங்குச் சக்தியைச் சம்பாதித்துக்கொண் டான். அவன் தொடுக்கும் மலர்வாளி ரத்தமாமிசமான உடலைத்தான் வாட்டும். ஆனால் அசரீரியாகிவிடும் மறை முகமான கணை மனத்தை அல்லவோ தாக்குகிறது? வெறியை மூட்டுகிறது? உடலுக்குப் பசி எடுத்தால் அதைத் திருப்தி செய்யலாம். மனத்துள் வேட்கை மூண்டால் இந்த அகிலத்தையும் கொடுத்தாலும் போதாதே! என் மனமும் தீராப்பசியைக் கொண்டது. என்னுடைய அழிவோடுதான் இதுவும் முடிவுறும்."

இதைச் சொல்லும்போது அவனுடைய அழகிய கண்களில் புது ஒளி ஒன்று பரவிற்று.

"ஹீரு, நான் உன்னைக் கேட்டுக்கொள்ளுகிறேன். உன் மனஸைக் கட்டிப் பிடி. விவாகம் பண்ணிக் கொண்டால் இவை யாவும் மறைந்துவிடும்" என்றேன்.

"ஸமுத்திரத்தைக் கடைந்தபோது அம்ருதமும் திரண்டுவந்தது; ஹாலாஹலமும் எழுந்தது. இவை இரண்டும் கலந்தே இந்த ஸுரா ஸ்ருஷ்டியாயிற்று. இதை

உபயோகிக்கத் தேவதைகளுக்கும் அசுரர்களுக்கும் சம உரிமை உண்டு" என்றான்.

கிறுகிறுவென்று அவனுக்குக் குடியின் வெறி ஏறிக் கொண்டே வந்தது.

"நரூ, அந்த நாடோடிச் சிறுக்கிக்கு ஒரு சமயம் இந்தச் சாராயத்தின் மேல் எவ்வளவு ஆவல் இருந்தது? இப்போது ஒரு குழந்தைக்குத் தாயாகப் போகும் மோகத்தால் இதன் பேரில் இருந்த ஆசையெல்லாம் போய் விட்டது அவளுக்கு. முன் போல் கொன்று குவிக்கும் காரியங்களில் தலையிடுவதில்லை அவள். நேற்று அவளை நானே பலாத்காரமாக இழுத்துக்கொண்டு போனேன். அவள் அந்தப் பெண் புலியைச் சுட என்னை விட வில்லையே" என்றான்.

"அதற்காக அவளை வையக்கூடாது; தட்டிக்கொடுக்க வேண்டும். மூன்று குட்டிகளுக்குத் தாயாகிய அந்தப் புலியை அது எவ்வளவு கொடிய ஜந்துவானாலும் கொல் லும்படி விடுமா, சீக்கிரத்தில் தாயாக மாறப் போகும் ஒருத்தியின் உள்ளம்?" என்றேன்.

"எனக்கு என்னவோ அவளிடத்தில் வெறுப்பு ஏற்பட்டுவிட்டதடா! அவள் கர்ப்பிணி என்று அறிந் ததுமே அவளைக் கொன்றுவிட வேண்டுமென்று ஓர் எண்ணம் வந்துவிட்டது."

"சீ - சீ - சீ! அந்தமாதிரி காரியம் செய்யாதே, ஹீரு" என்றேன். அதை நினைத்துக்கொள்ளும்போது பயமா யிருந்தது.

"வர வர அவள் என்னோடு அதிக நாழிகை இருப்ப தில்லை. மறைவாகப் போய்விடுகிறாள். அவளைச் சொல்லு வானேன்? என் தவறுமல்ல. இது பழைய காலத்தி

விருந்தே—'' என்றதும் ஹீரு பேச்சை நிறுத்திவிட்டான். சித்திராங்கி எங்கள் முன் வந்து நின்றாள். கர்ப்பவதி ஆனதால் ரத்தக் குறைவினால் அவள் முகம் வெளுத்து அழகாயிருந்தது.

அவள் ஒரு பத்தினியைப் போலவே ஹீருவைப் பார்த்து, "நாழிகையாகிறதே. சாப்பாடு ஆறிப்போகிறதே. வருகிறதுதானே இரண்டு பேரும்?'' என்றாள். எழுந்திருந்தோம் இருவரும்.

ஸ்நானம் செய்யும்போது, சந்திரநாதன் விஷயத்தை ஹீருவிடம் பிரஸ்தாபிக்கவில்லையே என்ற நினைவு வந்தது. சீக்கிரமாக ஸ்நானத்தை முடித்ததும் ஹீருவைத் தேடிக்கொண்டு சென்றேன். அவன் அறையினுள் நுழைந்ததும் நான் இரண்டடி பின் வாங்கினேன். ஹீருவின் கைக்குள் அடங்கிச் சித்திராங்கி விக்கி விக்கி அழுதுகொண்டிருந்தாள்.

நெஞ்சு விரியப் பொங்கிப் பொங்கி அப்படி அழுதவர்களைப் பார்த்ததில்லை நான். வெகு நேரம் காத்திருந்துவிட்டு நான் திரும்பினேன். அவளுடைய அழுகை நிற்காது போலிருந்தது.

அன்று மத்தியான்னம் நான் மறக்கவில்லை: ஹீருவிடம் சந்திரநாதனைப் பற்றி எடுத்தேன்.

"தானம் வழங்கி, சந்திரநாதனைச் சிறுமைப்படுத்த மாட்டேன். கல்கத்தாவில் என் 'அட்டர்னி'க்குக் கடிதம் போட்டிருக்கிறேன், தொழிற்சாலையையே கிரயத்திற்கு வாங்கிவிடும்படி. ஆனால் சந்திரநாதன் என்னுடன் 'ஒர்க்கிங் பார்ட்னரா'க இருக்கச் சம்மதிப்பானோ மாட்டானோ?'' என்றான் ஹீரு.

"அந்தப் பொறுப்பு என்னுடையது'' என்றேன்.

"நீ போட்டுக்கொண்டால் முடிந்துவிடுகிற கதையா, நரூ? த்வாரகையில் கிருஷ்ணனைப் பார்க்க, கோபயுவகர்கள் பிருந்தாவனத்திலிருந்து சிரமப்பட்டுக் கொண்டுவந்த கனிவகைகளை வாயிற்காப்போன் உள்ளே விடாமல் தடுத்த மாதிரி, அவன் ஏதாவது செய்தால் விரஸமாயிருக்குமே. ஒன்று செய்யேன்: உன் கல்யாணத்திற்கு அவனை மெல்ல வரவழை" என்றான்.

அவன் சொன்ன யுக்தி எனக்குச் சரியெனப் பட்டது. மீராவையும் பையனையும் அழைத்துக்கொண்டு எனக்காக இராது போனாலும் நிருவின் பொருட்டாவது வரவேண்டுமென்று வற்புறுத்தி, சந்திரநாதனுக்கு ஒரு கடிதம் அன்றே எழுதிப்போட்டுவிட்டேன்.

அப்புறம் எந்தச் சிந்தனைக்கும் இடம் கொடுக்கவில்லை என் மனம். உலகமே ஆனந்தவாரிதியில் மிதப்பது போன்ற அபூர்வமான கனவு கண்டேன்.

மறுநாள் காலை எழுந்து பார்த்தபோது, சித்திராங்கியைக் காணவில்லை.

* * *

சித்திராங்கி எங்கேயோ மறைந்துவிட்டாள்.

ஹீரு வெகு நேரம் சிந்தையில் ஆழ்ந்துவிட்டு, "சிறுக்கி......அவள் ஜாதிக்கு ஏற்ற புத்தியைத்தானே கடைசியில் காட்டினாள்! நேற்றே பிடித்தே அவளைக் கவனித்துக்கொண்டு வருகிறேன். ஆதிகாலத்தில் நடந்தது போலவே குழந்தை தனக்கே வேண்டுமென்ற ஆசையினால் போய்விட்டாளே. குழந்தையைக் கொடுத்த தகப்பனை அவள் லக்ஷ்யம் செய்தாளா, பார். என்ன மாய்மாலம் பண்ணினாடா நேற்று! பொய் அழுகை யெல்லாம்

அழுதாள். என்னை விட்டுப் பிரியவேண்டுமேயென்று கடைசியாக அழுதுவிட்டுச் சென்றாள்'' என்றான்.

என் கண்ணெதிரே பழைய யுகத்தில் இருந்த உலகின் ஓர் உருவம் திரண்டுவந்தது. பிரபஞ்ச ஸ்ருஷ்டியில் உலகம் இன்னும் எந்த விதமெல்லாம் மாறுமோ என்பதைக் கற்பனைக் கண்ணால் பார்த்தேன். மாநிலம் செய்யும் தவமே இந்த விசித்திரங்களுக்குக் காரணம். ஹீருவைப் போன்ற ஆருயிர்க் காதலனை மறந்து போன அந்த நாடோடியிடம் அந்தத் தவத்தின் மகிமையைக் கண்டேன். அந்த இயற்கையின் மகளை முதலில் பார்த்தபோதே வியப்புற்றேன். இன்று அவள் செய்த பெரிய ஸாதனையை மெச்சிப் பாராட்டுகிறேன்.

ஹீருவும் நீண்ட மூச்செறிந்து, "அவளால் நான் விடுதலை பெற்றேன்'' என்றான்.

அன்றே நான் அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டேன்.

* * *

எனக்கும் நிருவுக்கும் விவாகமாயிற்று.

நிருவின் தாயே அவளைக் கன்னியாதானம் செய்து கொடுத்தாள்; நிசாநாத பாபு வர ஸாத்தியப்படாது போயிற்று. ஹீருவும் சந்திரநாதனும் வருவார்களென்று எதிர்பார்த்தேன். ஆனால் ஒருவர்கூட வரவில்லை.

சந்திரநாதன் ஒரு ரெஜிஸ்டர் கடிதம் அனுப்பியிருந்தான். அதனுள் ஆயிரம் ரூபாய்க்கு ஒரு 'செக்' இருந்தது. மற்றொரு கடுதாசியில், "நிருவுக்கு என் ஆசீர்வாதம்'' என்று எழுதியிருந்தது.

ஹீரு கடிதம் போடவில்லை; விவாகதினத்தன்று அவனுடைய மானேஜர் சில நகைகளும், சாமான்களும்

கொண்டுவந்து எங்களுக்கு ஓதி இட்டார். ஹீரு கல்கத்தாவிலிருந்து இவை யாவும் அனுப்பிவைத்தான்.

விவாகமானதுமே நிருபமாவை அழைத்துக்கொண்டு நிசாநாத பாபுவை ஸேவிக்கச் சென்றேன். நிருவின் அன்னை மட்டும் வரவில்லை. "நான் வந்தால் அவருடைய தபஸுக்கு இடையூருக இருக்கும், நரு! இன்றைக்கு மட்டுமில்லை. நான் செத்துப் போய்விட்டால்கூட என் பாழும் முகத்தைக்கூட அவருக்குக் காட்டவேண்டாம் அப்பா!" என்ருள்.

அதற்கு மேல் நான் வற்புறுத்தவில்லை.

ஐயோ நாரீ ஜன்மமே! ஐயோ, உனக்குள்ள ரோஷந்தான் என்ன!

நிசாநாத பாபு கண்களில் நீர் தோய எங்களை ஆசீர் வதித்தார். வரும்போது திரும்பிப் பார்க்கையில் அவர் தம் குடிலின் வாயிலில் நின்று எங்களையே கண் கொட்டா மல் நோக்கிக்கொண்டிருந்தார்.

நிருபமா அழுத அழுகைக்குக் கங்கில்லை, கரையில்லை.

* * *

திடீரென ஒரு நாள் ஹீரு வந்து நின்ருன். வந்த வுடன் என்னை, "உன் ஸம்ஸாரம் எங்கேடா?" என்று கேட்டான். அவனை உள்ளே அழைத்துக்கொண்டு போனேன்.

நிருபமா அவனுக்கு நமஸ்காரம் பண்ணினுள். ஹீரு வின் மனம் சஞ்சலப்பட்டது.

"அண்ணு, ஜலமாவது சாப்பிட்டுவிட்டுப் போனுல் தான் நன்ருக இருக்கும்" என்று உறவு கொண்டாடி உபசரித்தாள்.

"அதற்கென்ன அம்மா, ஜில்லென்று ஒரு டம்ளர் ஜலம்; அதற்குமேல் வேண்டாம்" என்றான் ஹீரு.

"நான் விடை பெற்றுக்கொள்ளத்தான் வந்தேன்."

"விடை எதற்கு?" என்று வியப்புற்று வினவினேன்.

"என் ஆயுள் அஸ்தமனமாகும் நிலைக்கு வந்து விட்டது. மேல் தசையை ஒரு தரம் எட்டிப் பார்க்காது போனால் முடியாது. ஐரோப்பாவுக்குக் கிளம்புகிறேன். டாக்டர்கள் எனக்கு 'டி. பி.' என்று சந்தேகப்படு கிறார்கள்" என்றான்.

"டி. பி. யா?"

"ஆமாம். சந்திரநாதனிடம் போய்க் காரியத்தை முடித்துக்கொள்" என்றான்.

அவனைப் பார்த்ததும் எனக்கு வேதனை மூண்டது. "ஹீரு, சற்று மிதமாக இருக்கவேண்டும்" என்றேன்.

ஹஹ்ஹாவென்று சிரித்துவிட்டு,

"மரத்தினுள்ளே அடங்கியதீ மலர்மலிய ஆக்குங்காண்;
மரத்தினொடு நீறாகி மாய்ந்தொழியும் வெளிப்படினே.

என் உள்ளத்தில் நெருப்புக் கனிந்துகொண்டிருந்தது. வெட்கமின்றி அதன் ஜ்வாலை வெளிப்படுகிறது. நான் சாம்பராகப் போகவேண்டியதுதான். அது தீய்ந்து அணைகிற கனலா என்ன?" என்றான்.

"இல்லை, 'ஸ்விட்ஸர்லண்டு'க்குப் போனால் உடம்பு கட்டாயம் சொஸ்தமாகும், பாரேன். நல்ல வைத்திய னுக்குக் காட்டு" என்றேன்.

அவன் மறுபடியும் இடியிடியென்று நகைத்தான்.

"விதவிதமான நாரியர்தாம் என் நோயைப் போக்கக் கூடியவர்கள். மேல் நாட்டை ஜயித்து வரச் செல்லு

கிறேன். நான் வரட்டுமா, நரூ?'' என்றதும் எழுந்து போய்விட்டான்.

அவன் செல்வதையே பார்த்துக்கொண்டு திகைத்து நின்றேன்.

அவனுடைய பெரிய மோட்டார் வண்டி பின்னல் தூசைக் கிளப்பிப் புகைப் படலத்தை எழுப்பிக் கொண்டே ஜனத்திரளிடையே மறைந்து போயிற்று.

நீண்ட நாழிகை வீண் சிந்தனைக்கெல்லாம் இடம் கொடுத்துவிட்டு, சந்திரநாதனை நினைத்துக்கொண்டேன். அவனும் ஒரு பைத்தியக்காரன்; வாழ்நாள் முழுதும் கானலை மெய்யென்றெண்ணி அதை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறான்!

## அத்தியாயம் 18

அடுத்த நாளே சந்திரநாதனைப் பார்க்கப் புறப்பட்டேன். நான் ஸ்டேஷனில் இறங்கும்போது நன்றாக இருட்டிவிட்டது. ஒரு மாட்டு வண்டியை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு ஒரு பாறைமீது உட்கார்ந்தேன். நிலவுக்காகக் காத்திருக்க வேண்டியதாயிற்று. 'கிராண்ட் கார்ட் லைனி'ல் வண்டிகள் போக்குவரத்திற்கு ஒரு முடிவே இல்லை. உணவுப்பொருள்கள், சீமைக்கரி, விறகு, 'பயர்-க்ளே' - இன்னும் எவ்வளவோ சாமான்களை ஏற்றிச் செல்லும் நீளமான கூட்ஸ் வண்டித் தொடர்கள் தங்கு தடையின்றிச் சென்றுகொண்டிருந்தன. அவை செல்லும் வேகத்தால் பூமி கிடுகிடுவென்று அதிர்ந்தது. எஞ்ஜினின் கீச்சென்ற சீட்டி துப்பாக்கியின் வெடியைப் போல, இரவின் அமைதியைத் துளைத்து எதிரொலித்தது. தந்திக் கம்பங்களின்மீது காற்று மோதுவதால் 'சொய்' என்ற தொனி இடைவிடாது கேட்டுக்கொண்டே இருந்தது. எனக்கு எதிரிலும் தொலைவிலும் வரிசையாக ஸிக்னல் விளக்கின் சிவப்பு ஒளி அசையாமல் ஜொலித்துக் கொண்டிருந்தது. பின்னால் திரும்பி நோக்கினேன். அங்கும் அதுதான். யாரோ இமைக்காத சிவந்த கண்களுடன் எச்சரிக்கை செய்வது போன்ற பிரமையைத் தந்தது.

வண்டிக்காரன் என் சிந்தனையின் நடுவே புகுந்து, "பாபு, நிலா வந்துவிட்டது. அதோ பாருங்கள்: மரத்தின் உச்சியில் தெரிகிறது" என்றான்.

போய் வண்டியில் உட்கார்ந்தேன். ஆடி அசைந்து கொண்டே வண்டி சென்றது. வழியில் ஓர் இடத்தில் நிலக்கரி வறண்டுவிட்ட சுரங்கத்தின் நெடிய புகைப் போக்கி, மெல்ல அலரும் அந்திலவொளியில், அதிசய மான தோற்றத்தைக் கொண்டது. யாருடைய கூர் உகிரோ நிலமடந்தையின் மார்பில் ஆழமாகப் பதிந்து விட்டது போன்று விளங்கியது. ரத்தவெறி பிடித்த எந்த அரக்கனுடையதோ? அவ்விடத்தினின்று என் னுடைய பார்வை, எதிரே விரியும் பெருவெளியின் மீது படர்ந்தது. தென்கிழக்கு மூலையில், திசை முடிவில் நெருப்பின் ஜ்வாலை தென்பட்டது. ஆகாயமும் அதனால் செவேலென்று இருந்தது. வண்டிக்காரனை, "அது என்ன வெளிச்சம் அங்கே?" என்று கேட்டேன்.

"அது வெளிச்சமில்லேங்கோ, மலைச்சரிவில் எரியும் காட்டுத்தீ" என்றான்.

"காட்டுத்தீயா!" அந்த அபூர்வமான காட்சியையே கண் கொட்டாமல் கவனித்தேன்.

வண்டிக்காரன் தன் பாட்டிற்குச் சொல்லிக்கொண்டே இருந்தான்: "அதுவா, ராவாப் பகலா எரியுது; ராவாப் பகலா எரியுதே. காட்டையே நாசமாக்கிய பிறகுதான் அடங்கும். ராவாப் பகலா எரியுது."

வண்டி, பெரிய ரஸ்தாவிலிருந்து வேறு கிளைப் பாதையில் திரும்பியது. காட்டுத்தீ பின்னால் மறைந்து விட்டது. இது என்ன! சந்திரநாதனுடைய தொழிற் சாலை எங்கே? இங்கு இருந்ததே...? அது கக்கும் நெருப்புக் கொழுந்தைக் காணோமே? பெருகியோடும் அந்திலா வெளிச்சத்தில் இலையடர்ந்த மரத்தினிடையே இருள் ஒதுங்கி இருந்தது. தூமகேதுவென, சந்திரநாத

னுடைய வாழ்வில் தோன்றிய அந்தப் புகைக்கொடி எங்கே? சிம்னிகளின் மூலம் வெளியே நீட்டும் அந்த நெருப்பின் நாக்குகள் மறைந்துபோன மாயம் என்னே? எனக்குத் திடுக்கிட்டது.

என்னுடைய திகில் பொய்யாகவில்லை. போய்ப் பார்த்தேன். அந்தப் பெரிய தொழிற்சாலை, வீழ்ச்சி யுற்ற அரக்கர பதியைப்போல் ஒலி அடங்கி இருந்தது. யந்திரங்கள் யாவும் இந்திரனின் இடியேற்றால் மாய்ந்த விருத்திராஸுரனின் கருகிய சடலமென வீழ்ந்து கிடந்தன. சந்திரநாதன் என்ன கதியானான்?

அவன் வாழ்ந்திருந்த மணிமாடத்துள் இப்போது அந்தகாரமே குடி புகுந்திருந்தது. சந்திரநாதனும் இல்லை, மீராவும் இல்லை.

கடைசியில் எப்படியோ ஹீருவின் அட்டர்னியைக் கண்டுபிடித்தேன்.

அவர் என்னிடம் கூறியதாவது: "நான் வருவதற் குள் சந்திரநாதன் தொழிற்சாலையை மார்வாடிக்கு விற்று விட்டு எங்கோ போய்விட்டான். இன்ன இடத்திற்குப் போனானென்பது தெரியவில்லை. அதிசயமான மனுஷ்யன்! அவன் போகும்போது யாரோ கேட்டதற்குக் கொஞ்ச நாள் அஞ்ஞாத வாஸம் செய்யப் போகிறேனென்று சொன்னானாம்."

நான் நிலைத்துப்போய் மேலே ஆகாயத்தை நோக்கித் துருவிப் பார்த்தேன். எங்கே, அந்தக் காலபுருஷ நக்ஷத் திரம்?

சந்திரநாதன், மீரா; ஹீரு, நாடோடி; இவர்களெல் லாரும் யார்? இவர்களெல்லாரும் எங்கே மறைந்து போனார்கள்?

இவர்கள் இதுவரை நடமாடிய என் மனத்திரையில் இதென்ன, எலும்பும் தோலுமாக அசையாமல் ஓர் உருவம் தோன்றுகிறதே? அது யார்?

ஞாபகம் வந்துவிட்டது.

இரண்டொரு வருஷங்கள் சென்ற பிறகு எனக்கு ஒரு தந்தி வந்தது: "நிசாநாத பாபு மரணத் தறுவாயில், நிருவுடன் வருக."

தாமதம் செய்யாமல் நிருவைக் கூட்டிக்கொண்டு கிளம்பினேன்.

நிசாநாத பாபு தாம் பிடித்ததைச் சாதித்துவிட்டார். அந்தக் கடினமான விரதத்தை எழுத்து விடாமல் அனுஷ்டித்தாகி விட்டது. ஹவிஸ் அன்னம் ஒரு வருஷம்; பழமும் பாலும் அடுத்த வருஷம். நீரே அருந்தி மூன்றாவது ஆண்டையும் கழித்தார். இப்போது காற்றைப் புசிக்கும் பெரு நோன்பையும் ஆரம்பித்துவிட்டார்.

நிருபமா விம்மி விம்மி அழத் தொடங்கினாள். நான் அவளைச் சமாதானப்படுத்தவில்லை. அழுதால்தான் மனத்திலுள்ள துயர் விலகும். அந்தி விளக்கு வைப்பதற்கு முன்னேயே ஊரை அடைந்தோம்.

மயானத்திற்குச் சென்றோம். அது சுடுகாடாக இல்லை; பெரிய ஊராகவே இருந்தது. நிசாநாத பாபுவின் பெருவேட்கையை வளைத்துக்கொண்டு மனிதர்களின் பண வேட்கை கடைகளின் வரிசையில் உருக்கொண்டது. ஒரே ஜன நெருக்கம்.

எங்கள் ஊர்க் கடைக்காரனை தர்மதாஸ் என்னைக் கண்டதும் நமஸ்காரம் செய்து, ஸந்தோஷம் பொங்க, "வந்துவிட்டீங்களா? அந்தத் திவ்யக் காட்சியைப்பார்க்கக்

கொடுத்து வைக்கவேண்டும், ஸ்வாமி. ஓர் உத்தரணி ஜலங்கூட உள்ளே போகவில்லை. யாருடைய கைஜலத்திற்காகக் காத்துக்கொண் டிருக்கிறதோ அந்த மஹாப் பிராணன்? என்ன பளபளப்பு, ஜோதி ஸ்வாமி, அந்தத் தேகத்திலே!" என்றான்.

கிஜு கிஜுவென்று போகும் அந்த ஜனத்திரளைப் பார்த்ததும் பிரமித்துப் போனேன்.

தர்மதாஸ் என்னை நோக்கி, "இதென்ன ஸ்வாமி, கும்பல்! போகப் போகப் பாருங்கோ: இந்த இடத்தில் நிற்கவே முடியாது, அவ்வளவு நெருக்கம். கடைக்காரர்கள் பாடு வேட்டைதான். என்ன விலையாகிறது, என்ன செலவாகிறது! போங்கோ. உள்ளே வாங்கோ, இவ்வளவு காசு என் ஜன்மத்தில் நான் குவித்ததில்லை. மிட்டாய்த் தினுசு மலைபோல் குவிந்திருக்கிறது. இரண்டே நிமிஷந்தான்; இத்தனையும் மறைந்து போய்விடும்" என்றான்.

கும்பலை விலக்கிக்கொண்டும் இடிபட்டுக்கொண்டும் உள்ளே நுழைந்து குடிலுக்கு வெளியே வந்து நின்றேன். அந்தக் குடில் எங்கே? நான் நின்ற இடம் மயானமா என்று சந்தேகம் வந்துவிட்டது. அங்கே புஷ்பங்களாலேயே அலங்காரம் செய்யப்பட்ட விசித்திர மண்டபமொன்றைக் கண்டேன். அந்தச் சிறு மண் குடிசையும் இருந்தது. அதைச் சுற்றி ஒரு கோயிலை எழுப்பிவிட்டார்கள்.

உட்புறம் சென்றேன். எலும்பெடுத்துச் சங்கு போல் ஒளி வீசும் யாக்கையினரான நிசாநாத பாபு சலனமற்று விழி திறவாமல் மஹா நிஷ்டையில் லயித்திருந்தார். உயிர் இருப்பதற்கு அடையாளமாக இதயம் அடித்துக் கொள்வது தெரிந்தது. அவருக்குச் சற்றுத் தொலைவில்

அவருடைய மனைவி, கணவனையே வியப்புறு நோக்குடன் கண்டு களித்தாள். அவள் சற்றுத் தாழ்வான இடத்தில் தான் இருந்தாள். நிருபமா அன்னையைக் கண்டவுடன் அவள் மடியில் விழுந்து அழுதாள். சுற்றிலும் இருப்பவர்கள், "அழாதே அம்மா! அழுவார்களோ?" என்றெல்லாம் கூறினர்.

யாரோ ஒருவர், "தேவதா ஸ்வரூபியான இந்தத் தகப்பனாரைப் பெற்றிருக்கிறாய். இந்தப் பாக்கியம் யாருக்கு அம்மா இருக்கிறது? சே, அழாதே. இதனால் அவருடைய தவந்தான் கலையும்" என்றார்.

என்னைப் பார்த்ததும் நிருவின் தாய், துயர் தோய்ந்த முகத்துடன் வரவேற்றாள். அவளுடைய கண்களிலிருந்து பலபலவென்று கண்ணீர்த் துளிகள் கீழே சிந்தின.

"ஏதாவது கொடுத்துப் பார்த்தீர்களா உள்ளுக்கு?" என்றேன்.

மழுங்கிய சிரிப்புடன், "பகவான்தான் வந்து அதைச் செய்யவேண்டும். நான் அவரைத் தொடக் கூடாதே" என்றாள்.

அதற்கு மேல் நான் அவளை ஒன்றும் விசாரிக்கவில்லை. ஒரே நிலையாக அந்த அற்புதமான மனுஷ்யரைப் பார்த்துக் கொண்டு நின்றேன். அவருடைய உதடுகள் அசைவன போல் எனக்குத் தோன்றின. அவர் ஏதோ பேச யத்தனிப்பதை உணர்ந்தேன்.

நிருவின் தாயும் அதைக் கவனித்தாள்; "நினைவு இருக்கிறது" என்றாள்.

நான் சற்று முன்னே சென்று நிசாநாத பாபுவின் சமீபமாக உட்கார்ந்துகொண்டேன். அன்று முழுதும்

ஊன்றிக் கவனித்துக் கேட்டதில், அவர் உச்சரிப்பது என்னவென்று தெரிந்தது. மிகவும் பலஹீனமான குரலில், புரிபடாத விதமாய், தம் இஷ்ட தெய்வத்தின் பீஜாக்ஷரத்தையே சொல்லிக்கொண்டிருந்தார்.

மறுநாள் நல்ல புண்ய வேளையில் நிசாநாத பாபுவின் இதயம் நின்றுவிட்டது. ஆனல் யாருமே நம்பவில்லை, அவர் இறந்திருப்பாரென்று. அந்தச் சரீரம் அன்று முழுதும் வாடாமல் அதே நிலையில் இருந்தது. மறுநாள் ஸாயங்காலந்தான் பெருத்த ஆடம்பரத்துடன் அவரை ஸமாதி பண்ணினர்கள்.

பெரும் பயணமாகச் செல்லும் அவரைத் தரிசிக்க வந்த கூட்டத்தை என்ன என்று சொல்லுவேன்? கடைக் காரர்களெல்லோரும் அந்த மஹானை வழி அனுப்ப ஜயகோஷமிட்டுக்கொண்டே பின்னல் சென்றனர். பெண்டிரும் இந்தக் குழப்பத்தில் தம் பங்கையும் செலுத்தினர். பக்தி வெள்ளம் எல்லார் மனத்திலும் கரை புரண்டோடியது. அந்த ஸமயம் இந்தப் பூவுலகு என் கண்முன் முற்றும் புதுமையான தோற்றத்துடன் எழுந்தது. தேவாலயம், மசூதி, மாதாகோயில், ஸ்தூபம், பள்ளி வாசல், வானைச் சுட்டும் இவற்றின் சிகரங்கள், நெருங்கி வளரும் மலர் தலை உலகம் - யுகம் யுகமாக மனித கோடிகள், கைகூப்பி, மேல் நோக்கி, அந்தர் மார்க்கத்தில் செல்லும் விசித்திர யாத்திரையைக் கவனித்துக்கொண்டு மௌனமாக நிற்கும் காட்சி!

## அத்தியாயம் 19

ஒவ்வோர் இதழாக எனது நினைவுக் கோவையைப் பிரித்தாகி விட்டது. சந்திரநாதன், மீரா, ஹீரு, தொம் பரவ மடந்தை - இவர்களெல்லாரும் எங்கேயோ? என் சொந்த அலுவல் எனக்கு. உலகத்தோடு ஒத்து என் வாழ்க்கையை நடத்திக்கொண்டிருந்தேன். என்னுடைய நக்ஷத்திரமும் படுக்கும் நிலைக்கு வந்துவிட்டது. இலக்கிய உலகில் இறங்கிவிட்டது. யதேச்சையாக ஸஞ்சரிப்பது இனிமேல் ஏது? புகழுக்கு ஒரு குறைவில்லை; செல்வம், சீர், சென்றவிடமெல்லாம் எனக்குச் சிறப்பான வரவேற்புத்தான். கடவுள் என்னுடைய கணக்கு வழக்குகளைப் பார்த்து ஒரு முடிவு கட்டிவிட்டார். கணக்குப் பார்த்ததில் எனக்கு வரும்படியே அதிகம். பாக்கி இராததால், கணக்குப் பைசலாகிவிட்டது.

போன வருஷம், ஹவ்ராவில் ஒரு சபையார் என்னை ஒரு கூட்டத்தில் பேசும்படி அழைத்திருந்தனர். என் காரியத்தை முடித்துக்கொண்டு வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தேன். அப்போது மணி ஐந்தரை இருக்கும். லால்திகியருகில் வரும்போது என் வண்டியின் வேகம் மட்டுப்பட்டது. டிராம், பஸ், மோட்டார், ரிக்ஷா, வீட்டை நோக்கி ஆவலாகச் செல்லும் உத்தியோகஸ்தர்கள் - இவர்களுடைய கூட்டத்தின் மத்தியில் புகுந்து வண்டி ஊர்ந்து சென்றது. ராயிடர்ஸ் கட்டிடத்தின் எதிரே, நடைபாதையில் திடீரெனச் சந்திரநாதனைக் கண்டேன். வண்டியை ஒரு புறமாக ஒதுக்கச்

சொன்னேன். இறங்கி வந்து சந்திரநாதனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு, "சந்திரநாத்" என்றேன்.

"நருவா?" என்றான் அவனும்.

"ஆமாம், இங்கே நிற்பானேன்? வா, வண்டியில் ஏறி வீட்டுக்குப் போகலாம். நிருவை வந்து பார்" என்றேன்.

சற்று யோசனை செய்ததும் அவன், "நான் அஞ்ஞாதவாஸத்தில் இருக்கிறேனே. இன்னும் நான் ஒரு நிலைக்கு வரவில்லை. உன் வீட்டுக்கா வரச் சொல்லுகிறாய்? சரி, நிருவைப் பார்க்க வேண்டாமா?" என்றான். வண்யில் ஏறிக்கொண்டதுமே நான் அவனை, "மீரா எப்படி இருக்கிறாள்?" என்று விசாரிக்கத் தொடங்கினேன்.

"நடுவில் அவளுக்குப் புத்தி மாறாட்டம் ஏற்பட்டிருந்தது. உனக்குத்தான் தெரியுமே, அது எப்படி ஆரம்பித்ததென்று."

"அதுவே நான் உங்களையெல்லாம் கடைசியாகப் பார்த்தது" என்றேன்.

"அப்புறம் கொஞ்ச நாள் வரை வெறி பிடித்த நிலையிலேயே இருந்தாள். எப்போது பார்த்தாலும் குதித்துக்கொண்டே இருப்பாள். வாயைத் திறந்து ஒரு வார்த்தை வராது. சிற்சில சமயம் அழுவாள்; அதுவும் மறைவில்தான், தனக்குள்ளேயே" என்றான்.

"இப்போது எப்படி இருக்கிறது?" என்றேன் விசனத்துடன்.

"இப்போதா? எவ்வளவோ மேல் என்று சொல்ல வேண்டும். முன்போல் குதிப்பதில்லை; அழுவதில்லை. புத்தி ஸ்வாதீனத்தில் இராது போனாலும், ஒரு மாதிரி

அமைதியுற்று இருக்கிறுள். பைத்தியக்கார விடுதிக்கு அனுப்பலாமென்று எண்ணினேன். இவளையே கவனித்துக் கொண்டிருந்தால் நான் போகிற கதி? தொழிற்சாலையை விற்றுத் தொலைத்தேன். மற்றென்று ஸ்தாபனம் செய்ய எனக்கும் ஒருவிதப் பித்தம் பிடித்திருந்தது. அந்த ஸமயந்தான் மீராவுக்கும் மும்முரம். என்னுல் சகிக்க முடியவில்லை. கடைசியாகக் கல்கத்தாவுக்கு வந்தேன். என் கையிலிருந்ததெல்லாம் நாலைந்து ஆயிரம் ரூபாய்க் குள்தான். அதுவே என்னுடைய ஆஸ்தி. மந்திரத்தால் உண்டாக்குவது போல அந்தத் தொகையைக் கொண்டு தான் பெரிய விஷயத்தை ஸாதிக்க வேண்டும். ஷேர் மார்க்கெட்டின் நிலவரங்களைக் கவனித்துக் கொண்டிருக் கிறேன். இங்கேதான் இருக்கிறேன் கொஞ்ச நாளாக. மார்க்கெட்டைக் கவனித்ததில் ஆறு மாஸ காலம் வீணுகக் கழிந்தது. தினசரிப் பத்திரிகைகள் மூலமாக இந்தச் செய்தியைத் திரட்டிக்கொண்டிருந்தேன். நடு நடுவே எப்போதாவது நேரில் விசாரித்தும் வருவேன். மீராவை விட்டு ரொம்ப நாழிகை நான் பிரிந்திருப் பதில்லை. நான் அவளை அருகிலிருந்து கட்டிக் காத்த தாலும், ஏதோ ஒரு சிகித்ஸை செய்ததன் விளைவாலும் அவளுக்கு வெகுவாய்க் குணமேற்பட்டது. இப்போ தெல்லாம் வீட்டுக் காரியங்களை ஒரு யந்திரம்போலவே செய்கிறுள். ஆனல் சித்தப் பிரமை மட்டும் நீங்கவில்லை" என்றுன்.

வண்டி எஸ்ப்ளனேட் வழியாகச் சென்றது. மீராவை நோக்கியே என் சிந்தனை ஓடிற்று.

"வண்டியை நிறுத்தச் சொல்லடா, நளு" என்றுன் சந்திரநாதன்.

“எதற்கு?” என்றேன்.

“எனக்கு என்னவோ கூச்சமாயிருக்கிறது. நான் இப்படியே திரும்பிப் போகிறேன், நரூ! எனக்கு உன் பேரில் ஒரு துவேஷமும் இல்லை. இருந்தும் எனக்குத் தலையிறக்கமாயிருக்கிறது. நாலு பேர் உன் வீட்டில் இருப்பார்கள். என்னை யாரென்று கேட்டால் பழக்கப் படுத்திக்கொள்ள எனக்கு என்ன பவிஷு இருக்கிறது? உன்னுடைய நண்பன் யாரோ என்றுதானே சொல்ல வேண்டி வரும்?” என்றான்.

அவனுடைய கையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு நான், “அப்படி உனக்கு அஸமாதானமானால் வா போகலாம். நானே உன் வீட்டுக்கு வருகிறேன்” என்றேன்.

சற்று யோசித்துவிட்டு அவன், “பேஷா, வண்டியை அனுப்பிவிடு. டிராமில் ஏறிப் போவோம். உனக்கு நானே டிக்கட் வாங்குவேன்” என்றான்.

நான் அதற்கு உடன்பட்டேன். வண்டியை அனுப்பிவிட்டு. “நியூ மார்க்கெட்டிற்குப் போகலாம். புஷ்பம் கொஞ்சம் வாங்கிக் கொள்ள வேண்டும்” என்றேன்.

அவன் சிரித்துவிட்டு, “மீராவுக்கா? சரி. போகலாம்” என்றான்.

நடந்துகொண்டே அவனை வினவலானேன்: “உன் சொந்த அலுவல் எவ்வளவு தூரத்தில் இருக்கிறது?”

“அந்த விஷயம் லாட்டரிச் சீட்டு மாதிரிதான். இந்த மாதிரிக் காரியங்களில் எனக்குப் பிடித்தமே இல்லை. என் ஜன்மத்தில் நான் லாட்டரிச் சீட்டை வாங்கிப்

பணம் குவிக்கும் ஆகாயக் கோட்டையைக் கட்டியதில்லை. சிரமப்பட்டுச் சேர்ப்பதில்தான் உத்ஸாகம் எனக்கு. *'க்ரோத் ஆப் தி ஸாயிலி'ல் வரும் உழைப்பே நான் வாழ்க்கையில் காணும் கனவு. ஆனால் அந்த நாள் வருமோ? என் ஆயுள் பாதிக்கு மேல் ஆகிவிட்டது. ஆனால் புதுசாக ஓர் இரும்பு ஆலையை நிர்மாணிக்க வேண்டுமென்ற வேட்கை மட்டும் இருக்கிறது. அதற்கு ஏராளமான மூலதனம் தேவை. எந்த விதத்தில் கிடைக்குமோ அறியேன்" என்றான்.

சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, அவன் மீண்டும் பேசலானான்: "எனக்கு வரவரப் பலஹீனமே ஏற்பட்டுவிட்டது. இந்த ஜோலி இனிமேல் எதற்கென்று சிற்சில சமயம் நினைத்துக்கொள்வேன். ஆசை மட்டும் இருக்கிறது, செல்வத்தின் குன்று ஏறி வாழவேண்டு மென்று. ஆனால், அது கைகூடுகிற நாளெல்லாம் போய் விட்டதே."

மார்க்கெட்டிற்கு வந்தோம். பூக்கடையொன்றில் பொறுக்கி எடுத்த செந்நிற மலர்களை ஓர் அழகிய புட்டிலில் வைத்துக்கொண்டிருந்தேன். உடனே மீரா வின் பிள்ளையின் கவனம் வரவே அவனுக்கு ஏதாவது விளையாட்டுச் சாமான் வாங்கிக்கொண்டு போக வேண்டு மென்று எனக்குத் தோன்றியது. அதைச் சொல்ல, சந்திரநாதன் பக்கமாகத் திரும்பினேன். சந்திரநாதன் எங்கே? அந்த இடத்தில் அவன் இல்லை. ஆகா! நழுவி விட்டான். தேடினாலும் அவனைக் கண்டு பிடிக்க முடியா

---

* Knut Hamsun என்னும் நார்வீஜிய ஆசிரியர் எழுதிய நூல்; நோபல் பரிசு பெற்றது.

தென்று தெரிந்துபோயிற்று. இருந்தும் சுற்றுப் புறமெங்கும் ஆராய்ந்தேன். மறைந்தவன் மறைந்தவனே.

பெருமூச்செறிந்து நான் வீட்டை நோக்கிப் புறப்பட்டேன். அத்தனை புஷ்பத்தையும் என்ன செய்வது? எனக்கு ஒன்றும் புரியவில்லை. வழியில் ஸர்க்குலர் ரோட்டிலுள்ள ஸமாதி பூமி திடீரென என் கண்ணுக்குப் பட்டது. என்னவோ தோன்றிற்று எனக்கு. அதனுள் நுழைந்து எனக்கு எதிர்ப்பட்ட ஒரு ஸமாதிக் கல்லின்மேல் அந்தச் செந்நிற மலர்களை யெல்லாம் அலங்காரமாக வைத்தேன்.

சந்திரநாதனுடையதல்ல, ஹீருவினுடையதுமல்ல; நான் அந்தச் சமாதியை மீராவினுடையதாகவே பாவித்துக்கொண்டேன். சந்திரநாதனுக்கும் ஹீருவுக்கும் இதற்குள் ஸமாதியைக் கட்ட என் மனம் இடங் கொடுக்கவில்லை. அவர்களைப்பற்றி நான் கடைசியாக நினைத்துக்கொள்ளும்போது என் மனக்கண்முன் என்ன தெரிகிறது - சுடலைத் தீ, அந்தச் சால வனத்தைச் சாம்பராக்கும் பெருந் தீ திகு திகுவென்று சுடர்விட்டு எரியும் காட்சிதான்!

முற்றும்



PRINTED AT THE MADRAS LAW JOURNAL PRESS, MYLAPORE, MADRAS.